# படித்திருக்கிறீர்களா? I

க. நா. சுப்ரமணியம்

க. நா. சுப்ரமணியம்

அமுத நிலையம் (பிரைவேட்) லிமிடெட்

இதே பதிப்பு தமிழ் இலக்கியத்தில் இருக்கிறது.
இது ஆசிரியருக்கு.

# முன்னுரை

தமிழில் இலக்கிய விமரிசனக் கலை அப்படி ஒன்றும் பிரமாதமாக இந்த ஐம்பது அறுபது வருஷத்திய புது மலர்ச்சியில் வளம் பெற்றுவிடவில்லை என்பது வெளிப்படை. இதற்குக் காரணங்கள் பல கூறலாம். முக்கியமாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால் இலக்கியத்தில் தேர்ச்சியுள்ளவர்கள் பழசைத் தாண்டி புதுசு பக்கம் வர மறுத்ததும், புதுசை மட்டும் அறிந்தவர்கள் பழசின் பக்கமே போக மறுத்ததும்தான் என்று சொல்லவேண்டும். சிறிது சிறிதாகத்தான் என்றாலும் இந்த நிலைமை ஓரளவுக்கு மாறிக்கொண்டு வருகிறது என்றும் சொல்லலாம். டி, கே. சி, வையாபுரிப் பிள்ளை, புதுமைப்பித்தன், சிதம்பர ரகுநாதன் முதலியவர்கள் ஒரு தனி மனிதனின் நோக்குடன் அவ்வப்போது இலக்கிய விமரிசனம் செய்து வந்திருக்கிறார்கள். வேறு ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்போது உ. வே. சாமிநாதையர், கி. வா. ஜகந்நாதன், பி. ஸ்ரீ. ஆசார்யா, மு. வரதராஜனார், அ. ச. ஞானசம்பந்தம் முதலியவர்கள் பொதுவான ஒரு நோக்குடன், ஒரு பாண்டித்தியத்துடன் இலக்கிய விமரிசனம் செய்ய முற்பட்டு இந்தக் காலத்தில் செய்து வந்திருக்கிறார்கள்.

ஆனால் இதையெல்லாம் தனியாகவோ சேர்த்தோ பார்க்கும்போது இலக்கிய விமரிசன வளம் போதுமானது இருப்பதாகச் சொல்லமுடியாது. இதுபோல தனி மனிதர்கள், பண்டிதர்கள், மற்றும் இலக்கிய கர்த்தாக்கள் முதலானோர் ஆயிரம் பேர்வழிகளாவது அபிப்பிராயங்கள் சொல்லி முடித்த பிறகுதான் இலக்கிய விமரிசன வளம் ஏற்பட்டுவிட்டதாகக் கருதமுடியும். ஒவ்வொன்றும் ஒவ்வொரு தினுசாகவும் இருக்கவேண்டும்—தனித்வம் பெற்றிருக்க வேண்டும்—அது

மட்டுமல்ல; ஆரம்ப காலத்தில் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகவும் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் இலக்கிய விமரிசனம் வளம் பெற்றதாகக் கருத முடியும். இது எனக்குப் பிடிக்கிறது என்று சொல்கிறபோது எனக்கு என்பதில் தான் சாதாரணமாக அழுத்தம் விழுகிறது. இந்த எனக்கு என்பவனின் பயிற்சி, தேர்ச்சி, இலக்கிய ரஸனை எல்லாவற்றையும் கொண்டு அவனுடைய அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளலாம், ஒதுக்கலாம். ஆனால் ஏற்றுக் கொண்டாலும், ஒதுக்கினாலும், ஒரு மனிதனின் அபிப்பிராயம் என்கிற அளவில் இந்த ஆரம்பகால இலக்கிய விமரிசனக் கலைக் கட்டுரைகளுக்கெல்லாம் மதிப்பு உண்டு. பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கில இலக்கிய விமரிசனத்தில் டாக்டர் ஜான்ஸன் காலத்திய விமரிசன நிலையில் நாம் இன்று இருக்கிறோம் என்று சொன்னால் அதில் தவறில்லை.

நான் தமிழிலும் சரி. ஆங்கிலத்திலும் சரி, வேறு எனக்குத் தெரிந்த எந்த மொழியிலும் சரி—பண்டிதனல்ல. இதைப் பெருமையாகவும் சொல்லிக்கொள்ளலாம்; சிறுமையாகவும் கருதலாம்——அதனாலென்ன என்றும் கேட்கலாம். ஆனால் பண்டிதனல்லாத காரணத்தினால்தான் நான் ஒரு நூலைப் படித்தவுடன் எவ்விதமான முன்பின் யோசனைக்கும் இடம் தராமல் இது எனக்குப் பிடித்தது என்றும், ஏன் பிடித்தது என்றும் சொல்லத் துணிவு பெறுகிறேன். பண்டிதனாக இருந்தால் இப்படிப்பட்ட முடிவு சொல்வதால் என்ன விளைவுகள் விளையுமோ, எப்படியாகுமோ, இலக்கண விதிகள் எப்படிப் போகுமோ என்கிற பயமெல்லாம ஏற்படும். எனக்குப் பிடித்திருந்தது என்று சொல்லி, ஏன் பிடித்திருந்தது என்று சொல்ல முயலுவதுதான் இலக்கிய விமரிசன வளர்ச்சியில் முதல் படி என்று எண்ணுகிறேன் நான்.

இந்தப் **படித்திருக்கிறீர்களா?** என்கிற கட்டுரைகளில் சமீப காலத்திய (அதாவது பாரதிக்குப் பின் என்று வைத்துக்கொள்ளுங்களேன்) சில தமிழ் நூல்களை நான் படித்து

அவற்றில் எங்கெந்த அம்சங்கள் பாராட்டுக்குரியவையாகத் தோன்றின எனக்கு என்று சொல்ல முயன்றிருக்கிறேன். நூல்களைப் பூரணமாக விமரிசனம் செய்யவும் நான் முன் வரவில்லை இந்தக் கட்டுரைகளில்; தர விமரிசனம் செய்து பார்க்கவும் முயலவில்லை. இந்த நூல்களில் இந்தந்த மாதிரி அம்சங்கள் இருக்கின்றன—படித்துப் பார்க்கலாமே என்று கூறவே முயன்றுள்ளேன். இன்றையத் தமிழ் இலக்கியத்தின் விஸ்தீரணத்தையும் வளத்தையும் குறிப்பிட்டுக் காட்ட இந்த மாதிரிக் கட்டுரைகள் உபயோகப்படும் என்பது என் நம்பிக்கை. ஒரு சிலருக்கேனும் இந்தக் கட்டுரைகளைப் படித்த பின் நூல்களைப் படித்துப் பார்க்கவேண்டும் என்று ஆர்வம் தோன்றிவிடுமாயின், இந்தக் கட்டுரைகளை நான் எழுதிய நோக்கம் நிறைவேறிவிடும் என்று சொல்லலாம்.

இதுபோல இன்னும் இரண்டு மூன்று தொகுதிகளுக்கு இடம் உண்டு என்று நினைக்கிறேன். (நான் எழுதக்கூடியதை மட்டுமே சொல்கிறேன். மற்றும் பலர் பல தொகுதிகள் எழுதி நமக்குத் தர இடமுண்டுதான்.) அதைச் சாத்தியமாக்க வேண்டியவர்கள் தமிழ் வாசகர்கள்தான்

இந்தக் கட்டுரைகள் வரிசையாக சுதேசமித்திரன் வாரப் பதிப்பில் வெளிவந்தன. தங்கள் பத்திரிகையில் இடந் தந்து ஆதரித்த அதன் அதிபர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் என் நன்றி உரியதாகிறது.

திருவனந்தபுரம்
11—9—57

க. நா. சுப்ரமண்யம்

## பொருளடக்கம்

# படித்திருக்கிறீர்களா?

1. "புதுமைப்பித்தன்" : கதைகள்

## காஞ்சனை

இரண்டொரு வருஷங்களுக்குமுன் அயல் நாட்டு இலக்கியாசிரியர் ஒருவர் இந்தியாவுக்கு வந்திருந்தார். இந்திய பாஷை இலக்கியங்களைப்பற்றி அறிந்துகொண்டு போக அவருக்கு ஆசை. இப்படி இங்கு வந்து சேருகிற மற்றவர்களைப் போல இல்லாமல் அவர், அவசரப்படாமல், நிதானமாக, நின்று, ஆர்வத்துடன் பல விஷயங்களை விசாரித்து அறிந்துகொள்ள முயன்றார். வசதியும், தகுதியுமுள்ளவராக இருந்தார் அவர்.

பல பேச்சுக்கிடையில் அவர் என்னை ஒரு கேள்வி கேட்டார். "பொதுவாக இந்தியா பூராவிலுமே, சிறப்பாகத் தமிழில், பழமை என்று ஒன்று தப்ப முடியாத ஆட்சி செலுத்துகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. எங்கள் இலக்கியங்களில் எங்கள் அனுபவம் என்னவென்றால், பழமையின் பிடி மென்னியைப் பிடிப்பதாகவும் இருக்கக்கூடாது; நழுவிவிடக்கூடியதாகவும் இருக்கக் கூடாது: இன்றைய இலக்கியத்தில் பழமையின் சாயை இருக்கத்தான் வேண்டும். ஆனல், அதுவே புதுமைக்கு

அனுசரணையாகவும் இருக்கவேண்டும். பழமையே புரட்சிகரமானதாக இருக்கலாம். அந்தமாதிரி எழுத்து ஏதாவது உங்களிடையே உண்டா?"

"உண்டு" என்று சொல்லிவிட்டுச் சிறிது தயங்கினேன் நான். பிறகு சொன்னேன்: "ராமாயணக் கதை உங்களுக்குக் கூட ஓரளவு தெரிந்திருக்கும். விசுவாமித்திரருடன் அயோத்தியை விட்டுக் கிளம்பிய ராமன், மிதிலை போகும் வழியிலே ஒரு கல்லை மிதிக்கிறான். அக்கல், கௌதமனின் சாபம் பெற்ற அகல்யை. ராமன் பாத தூளியினால் அகல்யை சாப விமோசனம் அடைகிறாள். ராமனுக்குக் கல்யாணமாகிறது. அயோத்தியில் பட்டாபிஷேக ஏற்பாடுகளுக்கு மத்தியிலே, ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் காட்டுக்குப் போகிறார்கள். ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போனான். போர் புரிந்து ராவணனைக் கொன்று சீதையை மீட்ட ராமன், உலக அபவாதத்துக்குப் பயந்து, சீதையை அக்கினிப் பிரவேசம் செய்யச் சொல்கிறான். பிறகு அயோத்தி திரும்பி முடிசூட்டிக்கொண்டான். ஒருநாள் ராமனும், சீதையும் கௌதமரின் ஆசிரமத்துக்குக் கிளம்பினார்கள். அங்கே கல்லாயிருந்து பெண்ணான அகல்யை, சீதையின் வாயைக் கிண்டுகிறாள். வனவாச அனுபவம், லங்கா வாசம் முதலியனபற்றிக் கேட்டறிந்துகொள்கிறாள் அகல்யை. கடைசியாகத் தன்னை ராமன் அக்கினிப் பரீக்ஷை செய்ததையும் சொன்னாள் சீதை, 'உன்னையா? ராமனா?' என்று கேட்ட அகல்யை மீண்டும் கல்லானாள் என்று எங்களுடைய இன்றையக் கதாசிரியர்களில் ஒருவர் கதை எழுதியிருக்கிறார். நீங்கள் கேட்ட கேள்விக்குப் பதில் இதில் இருக்கிறது" என்றேன்.

கதையை மனசில் வாங்கித் தெரிந்துகொள்ள அந்நிய நாட்டு இலக்கியாசிரியருக்குச் சிறிது நேரம் பிடித்தது. பிறகு அவர் சொன்னார்: "இந்தப் பிரச்சினையை மஹா கவி

வால்மீகியே நியாயப்படித் தீர்த்துவைத்திருக்கவேண்டும். தன்மனைவிக்கு ஒரு நீதி, பிறன் பெண்டுக்கு ஒரு நீதி என்று லக்ஷிய புருஷனாகிய ராமனே நினைத்ததாக முடிவு ஏற்படும்படி அவர் விட்டது தவறுதான்." பிறகு கேட்டார்: "அந்தக் கதையின் ஆசிரியர் பெயர் என்ன?" என்று.

"புதுமைப்பித்தன் என்று புனைபெயர் வைத்துக் கொண்ட ஒருவர். அவர் இயற்பெயர் விருத்தாசலம்" என்றேன் நான். தொடர்ந்து சொன்னேன்: "இவ்வளவு தெளிவாக உங்களுக்குத் தெரிந்துவிட்ட விஷயம் எங்கள் பெரியவர்களுக்கு அவ்வளவு சுலபத்தில் விளங்கி விடுவதில்லை. ஆதி கவி அப்படி எழுதவில்லை; இந்தப் புதுமைப் பித்தன் யார், சுண்டைக்காய் என்று சண்டைக்கே வந்து விடுகிறார்கள். ஆனால், அது என்னவானாலும் இன்றுள்ள சிருஷ்டிகர்த்தாக்கள் பழமைபற்றிக் கொண்டுள்ள நோக்கம் உங்களுக்கு விளங்கியிருக்கும் என்றே எண்ணுகிறேன்."

புதுமைப் பித்தனின் கதைத் தொகுதிகளில் ஒன்றான காஞ்சனை என்கிற தொகுதியில் உள்ள கதைகளில் ஒன்று மேலே கூறிய 'சாப விமோசனம்', அற்புதமான கதை; அற்புதமான உருவத்தில் விழுந்திருக்கிறது. இந்தத் தலைமுறையின் சிறந்த சிறு கதைகளில் அது ஒன்று என்பது என் அபிப்பிராயம். அது வெளிவந்ததிலிருந்து இன்று வரை அந்தக் கதையை மட்டும் நான் இருபது தடவையாவது படித்திருப்பேன். படிக்குந்தோறும் படிக்குந்தோறும் புதிது புதிதாக இன்பம் தரும் கதை அது. இப்படித் திரும்பத் திரும்பப் படிக்கக்கூடிய கதைகளும் நூல்களுமே நல்ல கதைகளும் நூல்களுமாகும் என்று சொல்வதில் தவறு என்ன?

புதுமைப் பித்தன் தமிழில் இருநூறுக்கும் அதிகமாகவே கதைகள் எழுதியிருக்கிறார்: எல்லாக் கதைகளுமே ஒரே தரத்தவை என்று சொல்லமுடியாது எனினும்

ஒரு முப்பதுக்குமேல் நல்ல கதைகள் எழுதியிருக்கிறார். அவற்றில் ஒரு பத்தாவது காலத்தால் சாகாது என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

காஞ்சனை என்கிற இந்தத் தொகுதியிலேயே இன்னொரு கதையைப் பார்க்கலாம். இது வேறு ஒரு தினுசான கதை.

"வீரபாண்டியன் பட்டணத்துச் சுப்பையா பிள்ளை, ஜீவனோபாயத்துக்காகச் சென்னையை முற்றுகையிட்ட போது சென்னைக்கு மின்சார ரயிலோ, அல்லது மீனம்பாக்கம் விமான நிலையமோ ஏற்படவில்லை. மாம்பலம் என்ற செமண்டு கட்டிட நாகரிகம் அந்தக் காலத்திலெல்லாம் சதுப்பு நிலமான ஏரியாக இருந்தது. தாம்பரம் ஒரு தூரப் பிரதேசம்" என்று தொடங்குகிறது கதை. "பவழக்காரத் தெருவில், திருநெல்வேலிவாசிகளின் சுயஜாதி அபிமானத்தைக் கொண்டு வளர்ந்த தனலட்சுமி புரொவிஷன் ஸ்டோர்ஸ், பிற்காலத்தில் தனலட்சுமி ஸ்டோர்ஸ் ஜவுளிக் கடையாக மாறியது. தேசவிழிப்பின் முதல் அலையான ஒத்துழையாமை இயக்கமும், பின்னர் அதன் பேரலையான உப்பு சத்தியாக்கிரஹமும், சுப்பையாப் பிள்ளையின் வாழ்க்கையிலோ மனப் போக்கிலோ மாறுதல் எதுவும் ஏற்படுத்தவில்லை. வீரபாண்டியன் பட்டணத்தின் ஒரு சிறு பகுதியாகவே அவர் சென்னையில் நடமாடினார். ஜீவனோபாயம், பிறகு சௌகரியப்பட்டால் பிறருக்கு உதவி, சமூகத் தொடர்புகளுக்குப் பயந்து பணிதல் எல்லாம் சேர்ந்த உருவம் சுப்பையா பிள்ளை. மின்சார ரயில் அவர் வாழ்வில் ஒரு மாறுதலை ஏற்படுத்தியது. அவர் தாம்பரத்தில் குடியேறினார். தினம் மின்சார ரயில் பயணம் அவசியமாயிற்று......விடியற்காலம் கிணற்றுத் தண்ணீர் ஸ்நானம், பழையது, கையில் பழையது மூட்டை, பான், வெள்ளி விபூதிச் சம்புடத்தில் உள்ள இரண்டணாச் சில்லரை" இவற்றுடன் பவளக்காரத் தெருவுக்குக்

ளம்புவார். "இரவு கடைசி வண்டியில் காசித் தூக்குச் சட்டி, பாஸ், வெள்ளி விபூதிச் சம்புடத்தில் உள்ள இரண்டணாச் சில்லரை, பசி, களை—இவற்றுடன் தாம்பரத்துக்குத் திரும்புவார்".

சுப்பையா பிள்ளையின் நிறைந்த இந்த வாழ்வில் இன்னொரு நிறைவு அனுபவமும் புகக் காத்திருந்தது. மாம்பலம் கூட்டத்தில் நெருக்கியடித்துக்கொண்டு மின்சார ரயிலில் ஏறினாள் ஒரு பெண்மணி. சுப்பையா பிள்ளை உட்கார்ந்திருந்த ஆஸனத்துக்கு எதிர் ஆஸனத்தில் உட்கார்ந்து கொண்டாள். "மாணவி; வைத்தியத்துக்குப் படிப்பவள். கழுத்தில் லாங் செயினுடன் ஒரு ஸ்டெதாஸ்கோப்பும் அலங்காரத்துக்காகத் தொங்கிற்று. இன்ன வர்ணம் என்று நிச்சயமாகக் கூறமுடியாத பகல் வேஷ வர்ணங்களுடன் கூடிய ஒரு புடைவை. அதற்கு அமைவான ஜாகெட். செயற்கைச் சுருளுடன் கூடிய தலைமயிரைக் காதை மறைத்துக் கொண்டையிட்டிருந்தாள். நெற்றி உச்சியை உள்ளங்கையால் தேய்த்துத் தினவு தீர்த்துக் கொண்டார் சுப்பையா பிள்ளை. கண்களைக் கசக்கிக் கொண்டு, ஒரு வாரமாகக் கத்தி படாத முகவாய்க் கட்டையைத் தடவிக் கொடுத்துக் கொண்டு, ஜன்னல் வழியாக எதிர்ப்பக்கத்தில் தெரியும் வீடுகளைப் பார்த்தார். பார்வை மறுபடியும் அந்தப் பெண்ணுக்குத் திரும்பியது...'பெத்துப் போட்டால் போதுமா?' என்று தன் பெண்ணைப்பற்றி நினைத்தார்...ஷாக் அடித்தது போலப் பிள்ளையவர்கள் காலைப் பின்னுக்கு இழுத்தார். அவளது செருப்புக்காலின் நுனி அவரது பெருவிரல் நுனியைத் தொட்டது. பிள்ளையவர்கள் கால், உடல், சகலத்தையும் உள்ளுக்கிழுத்துக் கொண்டார்...அவர் மனம் எப்பவோ நடந்த கல்யாண விஷயத்தில் இறங்கியது. வீர பாண்டியன் பட்டணத்துக் கருக்கு மாப்பிள்ளை—மேளதாளக் குரவைகளுடன் வீட்டில் குடி புகுந்த ஸ்ரீமதி பிள்ளையின் மஞ்சள் அப்பி

சுத்துருவில் மருக்கொழுந்துடன்கூடிய நாணிக்கோணிய உருவம். பிறகு தேக உபாதையையும் குடும்பச் சுமையும் தூக்கிச் சென்ற நாள் சங்கிலிகள். குத்துவிளக்கை அவித்துவைத்த குருட்டுக் காமம்...'' எதிரில் இருந்த பெண் பார்க்கில் இறங்கிவிட்டாள். அதை அவர் கவனிக்கவே யில்லை.

இது 'சுப்பையா பிள்ளையின் காதல்கள்' என்னும் கதை.

கட்டு எதற்கும் அடங்காத கதாசிரியர் புதுமைப் பித்தன். இதுதான் முடியும், இது முடியாது என்பதில்லை அவருக்கு. எதையும் முயற்சி செய்து லாகவமாக உருவாக்கி விடுவதில் சமர்த்தர். சித்த வைத்திய தீபிகையின் ஆசிரியரான கந்தசாமிப் பிள்ளையைத் தேடிக்கொண்டு கடவுளே வந்துவிட்டார், அவர் கதைகளில் ஒன்றில். பிராட்வே முனையில் ஹோட்டல் சுகாதாரம் பேசிக் கொண்டே காபி சாப்பிட்டுவிட்டு, நர வாகனத்தில் (ரிக்ஷாவில்தான்) வீடு போய்ச் சேருகிறார்கள் கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும். கடவுளிடமே தன் பத்திரிகைக்கு ஜீவிய சந்தா வசூல் செய்துவிடப் பார்க்கிறார் கந்தசாமிப் பிள்ளை. ''...'யார் ஜீவியம்!' '' என்று கேட்கிறார் கடவுள். வீட்டிலே கந்தசாமிப் பிள்ளையின் பெண் குழந்தை அவர்களை வரவேற்கிறது. '' 'எனக்கு என்ன கொண்டாந்தே?' என்று கேட்டாள் குழந்தை. 'என்னைக் கொண்டாந் தேன்' என்றார் பிள்ளை 'என்னப்பா! தினந்தினம் உன்னி யேத்தானே கொண்டாரே; பொரி கடலையாவதுகொண் டாரப் படாது?' என்று சிணுங்கியது குழந்தை. 'பொரி கடலை உடம்புக்காகாது. இதோபார். உனக்கு ஒரு தாத்தாவைக் கொண்டுவந்திருக்கிறேன்''' என்று தன் பெண்ணுக்குக் கடவுளை அறிமுகப்படுத்திவைத்தார். குழந்தையின்பேரில் வைத்த கண்களை மாத்த கடவுளால் முடியவில்லை. கந்தசாமிப் பிள்ளைக்குச் சிறுத்தொண்டர்

கதை ஞாபகம் வந்துவிட்டது. ''சற்றுத் தயங்கினுர்: 'இப்ப வெல்லாம் நான் சுத்த சைவன். மண்டபானைச் சமையல் தான் பிடிக்கும். பால் தயிர்கூடச் சேர்த்துக் கொள்வ தில்லை' என்று சிரித்தார் கடவுள். ஆசைக்கு என்று காலந் தப்பிப் பிறந்த கருவேப்பிலைக் கொழுந்து என்ருர் கந்தசாமிப் பிள்ளை...'வாடியம்மா கருவேப்பிலைக் கொளு ந்தே!' என்று கைகளை நீட்டினுர் கடவுள். ஒரே குதியில் அவர் மடியில் ஏறிக்கொண்டது குழந்தை. 'எம்பேரு கருகப்பிலைக் கொழுந்தில்லை; வள்ளி. அம்மா மாத்திரம் என்னைக் கறுப்பி, கறுப்பின்னு கூப்பிடுதா! நான் என்ன அப்படியா?' என்று கேட்டது. அது பதிலை எதிர் பார்க்க வில்லை.'' புதுமைப்பித்தனின் கதைகளில் வருகிற குழந் தைகள் அற்புதமான சிருஷ்டிகள். இன்றைய தமிழ் எழுத்திலே அந்தக் குழந்தைகளைப் போன்ற பூரணமான பாத்திரங்கள் வேறு இல்லை என்பது என் அபிப்பிராயம். அவை மறக்க முடியாத சிருஷ்டிகள்.

'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' என்கிற கதை பூராவையுமே சொல்லிவிட வேண்டும் என்றுதான் எனக் குத் தோன்றுகிறது. அவ்வளவு நல்ல இடங்கள் பல இருக்கின்றன அதில். 'கடவுளிடமும் ஜீவிய சந்தா வாங்கிக்கொண்டு தான் அவரை விட்டார் கந்தசாமிப் பிள்ளை!' என்று சொல்லி ஒருவாருக முடித்துவிடுகிறேன்.

காஞ்சனைத் தொகுதியிலே முதல் கதையான காஞ் சனையே வெகு நுட்பமான ஒரு விஷயத்தை அழகிய உருவத்தில் சொல்கிறது, பழைய பெரிய எழுத்து விக்கிர மாதித்தின் கதைப் பாணியில் செல்லுகிற ஒரு மூட்டைப் பூச்சி கதை இருக்கிறது இத்தொகுதியில்—'கட்டிலைவிட்டி றங்காக் கதை' என்று பெயர் அதற்கு. 'மகாமசானம்' என்று ஒரு கதை. அதில் தெரு ஓரத்திலே பிச்சைக்காரன் செத்துக்கொண்டு கிடக்கிருன். ஒரு குழந்தை மாம் பழத்தை மூக்கில் வைத்துத் தேய்த்துக் கொள்கிறது.

'செல்லம்மாள்' என்ற கதையில் செல்லம்மாள் இருபது பக்கங்களிலும் செத்துக் கிடக்கிறாள்—அவள் புருஷன் கடைசிக் கிரியைகளைச் செய்யத் தன்னைத் தயார் செய்து கொள்கிறான்.

இந்தத் தொகுதியில் இல்லாத வேறு பல கதைகளையும் பற்றிக் இங்கு சொல்லவேண்டும் போல இருக்கிறது எனக்கு. சிற்பியின் நரகம், மனக்குகை ஓவியங்கள், ஞானக்குகை, கபாடபுரம்...இன்னும் பல; விதவிதமான கதைகளை விதவிதமான உத்திகளைக் கையாண்டு எழுதியிருக்கிறார் புதுமைப்பித்தன். அவர் கதைகளிலே இரண்டு விசேஷ அம்சங்கள் சொல்லலாம். (ஒன்று) அவர் அவசியம் என்று தேர்ந்தெடுத்துச் சொல்லும் விஷயங்கள்; அவர் கையாண்ட விஷயங்கள் எல்லாமே புரட்சிகரமானவை என்று பொதுவாகச் சொல்லலாம். (இரண்டு) அதைச்சொல்ல அவர் கையாண்ட நடை. சில சமயம் அவர் நடை தடுமாறி விஷயத்தை எட்டாது போனதும் உண்டு. ஆனால் அவருடைய சிறந்த கதைகளில், சொல்லும் சிந்தனையும் சேர்ந்து அமைந்தன. திருநெல்வேலி பேச்சுத் தமிழை அவர் பல இடங்களில் கவிதையாகவே கையாண்டிருக்கிறார்.

வருகிற நூற்றாண்டில் தமிழ்ச் சிறு கதைச் செல்வத்துக்கு நமக்குப் பலமான அஸ்திவாரம் போட்டுத் தந்து விட்டவர் புதுமைப்பித்தன் என்று சொல்ல வேண்டும்.

# அரும்பிய முல்லை

சமீப காலத்தில், அதாவது ஒரு நூறு வருஷங்களுக்குள், 'தமிழில் வெளியான நல்ல நூல்கள்', என்று சில நூல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு பட்டியல் தயாரிப்பது என்று வந்தால், முதல் பத்துப் பதினைந்துக்குள்ளேயே இடம் பெற்றுவிடும் அரும்பிய முல்லை என்ற நூல் என்பது என் அபிப்பிராயம். தீபன் என்கிற பெயரில் ஏதோ கொஞ்சம் எழுதிய தெ. சி. சித்தாரப்பன் இளவயதிலேயே இறந்துவிட்டார். அவர் இறந்த பிறகு அவர் எழுத்துக்களில் சிலவற்றைத் தொகுத்து அவர் நண்பர்களில் சிலர் இந்நூலை வெளியிட்டார்கள், 1942-ல். அதற்குப் பிறகு இன்னமும் இதற்கு இரண்டாம் பதிப்பு வரவில்லை என்று எண்ணுகிறேன்*. பிரமாதமான வெற்றி ஒன்றும் பெற்றுவிடவில்லை இது. ஆயிரக்கணக்கானவர்கள் போட்டி போட்டுக்கொண்டு இதை வாங்கிவிடவில்லை. பரிசுகளோ, பாராட்டுதல்களோ பெறாத புஸ்தகம்தான் இது.

எனினும், இந்த நூலைப் படித்தவர்களில் ஒரு ஐந்நூறு பேர்வழிகளாவது இதை ரசித்து மனத்தில் போற்றி வைத்திருப்பார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. நல்ல புஸ்தகங்களுக்கு ஐந்து லக்ஷம், ஐம்பதினாயிரம் என்று வாசகர்கள் தேவையில்லை. ஐந்தும் போதும், ஐந்நூறும் போதும். நீர்ப்பரப்பில் இட்ட கல் எழுப்பும் அலைகள்

---

* கட்டுரை வெளிவந்தபிறகு தெரிந்தது; **அரும்பிய முல்லை** 1957 வரையில் மூன்று பதிப்புகள் வெளிவந்திருப்பதாக.

போல, ஒரு நல்ல நூலின் வாசகர்களின் சுயானுபவம் அலை அலையாகப் பல தலைமுறைகளுக்கும் பரந்து பரவிக் கொண்டேயிருக்கும் என்பது இலக்கிய உலகம், சரித்திர ஆரம்ப முதலே கண்டதோர் உண்மையாகும்.

அப்படி இந்த நூலில் ரீபன் சாதித்து விட்டதுதான் என்ன என்று கேட்கலாம் பலரும். சாதித்துவிட்டது என்று சொல்வதைவிட சாதிக்க முயன்றது என்று சொல்வது பொருந்தும். மகத்தான சாதனை என்று சொல்லும்படியாக அவர் எதையும் செய்துவிடவில்லைதான். ஆனால் ஒரு மகத்தான சாதனையின் எல்லையை அவர் எட்டிக்கொண்டிருந்தார் என்பது இந்நூலில் காணப்படும் அவர் எழுத்துக்கள் ஒன்வொன்றிலும் தெளிவாகத் தெரிகின்றன. இன்னும் பல ஆண்டுகள் அவர் வாழ்ந்திருந்தால் என்னென்ன செய்திருப்பார் என்று கணக்கெடுக்கப் பார்ப்பது இலக்கிய விமரிசனமாகாது. ஆனால் படிக்கக் கிடைத்தவரையில் அவர் எழுத்தை ஒரு பொக்கிஷம் என்றே கொண்டாடவேண்டும்.

அப்படி ஒன்றும் பெரிய நூல் அல்ல இது. பெரிய, கொட்டை கொட்டையான எழுத்துக்களில், வரிக்கு வரி நிறைய இடம்விட்டு, இடை இடையே படங்களும் போட்டு, இருநூற்றி இருபது பக்கங்கள்தான் இருக்கின்றன. உள்ளேயுள்ள விஷயங்களும் ஒரே ரகமானவையல்ல. நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களிலிருந்து பிய்த்தெடுத்த பகுதிகள், சிறு கவிதைகள், கட்டுரைகள், கதைகள் என்கிற பெயரில் பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவந்த அனுபவக் குறிப்புகள் இலக்கிய விமரிசனங்கள், சங்கீதம் பற்றிய தர்க்கங்கள் எல்லாம் இதில் இடம் பெற்றிருக்கின்றன. அடேயப்பா இவ்வளவுமா என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா? இந்த 31 சிறு தனி அம்சங்களிலும், 220 பக்கங்களிலும், நம்மால் பூரணமான ஒரு ரஸிக இதயத்தைப் பார்க்க முடி-

கிறது. ஒன்றும் அவ்வளவாக முக்கியமான பகுதியல்ல. ஆனால், அத்தனையும் சேர்ந்து ஒரு தனி உருவத்தை, பண்பாடு நிறைந்த உள்ளத்தை, நமக்கு "இதோ, இதுதான் இபன்" என்று காட்டுகின்றன.

ஒரு கடிதத்தில் இபன் எழுதியிருக்கிறார்: "சென்ற இரண்டு வாரங்களாக எனக்கு உடம்புக்குச் சௌகரியமில்லை. அது என்னுடைய உடம்பை அதிகமாகப் பாதிக்கவில்லை. ஆனால் என் மனதைப் பாதாள லோகத்துக்கே கொண்டு போய்விட்டது." அதே கடிதத்தில் பிற்பகுதியில் அவர் எழுதியிருக்கிறார்: "இந்தக் குரலுக்கு என்றைக்குத் தான் விமோசனம் வருமோ தெரியவில்லை. இதில் நிபுணர் ஒருவரிடம் கேட்டதற்கு, நாளடைவில் தானாகவே தெளிவடையும் என்று சொல்லுகிறார். பொறுத்திருக்கத் தயார்தான். ஆனால் தெளிவடையாமலே இருந்துவிட்டால் என்ன செய்வது என்றுதான் பயமாக இருக்கிறது. பேசுவதற்கு இந்தக் குரல் போதும்: ஒருவிதமாகச் சமாளித்துக் கொள்ளலாம். ஆனால் பாடுவதற்கு இந்தச் சாரீரம் போதாதே? வாழ்நாள் முழுவதும் பாடாமலே இருந்துவிடவா?"

இன்னொரு கடிதத்தின் ஒரு பகுதி பின்வருமாறு: "எதற்கும் நான் பிரமாதமாகச் சந்தோஷப்படவும் மாட்டேன்...இது கூடவா எனக்குத் தெரியாமற் போய்விடும்? நம்மை அநாவசியமாக வருத்தத்துக்குள்ளாக்குகிறவர்களைப் பார்த்துக் கோபப்படுவதற்குப் பதிலாக நன்றாய்ச் சிரித்துவிட்டால், எல்லாம் சரியாகப் போய்விடுமல்லவா? சிரிப்பதென்பது இலேசான காரியமல்லதான். இருந்தாலும் இந்தக் கலையைப் பழகிக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் இந்த உலகத்தில் நம்மால் வாழ்வைச் சந்தோஷமாகக் கழிக்கமுடியுமா? உலகவாழ்வைச் சந்தோஷமாகக் கழிக்கவேண்டும் என்பதைக் காட்டிலும் மேலான ஒரு லட்சியம் இருக்கவா செய்கிறது?..."

கவி பாரதியாரைப்பற்றி ஒரு கட்டுரை இருக்கிறது இந்தத் தொகுதியில். "கொஞ்ச காலமாகத் தமிழன்னை எங்கேயோ ஓடி ஒளிந்துகொண்டாள். அவளுடைய அரண்மனை கவனிப்பாரற்றுக் கிடந்தது. அரண்மனையோ சரியான அஸ்திவாரத்தின்மேல் வயிரக் கற்களினால் கட்டப்பட்டது. சுகமாக வசிப்பதற்கு வேண்டிய வசதிகளெல்லாம் செய்யப்பட்டிருக்கிறது. சமையலறை முதல் சங்கீத மண்டபம் வரை எல்லா இடங்களும் வெகு அழகாகக் கட்டப்பட்டிருக்கின்றன. ஆனால் வெகு நாளாகக் கவனிப்பாரற்றுக் கிடந்ததனால் இந்த நிலைமைக்கு வந்துவிட்டது. எல்லாக் கதவுகளும் சாளரங்களும் மூடப்பட்டிருந்ததால், உள்ளே இருள் குடிகொண்டுவிட்டது. இருளுக்குச் சகாக்களாக, மூலைக்கு மூலை நூலாம்படையும் மேலே வௌவால்களும் தொங்கிக்கொண்டிருந்தன... இந்த அரண்மனையைப் பாரதியார் பார்த்தார். அவருக்குப் பார்க்கச் சகிக்கவில்லை...வாசற் கதவுகளையும் சாளரங்களையும் அகலத் திறந்துவைத்தார். வெளிச்சம் உள்ளே பாய்ந்தது. இருள் அகன்றது. வௌவால் கூட்டம் எடுத்தது ஓட்டம்...சுவர்களில் பாரதியார் கையாலேயே எழுதிய சித்திரங்கள் தொங்க விடப்பட்டன. அந்தப் படங்களைப் பார்க்கப் பார்க்கப் பரம சந்தோஷமும் ஆச்சரியமும் ஏற்படுகிறது. பாரதியாரின் உள்ளத்தின் வேகத்தையும் ஆழத்தையும் அவற்றில் கண்டு சந்தோஷப்படுகிறோம். அவைகளின் மூலம் பழைய புராதன சித்திரங்களையும் நம்மால் எவ்வளவாக அனுபவிக்க முடிகிறது என்பதில் ஆச்சரியம் அடைகிறோம்... இதையெல்லாம் காட்டிலும் மேலான காரியம் ஒன்றையும் பாரதியார் செய்தார். அதாவது அரண்மனைச் சங்கீத மண்டபத்தின் மத்தியில் கலைவாணியின் கற் சிலை ஒன்றை வைத்தார். சதா கை விளக்கு கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. அதன் ஒளியில், கலா ஞானமும் தெய்வீகத் தன்மையும் விளங்

கும் கலைமகளின் திருமுகம் பிரகாசித்துக் கொண்டிருந்தது. இவ்வளவும் செய்து விட்டு, எங்கேயோ ஒளிந்து கொண்டிருந்த தமிழன்னையைத் தேடிக் கொணர்ந்தார். இன்னமும் அவள் அரண்மனையில் வீற்றிருக்கிறாள். எப்போதும் சிரித்தமுகம். அடிக்கடி மழலைக் கிளிமொழியில் நல்ல நல்ல வசனங்கள் சொல்லிக் கொண்டிருக்கிறாள். அடிக்கடி பாடுகிறாள்; ஆடுகிறாள்; துள்ளி விளையாடுகிறாள். மொத்தத்தில் ஆனந்தமயமாக இருக்கிறாள்...இதுதான் பாரதியார் தமிழுக்கும் தமிழர்களுக்கும் செய்த பேருபகாரம்; அரும்பெரும் தொண்டு. இதைத்தான் அவர் தமிழுக்குக் கொடுத்துதவிய 'புத்துயிர்' என்கிறோம். இதையேதான் தமிழ் இலக்கியத்தில் இப்பொழுது கொஞ்சகாலமாக ஏற்பட்டு வரும் மறுமலர்ச்சிக்கு மூலவித்து என்றும் சொல்லுகிறோம். இந்த நறுமலர் வாடி வதங்கிப் போய் விடாதபடி அதற்குத் தண்ணீரோ அல்லது கண்ணீரோ விட்டுக் காக்கத் தமிழர்கள் கடமைப்பட்டுள்ளார்கள். இந்தக் கடமையைச் செய்வதில் இன்பமே உண்டு. பாரதியார் பாடல்களைப் பாடுவதிலும், அவற்றின் மூலம் நம்முடைய பழைய இலக்கியங்களை உணர்ந்து அனுபவிப்பதிலும் இன்பமல்லாமல் வேறென்ன இருக்கக் கூடும்?" கவிதை என்று ஒரு தனிக் கட்டுரையும் இருக்கிறது. அதிலிருந்தும் ஒரு பகுதியை எடுத்துச் சொல்ல எனக்கிஷ்டம்தான். ஆனால் மற்றப் பகுதிகளையும் 'ஸாம்பிள்' பார்க்கவேண்டாமா?

கார்த்திகை, கிருஷ்ணஷ்டமி, விநாயக சதுர்த்தி, பதினெட்டாம் பெருக்கு, நவராத்திரி இதெல்லாம் பற்றிக் கட்டுரைகள் இருக்கின்றன இந்நூலில். சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த விஷயங்களையேதான் சொல்லியிருக்கிறார் ஆசிரியர். புதுசாக ஒன்றுமில்லை தான். இருந்தாலும் கேட்பவர் மனத்தில் இருக்கும் படியாகச் சொல்லியிருக்கிறார். இதற்கும் சுருக்கமாக ஒரு உதாரணம் எடுத்

துத் தந்துவிடுகிறேன் "ஒரு காலத்தில் தேவர்கள் என்ன காரியம் செய்தாலும் அதற்கு ஏதாவது ஒரு இடையூறு வந்து குறுக்கிட்டது. தொடங்கின கருமங்கள் ஒன்றும் முற்றுப்பெருமல் தடைப்பட்டு நின்றன. தேவர்கள்தான் வெறும் கோழைகளாயிற்றே! எல்லோரும் ஒன்று கூடி சிவபெருமானிடம் போய் முறையிட்டார்கள். அவரோ எப்பொழுதடா தேவர்களுக்கு இடையூறு நேரிடும், நாம் உதவி செய்யலாம் என்று காத்துக்கொண்டிருப்பார். தேவர்கள் வந்து தங்களுடைய காரியங்களுக்கு விக்கினம் ஏற்படாமல் காத்தருளவேண்டும் என்று பிரார்த்தித்ததும், சிவனுர் மனம் கனிந்து, திருமுகத்திலிருந்து ஒரு ஜோதி தோன்றச் செய்ய, அதினின்றும் விக்கினேஸ்வரர் உதித்தார்...சோதிமயமான குழந்தையை எடுத்து எப்படி இடுப்பில் வைத்துக்கொள்ள முடியும்? உமாதேவி பாடு ரொம்பவும் சங்கடமாகப் போய்விட்டது...சுப்ரமண்யர் பிறந்தார். இவர் ஒரே சுறுசுறுப்பு. விநாயகரோ இடம் பெயருவதே கிடையாது."

தீபன் எழுதிய கதைகள் சிறு கதைகள் என்கிற இலக்கிய உருவம் பெற்றவையல்ல என்றுதான் சொல்ல வேண்டும். அவர் எழுதியவை எல்லாமே அனுபவத் துணுக்குகள்தான். எவ்வளவு உண்மையான அனுபவத்துடனும் ரஸணையுடனும் எழுதியிருக்கிருர்! சிறந்த உதாரணமாக 'முதலியார்வாள் வீட்டுக் கலியாணம்' என்ற கதையைப் பார்க்கலாம்.

வந்தவர் முதலியார் வீட்டில் கலியாணமாமே? என்று கேட்டுவிட்டார். "முதலியார்வாள் என்று சொல்லாமல் சும்மா முதலியார் என்று சொல்லுகிறீர்களே? இது நல்லாருக்கா. நீங்களே சொல்லுங்கள்" என்று கோபித்துக் கொள்கிருர் மற்றவர். "தஞ்சாவூர்ப் பழக்கம்" என்று சொல்லி மன்னிப்புக் கேட்கிருர் முதல்வர். "மதராஸ் வாசியாக இருந்தால் முதலி என்பதோடு நின்றுவிடும்" என்

கிறார் மற்றவர். மரியாதைப் பேச்சு தொடருகிறது. "நிச்சய தாம்பூலமா? அது ஆகிப் பத்துப் பதினைந்து வருஷமாச்சே?" என்கிறார். 'அவள் பிறந்த அன்றைக்கே நிச்சயம் பண்ணியாச்சே?... அத்தை மகள் எப்போதும் அழகுதான்' என்கிற தத்துவம் விளக்கப்படுகிறது. 'காப்பிப் பலகார'த்துக்கே கலியாண வீட்டுக்குப் போய்விடுகிறார் கதாநாயகர். கலியாண சமயத்தில் "தாய் மாமனார் ஒரு குட்டிச் சுவரில் இன்னும் நாலைந்து கழுதைகளுடன் ரங்காட்டம் ஆடிக்கொண்டிருந்தாராம்...வேறு தாய் மாமனை வைத்து அந்தக் கிரியையை நடத்த வேண்டியதாயிற்று." மொயிப் பணம் வைக்கும் விசேஷத்தில் கிழவர் இடுப்பில் சொருகி யிருந்ததை எடுத்து மாப்பிள்ளையிடம் தந்தார். அது வெள்ளிப் பொடி டப்பி-சொந்த உபயோகத்துக்கானது. இடுப்பில் மறுபக்கத்தில் சொருகியிருந்த மூணு ரூபாயை எடுத்துக் கொடுத்து விட்டு பொடி டப்பியை வாங்கிக்கொண்டார் கிழவர். சாப்பாட்டுப் பேச்சு தொடங்கி சாப்பாடு போடப்படுமுன், "வயிற்றில் எவ்வளவு பசியிருக்கலாமோ அவ்வளவு பசி இருக்கிறது. இன்னும் கொஞ்ச நேரமானால் பசி செத்துக்கூடப் போயிடும்." சாப்பாட்டுக்கும் பிறகு எத்தனையோ விதமான கச்சேரிகள். இதில் சில கிழவர்கள் உண்மையிலேயே கம்ப ராமாயணம் படிக்கிறார்கள். காப்பி வந்ததைச் சந்தனம் என்று ஒருவர் கைவிட்டு எடுத்துப் பூசிக்கொண்டார்! ஊர்வலத்துக்குக் கோயில் யானை வரவில்லையா என்று கேள்விக்கு "யானை என்னத்துக்கு? எல்லாருக்கும் முன்னாலேதான் சோப்பையா அத்தான் போறானே" என்று பதில் வருகிறது.

இத் தொகுதியில் ஏழு சிறு கவிதைகளும் அடங்கியிருக்கின்றன. சூரியோதயத்தைப் பார்க்கிற பெண்கள் கும்மிப் பாட்டாகப் பாடுகிறார்கள்: "நீலக்கடலினுக்குள்ளிருந்தே—அது நிமிர்ந்து நிமிர்ந்து பார்க்குதடி.

நாலிலொரு பங்கு தோணுதடி—இப்போ நல்லதோரபூ காய்க் காணுதடி" என்று பாடுகிறார்கள், கட்டுமரம் ஒன்று சூரியனை முட்டப் புறப்பட்டுப் போகிறது "கட்டு மரமொன்று காணுதடி—அது கதிரவனை முட்டப் போகு தடி—கைகொட்டி அதனை நிறுத்துங்கடி—அது முட்டி விட்டால் பெருமோசமடி" என்கிற வரிகளில் ஒரு அற்புத மான பாவம் தொனிக்கிறது. இதேபோல கோலமிடும் கை எனும் 15 வரிப் பாட்டையும் ஒரு உயர்ந்த சித்திரம் என்று சொல்லலாம்.

தீபன் எழுதிய **அரும்பிய முல்லை** எனும் நூல் ரஸித்துத் திரும்பத் திரும்பப் படிக்கவேண்டிய ஒரு புஸ்தகம். ஒரு திருப்திகரமான பூரணத்துவம் அதிலே காணக்கிடக்கிறது,

3. ந. சிதம்பர சுப்ரமண்யன்: நாவல்

# இதயநாதம்

தெருவெல்லாம் சங்கீத முழக்கம் கேட்டுக்கொண்டிருக்கும் இந்த நாட்களில் சங்கீதச் சூழ்நிலையை வைத்து ஒரு நாவல் சுலபமாகவே எழுதிவிடலாம் என்றுதான் தோன்றுகிறது. ஆனால், எல்லாத் தோற்றத்தையும்போல இதுவும் வெறும் ஏமாற்றுத்தான். கலையை மையமாக வைத்து எதையும் அவ்வளவு சுலபமாகச் சிருஷ்டித்துவிட முடிவதில்லை! சுலபமாகத்தோன்றுகிற காரணத்தினாலேயே அது சுலபமில்லாமல் போய்விடுகிறதோ என்றுகூடச் சொல்லத் தோன்றுகிறது. கலையையும், சிறப்பாக சங்கீதத்தையும் நாட்டியத்தையும் வைத்து சமீப காலத்தில் எழுதப்பட்டுத் தோல்வியடைந்த புஸ்தகங்களின் எண்ணிக்கை இரண்டு கைவிரல்களில் அடங்காது என்று சொல்லலாம். ஆனால், தோல்விகளைப்பற்றி நமக்கென்ன கவலை? வெற்றியடைந்த ஒரே ஒரு நாவலைப்பற்றி மட்டும் கவனிப்போம்,

இதயநாதம் என்கிற நாவலின் ஆசிரியர் ந. சிதம்பர சுப்ரமண்யன் வெகு தைரியமாக 'ஒரு வார்த்தை' என்கிற முகப்பில் கூறுகிறார்: "சங்கீதம் எங்கள் குடும்பத்தின் பரம்பரைச் சொத்து. ஆனால், என்னுடைய முன்னோர்களுக்குச் சரியான வாரிசாக நான் ஏற்படவில்லை, குடும்பத்தில் எனக்கு முன்னே பிறந்திருந்த சங்கீத சிம்மங்களுக்குப் பின்னால் வருவதற்கு நான் கொஞ்சமேனும் யோக்கியதையில்லாதவன். இருந்தாலும் ரத்தத்தில் ஊறியிருக்கும் பரம்பரை சங்கீத வாஸனை, நான் லௌகிக முறைப்படி எந்தத் தொழில் செய்துகொண்டிருந்தாலும், இதயத்தை சங்கீதத்திலேயே நாடவைத்தது. நாதத்தை முறைப்படி உபாசிக்

காத நான், நாத யோகிகளை உபாசிக்கலானேன். அந்த முயற்சியின் பயன்தான் இந்தப் புஸ்தகம்."

நாவல்கள் எழுதுவதில் எத்தனையோ பாணிகள் உண்டு. இன்ன இடத்தில் ஆரம்பித்து, இன்ன இடத்தில் முடிக்கவேண்டும் என்றுகூட ஒரு நாவலாசிரியனுக்குக் கட்டளையிட்டு நிறைவேற்றிவிட முடியாது என்றுதான் சொல்லவேண்டும். குத்துமதிப்பாக நல்ல இடம் என்று ஓரிடத்தில் ஆரம்பித்து, கதை பூர்த்தியாகிவிட்டது என்று நினைவு ஏற்படுகிற சமயத்தில் முடித்துவிடுவதுதான் சுலபமான வழி. பலிக்கவில்லை இது, சரியாக வரவில்லை என்று தோன்றினால் எல்லாவற்றையும், பிள்ளையார் சுழி முதல் மறுபடியும் ஒருதரம் எழுத வேண்டியதுதான். இரண்டாந் தரம் எழுதிய நாவலும் முதல்தரமாக இருக்கும் என்று யார் சொல்ல முடியும்? நாவலாசிரியர்களின் அனுபவத்திலே பல தடவைகள் திரும்பத் திரும்ப எழுதியும் சரியாக வரவில்லை என்று எண்ணுகிற முயற்சிகள் உண்டுதான். இப்படியிருக்கையில் சிதம்பர சுப்ரமண்யன் எழுதிய இந்த முதல் நாவல் உரிய இடத்தில் தொடங்கி உரிய இடத்தில் அழுத்தத்துடன் முடிகிறது என்பது அதனுடைய தனிப் பெருமை. இப்படி ஆட்டங்கொடுக்காத ஆரம்பமும் முடிவும் தமிழில் வேறு எந்த நாவலுக்கும் அமையவில்லை என்று சொல்லலாம்,

சாதாரண ஆரம்பம்தான். அதிகமான ஆர்ப்பாட்டங்கள் எதுவும் இல்லாமல், நேராகக் கதையை நடத்திச் சொல்லிக்கொண்டு போகிற உத்தேசத்துடனேயே ஆரம்பித்திருக்கிறார் ஆசிரியர். "சுமார் எழுபது வருஷங்களுக்கு முன்பு ஒருநாள் இலுப்பூர் கிராமத்து வீதியின் திருப்பத்திலிருந்த மாமரத்தின் அடியில் நாலைந்து சிறுவர்கள் கோலி விளையாடிக் கொண்டிருந்தார்கள்" என்று சர்வ சாதாரணமான காட்சியுடன் ஆரம்பமாகிறது நாவல். அந்தப் பையன்களில் ஒருவனை கிட்டுவைத் தேடிக்கொண்டு அவன்

அம்மா வருகிறாள். "நீ நாசமாய்ப் போக! நீயாவது உருப் படுவா யென்று பார்த்தால், அப்பன்மாதிரி தறுதலையாகத் தான் போய்விடுவாய் போலிருக்கு" என்று விதவைத் தாய் பிள்ளையைக் கடிந்து கொள்கிறாள். கணவன் உருப்படா மல் உலகத்தை விட்டே போய்விட்டான். அதை ஏற்றுக் கொண்டாகிவிட்டது. பையனாவது உருப்படியாக முன் னேறமாட்டானா என்று எண்ணி ஏமாறுகிற தாய் இன் னும் அதிகமும் சொல்லலாம். ஆனால், அவள் அப்படி அதி கமாகச் சொல்லிவிடவில்லை.

பையன் சம்ஸ்கிருதம் படித்துப் பாடசாலையில் அத்திய யனம் செய்து தன் தகப்பனாரைப் போலாகிவிட வேண்டும் என்பது தாய் கௌரியம்மாளின் எண்ணம். ஆனால், அம் மாவும், மாமாவும் மற்றவர்களும் அவன் பாட்டுக் கேட்கக் கூடாது என்னும்போதும், அப்பனைப்போலத்தான் பிள்ளை என்று தன் தகப்பனைத் தூஷிக்கும்போதும் அவனுக்கு சுபாவமாகவே கோபம் வரும். அன்று மாமா வந்து பாட சாலையில் சேர்த்துவிடுவார் என்று கேட்டவுடனேயே கிட் டுவுக்கு வெலவெலத்துவிட்டது. மாத்தூர் தேருக்குப் போனவன் அப்படியே கிளம்பிவிடுவது என்று நிச்சயித்து விட்டான்.

ஒரு கிழவர் அவனுக்கு உதவினார். அநாதை என்று சொல்லி அவரிடம் ஒட்டிக்கொண்டுவிட்டான் கிட்டு. கல்யாண கோஷ்டியுடன் வந்த கிழவர், கல்யாணப் பிள்ளை யின் தாத்தா. அவருடன் போகச் சம்மதித்துக் கிளம்பி விட்டான் கிட்டு; வழியிலே கல்யாணப் பிள்ளையைப் பாடச் சொல்லி, அவன் பாடுகிற பாட்டைப் பிரமாதப் படுத்தினார்கள் எல்லோரும் என்பதுபற்றிக் கிட்டுவுக்குச் சிரிப்பு வந்தது. தாத்தா படுத்ததும் கிட்டுபோய் "நான் பாடட்டுமா தாத்தா?" என்றான். "இன்னொரு நாளைக்கு உன் பாட்டுக்கச்சேரியை வைத்துக் கொள்வோம்" என் றார் கிழவர். கிட்டுவுக்கு ஏமாற்றம்தான்.

கல்யாணத்திலே நாதசுரக்காரனுக்குக் கிட்டுவின்மேல் பிரியம் விழுந்துவிட்டது. அவன் பாடச் சொன்னான். கிட்டு பாடுவதைக்கேட்ட கிழவருக்கே பிரமிப்பாக இருந்தது. "யாரு சங்கீதம் சொல்லிக் கொடுத்தா?" என்று கேட்டார் கிழவர். "கேட்டுக் கேட்டுத்தான் பாடறேன்" என்ருன் கிட்டு. "பாவம்; ஆதரவில்லாத குழந்தைக்கு இந்த மாதிரி ஞானத்தைக் கொடுத்திருக்கான், கடவுளின் விளையாட்டைப் பாருங்க சாமி. சங்கீதம் சரியாகச் சொல்லிவைத்தால் ..." என்ருன் மேளக்காரன். "திருவையாறு சபேசய்யரிடம் சேர்த்துவிடலாம். அவர் எனக்கு மிகவும் வேண்டியவர்" என்ருர் கிழவர். இப்படியாகக் கிட்டு சபேசய்யரிடம் போய்ச் சேர்ந்தான். சபேசய்யருக்கு இலுப்பூர் வைத்தியைப்பற்றி-அதாவது கிட்டுவின் தகப்பஞரைப்பற்றித் தெரியும். "அப்பாவைப்பற்றிய பேச்சு வரும்போதெல்லாம் இகழ்ச்சியைத் தவிர வேறு ஒன்றையும்" அவன் கேட்டதில்லை. ஆனுல் சபேசய்யர் அவன் அப்பாவை இகழவில்லை. "என்ன சாரீரம்! வித்வத்திலும் குறைவில்லை. ஆனுல், அவ்வளவும் வக்ரம். ஒழுங்காயிருந்தாஞல் மகத்தான கீர்த்தியை அடைந்திருப்பான்... பிள்ளையை என்னிடம் ஈசுவர சங்கல்பம் கொண்டுவந்திருக்கிறது, பாருங்களேன்"என்ருர் சபேசய்யர். விஜயதசமியன்று கிட்டுவுக்கு வித்தியாப்பியாசம் ஆரம்பமாயிற்று.

ஒரு மனிதனுடைய சரித்திரத்திலே முக்கியமான நிகழ்ச்சிகள் எவ்வளவோ ஏற்படுகின்றன. அவற்றில் சரித்திர ரூபமாக நாவல் எழுத முற்படுகிற ஆசிரியன் எதை விடுவது, எதை வைத்துக்கொள்வது என்பதுதான் முக்கியமான பிரச்சினை. இந்தப் பிரச்சினையை சிதம்பர சுப்ரமண்யன் ஒரு தனி வழியில் தீர்த்திருக்கிருர். சம்பவம் சம்பவமாகக் கிட்டுவின் முன்னேற்றத்தை வெகு வேகமாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிருர். கதைகள் எழுதி எழுதிப் பழகிய அனுபவம் அவருக்கு—ஒவ்வொரு அத்தியாயத்தை

யும் ஒரு சம்பவத்தை அடிப்படையாகக் கொண்ட கதை மாதிரி அமைக்க உதவியிருக்கிறது. பல சம்பவங்களை மிகவும் விறுவிறுப்புடனும் வேகமாகவும் சித்திரித்திருக்கிறார் ஆசிரியர். உதாரணமாக ஒரு இடத்தில் வருகிற விஷயத்தைப் பார்ப்போம். கிட்டு தன் குருவின் வீணையை எடுத்து அதை மூளியாக்கி வைத்துவிட்டான். அப்போது குரு வீட்டில் இல்லை. திரும்பிவந்தார். "அவர் முகம் வாடியிருந்தது. போன காரியம் எப்படியோ?... காரணமின்றி சுற்றித்திரிந்த அவர் கண்களை மூலையில் கிடந்த வஸ்து பிடித்து இழுத்தது. ஒரு தாவுத்தாவி அதை எடுத்துப் பார்த்தார். அவருக்குத் திகைப்பாயிருந்தது. வீணையிடம் ஓடினார். ஆம்: அது மூளியாகி யிருந்தது. அவர் முகத்தில் பொறி பறந்தது. 'மகாதேவா!' என்று ஒரு கூச்சல் போட்டார். என்ன ஆவேசத்தை அது ஒலித்தது! 'மகாதேவன் எங்கேடா?' என்று பல்லைக் கடித்துக்கொண்டு கேட்டார். கிட்டுவிற்குப் பேச நாவெழவில்லை. அவன் உடல் உதறல் எடுத்தது. உதடுகள் துடித்தன. அவனுக்கு வார்த்தைகள் வரவில்லை. கண்ணிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிக்கொண்டிருந்தது. 'நான்தான்' 'நான்தான்' என்றான். அதற்குமேல் பேச்சு வரவில்லை. ஒரு நிமிஷம் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அவருக்குத் தெரிந்தது. 'தெரியாமல் செய்துவிட்டேன்' என்று கதறினான், விம்மலுக்கிடையே. அவர் முகத்திலே கொதித்த கோபம் மறு விநாடியில் கருணையைக் காட்டிற்று. சாந்தமாக 'இங்கே வா' என்றார். எதையும் வாங்கிக்கொள்ளத் தயாராகக் கிட்டு வந்தான். தனக்கு எந்தத் தண்டனை வேண்டுமானாலும் கொடுக்கட்டும். ஆனால், வீட்டை விட்டு வெளியே போகச் சொல்லாமல் மட்டும் இருந்தால் போதும் என்று இருந்தது அவனுக்கு... கிட்டுவின் தோள்மேல் கை வைத்துக்கொண்டு 'உனக்கு ஏன் இந்தப் புத்தி வந்தது?' என்றார். கிட்டுவிற்கு ஆயிரம்

ஈட்டிகளை வைத்துக் குத்தினதுபோல் இருந்தது இந்தக் கேள்வி. அவன் கண்களிலிருந்து வழியும் கண்ணீர் அவன் வேதனையை நன்கு வெளிக்காட்டியது. அவன் உதடுகள் அசைந்தன. ஆனால், வார்த்தைகள் ஏதும் வெளிவரவில்லை... சபேசய்யர் சொன்னார்: 'போனால் போகிறது. அது முன்பே விரிந்திருந்தது, ஏதோ நடந்துவிட்டது. ஆனால், நீ உண்மையை ஒப்புக்கொண்டாயே! அதுவே போதும், வீணை உயர்ந்ததுதான். ஆனால் உண்மை அதைவிட உயர்ந்தது' என்றார்.''

இந்த மாதிரியான சம்பவங்களும் சந்தர்ப்பங்களும் இதயநாதத்திலே பக்கத்துக்குப் பக்கம் இருக்கின்றன. ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நழுவ விட்டுவிடாமல் முழுசாகப் பயன்படுத்தியிருக்கிறார் ஆசிரியர். தன் குரு இறந்து போனபிறகுதான் கிட்டு தன் தாயாரைத் தேடிக்கொண்டு போனான். ஆனால், அவன் போய் விசாரித்தபோது அவள் காலமாகி ஆறு வருடங்களாகி விட்டதாகத் தெரிந்தது. அப்பனைப் போலத்தான் பிள்ளையும் என்று எண்ணிக் கொண்டுதான் உயிர்விட்டிருப்பாள் அவள், பாவம்!

சபேசய்யரின் நண்பர் ஒருவரின் புத்திமதியின்பேரில் தஞ்சாவூரிலே தங்கினான் கிட்டு. திருவையாற்றில் அவனுடைய குரு பத்தினி அவனுக்கு விவாகம் நிச்சயித்துவிட்டாள் - தன் தங்கை பெண் நீலாவை. கல்யாணமும் நடந்தது. கிட்டுவின் புகழ் வழக்கமான வழிகளில் முன்னேறியது, ஆனால், பணத்துக்காகப் பாடுவது எவ்வளவு அகௌரவம் என்று தெரிந்துகொள்கிறான். ''பணம் மனிதனுடைய தன்மையையே அடிமைகொண்டு விடுகிறது...சங்கீதம் விலைக்கு வாங்கக்கூடிய பொருள் அல்ல என்று ஜனங்கள் அறியவேண்டும். சங்கீதத்தைப் பக்தியுடன் கேட்கவேண்டும், அப்படிப்பட்ட இடத்தில்தான் நான் இனிப் பாடப்போகிறேன். பணத்திற்காக பாடும் வழக்கம் இன்றோடு தொலைந்தது'' என்றான் கிட்டு.

லக்ஷ்யத்துக்கும், வாழ்க்கைக்கும் நடந்த போராட்டத்திலே அவன் மனைவியும் அவனுக்கு உதவவில்லை, அவன் நண்பர் என்று கருதிய கந்தசாமி பாகவதரும் உதவவில்லை. அவன் மனைவி நீலா அவன் வாழ்க்கைப் பாதையைக் கரடு முரடானதாக்கிக் கொண்டிருந்தாள். "கிட்டுவின் மனத்தை நிரப்புவதற்கு நாத வித்தை இருந்தது. நீலாவிற்கு வாழ்க்கையை இன்ப மயமாக்க வேண்டும் என்ற கனவுகள் இருந்தன." இந்தக் குணவேற்றுமைகள் நாளுக்குநாள் விசுவரூபம் எடுத்தன. இந்தப் போராட்டத்தை அளவு மீற விடாமல், அவசியத்துக்கும் குறைவாகவே வர்ணித்திருக்கிறார் ஆசிரியர் என்று சொல்லவேண்டும். கிருஷ்ண பாகவதர் ஆகிவிட்ட கிட்டுவின் மனத்திலும் வீட்டிலும் அமைதியில்லை.

இந்த நிலையிலே பாலாம்பாள் என்று கும்பகோணத்துத் தாசி ஒருத்தி அவரைக் குருவென்று வந்தடைந்தாள். தஞ்சாவூரிலேயே ஜாகை அமைத்துக்கொண்டு வந்துவிட்டாள் பாலாம்பாள். ஊரெல்லாம் அதுபற்றி வம்புதான், பாகவதருக்கு மார்புவலி கண்டபோது, நீலா அலக்ஷியமாக இருக்கிறாளே என்று பாலாம்பாள் மருந்துபோடப் போனாள். "அம்மா! தொட்டுத் தாலிகட்டின பொம்மனாட்டிக்கு மேலேதான் உனக்கு மனசு பதறுகிறது. கொண்டா தைலத்தை" என்று அவள் கையிலிருந்து அதைப் பிடுங்கினாள் நீலா. பாலாம்பாள் கண்ணீர் உகுத்தாள்: "ஆனால், இங்கே வலியால் தவிக்கும் ஜீவன் உங்களுக்கு மாத்திரம் சொந்தமில்லை" என்றாள் பாலாம்பாள். "எனக்கு ஒரு வேதனை போதும்" என்றார் பாகவதர். அடுத்த சந்தர்ப்பத்திலும் பாலாம்பாள் கிருஷ்ண பாகவதரிடம் "நீங்கள் என் ஹிருதயத்தில் இருக்கிறீர்கள்" என்றாள். அதைப் புரிந்துகொண்டதாகவே அவர் காட்டிக்கொள்ளவில்லை. ஆனால், மறுபடியும் ஒருதரம் பாடிய பின் பாலாம்பாள் அப்படிச் சொல்லவே, கிருஷ்ணபாகவதர்

சொன்னார்: "நான் நாதத்தை மகத்தான யோகமாகவே உபசரித்து வந்தேன். சங்கீதம் மனத்திலே தூய்மையான எண்ணங்களைத்தான் உண்டுபண்ணும் என்று எண்ணியிருந்தேன். என் பாட்டு கேவலம் மிருக இச்சையைத்தான் தூண்டுமானால், என் சங்கீதம் போய். நான் பாடுவதற்கே லாயக்கில்லாதவன்" என்று சொல்லிவிட்டு வெளியேறி விட்டார். அதை அடுத்து அவர் சாரீரமும் ஒடுங்கிவிட்டது. அந்த நெருக்கடியில் கந்தசாமி பாகவதர் அவர் கண்களைத் திறந்துவிட்டார். "அப்பா கிட்டு, நீ நாதத்தின் எல்லையைக் கடந்துவிட்டாய். அடுத்த படியில் உள்ளது மௌனம். அதற்கு நீ வந்துவிட்டாய்" என்றார். "செவிகள் கேட்கும் இனிய கீதத்தில் ஈடுபட்டது போக, செவிக்கு எட்டாது நிற்கும் பரமகீதத்தில் ஈடுபடப் போகிறாய்" என்றார் அவர்.

"பகவானைக் குரல் கொடுத்து கூப்பிட்டுவந்த நான், இனி என் இதயத்தால் கூப்பிடுவேன்" என்றார் கிருஷ்ண பாகவதர்.

இதயநாதம் தமிழ் நாவல் இலக்கியத்தில் ஒரு தனிப் பெரும் சிகரம்.

4. எஸ். வையாபுரிப் பிள்ளை: இலக்கியக் கட்டுரைகள்

# தமிழ்ச்சுடர் மணிகள்

எனக்கு எப்பொழுதுமே பேராசிரியர்கள், ஆராய்ச்சித் துறைத் தலைவர்கள் என்றால் சற்றுப் பயம்தான். நமக்கு எங்கெந்த இடத்தில் சந்தேகங்கள் எழுகின்றனவோ, அங்கெல்லாமே அவர்களுக்கும் சந்தேகம். நாம் சந்தேகத்தை ஏற்றுக்கொண்டுவிடுவோம்—அவர்கள் சந்தேகத்தை வெளிப்படையாகச் சொல்லிவிட்டு நகர்ந்துவிட மாட்டார்கள். குட்டை குழப்பி நம்மை மேலும் குழம்பச் செய்து விடுவார்கள். இது போன்ற காரணங்களால் நான் சாதாரணமாகப் பேராசிரியர்கள் பக்கம் போகாமல் தூர விலகிவிடுவது வழக்கம். என் சந்தேகங்களை என் போன்ற மாணவர்களையும், அறிவிலிகளையும் கொண்டே தீர்த்துக் கொள்ள முயலுவது தான் என் வழக்கம். தெளிவுள்ள ஒரு பேராசிரியரை, அதுவும் ஒரு தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவரைக் காணும் வாய்ப்பு எனக்கு 1943-ல், நண்பர் சொ. விருத்தாசலம் என்கிற புதுமைப் பித்தன் தயவால் கிடைத்தது.

பொதுவாக இந்திய இலக்கியங்களில், அதுவும் சிறப்பாகத் தமிழ் இலக்கியத்தில், எதற்கு முந்தி எது என்கிற கால ஆராய்ச்சி இன்று வரை சரிவர நடந்ததேயில்லை என்று தான் சொல்லவேண்டும். கால ஆராய்ச்சி அவ்வளவாக அவசியமில்லை; அறிஞன் காலத்தைத் தாண்டியவன் என்கிற ஒரு (அ)லக்ஷிய பாவத்துடன் தான் இலக்கிய சரித்திரம் நம்முடையே பேசப்பட்டு வந்திருக்கிறது என்று சொல்லவேண்டும். இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில் காலவரையறை மிகவும் அவசியம் என்று மேல் நாட்டு

இலக்கிய விமர்சகர்கள் நினைப்பது போலவே, ஒரு தமிழ்ப் பேராசிரியரும் எண்ணுகிருர் என்பதை நான் வையாபுரிப் பிள்ளை அவர்களைச் சந்தித்தபோதுதான் அறிந்து கொண்டேன். மற்றப்படி இலக்கியத்தில் பழசையும் புதுசையும் ஒருமுகமாகப் போற்றுகிறவர் அவர் என்று அறிந்து அவரிடம் எனக்கிருந்த மதிப்பு அதிகரித்தது. அன்று முதலே வையாபுரிப் பிள்ளை எங்கே என்ன எழுதி யிருந்ததாகக் கேள்விப்பட்டாலும் தேடி வாங்கிப் படிப்பது என்று வழக்கப்படுத்திக் கொண்டேன்.

நான் பண்டிதனல்ல. தமிழையோ, வேறு எதையுமோ 'முறையாக', அதாவது பள்ளிப் பாடமாகப் படித்தது கிடையாது. பண்டைய இலக்கியங்கள்பற்றி ஓரளவு தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆசை லேசாக உண்டே தவிர, பழசையே போற்றவேண்டும், பழசைத் தவிர வேறு எதையும் கண்ணாலும் காணலாகாது என்கிற கொள்கையுள்ளவனல்ல. பழசைப் பற்றி விரிவாக ஆராய எனக்கு வசதிகளும் கிடையாது என்பதனுல், அனுபவிப்பதைத் தவிர வேறு எதற்கும் அவகாசம் ஏற்படுத்திக் கொள்வதில்லை. ஆகவே ஒரு பத்து வருஷங்களில் வையாபுரிப் பிள்ளை சொல்லுகிற விஷயங்களில் பெரும்பான்மையையும் அப்படியே ஏற்றுக்கொள்வது என்கிற மனப்பான்மை எனக்குப் படிந்துவிட்டது. அந்தப் பழக்கம் சுலபமாக இருந்தது மட்டுமல்ல; வையாபுரிப் பிள்ளை கூறும் காரண காரியங்களும் அவ்வளவு தெளிவாகவும் நம்பத் தக்கனவாகவும் இருந்தன. தமிழ் வாசிப்பவர்களில் என்னைப் போன்றவர்கள் பலர் இருக்கிருர்கள் என்பது எனக்குத் தெரியும். அவர்களுக்கெல்லாம் வையாபுரிப் பிள்ளை அவர்கள் சொன்னது தான் கடைசி வார்த்தை. அதை மீறி வேறு எதையும் ஏற்றுக்கொள்ள இன்று வரை அவசியம் ஏற்படவில்லை. பின்னுல் ஏற்பட்டால் பார்த்துக்கொள்ளலாம்.

ஒரு பொறுப்புடனும், பக்ஷபாதமற்ற ஆராய்ச்சி மனோநிலையுடனும் பல்வேறு சந்தர்ப்பங்களில் அவர் செய்த பிரசங்கங்களும், பல்வேறு பத்திரிகைகளுக்கு அவர் எழுதிய கட்டுரைகளும் தான் இப்போது பல புஸ்தகங்களாக வெளி வந்திருக்கின்றன. இவற்றில் எது விசேஷமாக நன்றாக இருக்கிறது, எதைப் பாராட்டுவது, எதை விடுவது என்று தீர்மானிப்பது சற்றுச் சிரமமான காரியமே. தமிழ்ச் சுடர் மணிகளை நான் இங்கு தேர்ந்தெடுத்ததற்கு ஒரே ஒரு காரணம் தான். அவருடைய மற்ற புஸ்தகங்கள் எதற்கும் அது தாழ்ந்தல்ல. தவிரவும், அதில் பல தலைப்புகளில் தொல்காப்பியர் முதல் டாக்டர் உ. வே. சாமிநாதையர், தேசீய கவி சுப்பிரமணிய பாரதி, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை வரையில் பலரைப் பற்றிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு கட்டுரையும் குறிப்பும் செய்தியும் வையாபுரிப் பிள்ளை அவர்களின் சொந்த முத்திரை பெற்றதுதான்.

தமிழ்ச் சுடர் மணிகளில் 409 பக்கங்கள் இருக்கின்றன. இதில் ஒரு 50 பக்கங்கள் தேசீய கவி சுப்பிரமணிய பாரதியைப் பற்றியவை. வாழ்க்கை என்ற தலைப்பில் 5 பக்கங்கள். நான் கண்ட பாரதி என்ற தலைப்பில் ஒரு 5 பக்கங்கள். மூன்றாவதாக உள்ளமும் கவிதையும் என்கிற தலைப்பில் 40 பக்கங்கள்.

நான் கண்ட பாரதியிலிருந்து இதோ ஒரு பகுதி: "1918-ம் வருஷம் நவம்பர் மாதம் ஒரு ஞாயிற்றுக்கிழமை; சுமார் 3 மணி இருக்கும். சைவப்பிரகாச சபையில் நானும் நண்பர்களுமாக வழக்கம்போல் திருக்குறள் ஆராய்ச்சி நடத்தக் கூடியிருந்தோம். வந்து சேர வேண்டியவர்களை எதிர்பார்த்து எதிர்பார்த்துச் சற்றுச் சலிப்புற்றோம். யாரேனும் வருகிறார்களா என்று வாசற்படியில் நின்று நான் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

"அப்பொழுது வாசல் நடையை அடுத்துள்ள பெரிய தெருவில் ஒருவர் போய்க் கொண்டிருந்தார். சுமார் முப்பத்தைந்து வயதிருக்கலாம்; கம்பீரமான தோற்றம்; நடுத்தரமான உயரம்; வீர புருஷனுக் குரியதோர் நடை; ஆவலுடன் எங்கும் கூர்ந்து கவனிக்கும் அஞ்சாத பார்வை; புருஷ லக்ஷணமான மீசை.

"...திடீரெனச் சபையினுள்ளே புகுந்தார். அங்கே நின்று கொண்டிருந்த என்னை நோக்கித் தாம் யாரென்று தெரியுமா என்று கேட்டார். பாரதியாராயிருக்கலாமோ என்று சந்தேகித்தேன். ஆனாலும் திருவனந்தபுரத்துக்கு வரக் காரணமில்லையே என்று நான் நினைத்து, 'தெரியவில்லையே' என்று சிறிது வருத்தத்துடன் சொன்னேன். தாமே சுப்பிரமணிய பாரதி என்று தெரிவித்தார்.

"எனது நெல்லை நண்பர்களுள் ஸ்ரீ வ. வேதநாயகம் பிள்ளையவர்களும், ஸ்ரீ சோமசுந்தர பாரதியவர்களும், ஸ்ரீ பி. ஸ்ரீ ஆச்சாரியா அவர்களும் என்னிடத்தில் சுப்பிரமணிய பாரதியின் அபாரமான கவித்வ சக்தியை அடிக்கடி பாராட்டிப் பேசியிருக்கிறார்கள். பாரதியின் உயிர்த்தத்துவம் நிரம்பிய பாடல்களை நானும் வாசித்து இன்புற்று இருக்கிறேன். ஆனால் அன்றுதான் அவரை நேரில் சந்தித்தது.

"இன்னாரென்று தெரிந்ததும், எனக்கு இன்னது செய்வதென்று புரியவில்லை. சிறிது நேரம் தயங்கி நின்றேன். பிறகு உள்ளே அழைத்துச் சென்று உபசரித்தேன். அங்கே கூடியிருந்தவர்களுக்கு அறிமுகம் செய்வித்தேன். அவர்களில் ஒரு சிலருக்கே பாரதியைக் குறித்துத் தெரியும்; தெரிந்த விஷயமும் அவர் அரசாங்கத்தாரின் கவனத்திற்குரிய சர்க்கார் விரோதி என்பது ஒன்றுதான். அவருடைய பல திறப்பட்ட கவித்திறனும், அவருடைய பாடல்களும், மலைக்கு அப்பாலுள்ள அந்தப் பிரதேசத்தில் அக்காலத்தில் அவ்வளவாகத் தெரியாது.

"பேசிக் கொண்டிருக்கும்போது சிறு சம்பவம் நிகழ்ந்தது. பாரதியாருக்குத் தாகம் அதிகமாயிருக்கிற தென்பதைக் குறிப்பால் உணர்ந்தேன். உடனே 'ஐஸ்' இட்டு ஆரஞ்சு நீர் கொண்டுவரும்படியாக ஒருவனை அனுப்பினேன். இதைத் தெரிந்துகொண்டு 'தண்ணீர் போதுமானது' என்று அவர் கூறினார். அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் பிராமணர்கள் அல்லரென்று சொன்னேன். பாரதி கண்ணில் தோன்றிய ஒரு அபூர்வமான ஜோதி என்னை வாட்டிற்று. தாம் அவ்வாறான சாதி வேறுபாடுகளைப் பாராட்டுவதில்லை என்று சிறிது கடுமையாக எனக்குத் தெரிவித்தார்.

"பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே என்றும், "எல்லோரும் ஒன்றென்னும் காலமும் ஆச்சே என்றும், அவர் தமது சுதந்திரப் பள்ளிற்பாடி யுள்ளமை எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. முடிவில், நான் கொண்டுவரச் சொன்ன பானத்தையே உண்டு தாகசாந்தி செய்துகொண்டார்.

"...சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா' என்று தொடங்கும் பாடல்களைப் பாடும்படிக் கேட்டுக்கொண்டேன். பாரதியார் கண்கள் ஒரு நிமிஷம் மூடுண்டன. முகத்திலே புதியதொரு பொலிவு. அன்பு ததும்பும் சாரீரத்தில் பாடத் தொடங்கி எங்களைப் பரவசப்படுத்தினார்.

"பின்னர் ஊழிக்கூத்துப் பாடலைப் பாடும்படி வேண்டினேன். இப்பொழுது நீண்டநேரம் அவர் கண்கள் மூடியிருந்தன. முகத்திலே ஒரு துடிதுடிப்பு; சரீரம் முழுவதிலும் ஒரு வேகம், 'வெடிபடும் அண்டத் திடிபல தாளம் போட' என்ற சொற்கள் கம்பீரத்தோடு வெளிவந்தன. ஒவ்வொரு சொல்லும், ஒவ்வோர் அடியும் அவரது ஆத்ம சக்தியினின்று பொருளும் ஆற்றலும் பெற்று, எங்கள் மனக்கண்முன் கூத்தாடின. உலகம் தகர்வது, ஊழிமுடிவது, ஒன்றொன்றும் கண்முன் நிகழ்வதுபோல இருந்தது.

பாட்டின் பொருளோடு ஒன்றுபட்டு லயித்து அவர் பாடும் போது அவர் கண்கள் சுழன்றன. கருவிழிகள் மேலேறி மறையத் தொடங்கின. 'ஊழிக் காலத்தில் அகப்பட்டு விட்டோம்!' என்ற பீதி எங்களுக்கும் உண்டாயிற்று. சங்கீதத்தின் ஆற்றலை அன்று நான் உணர்ந்ததுபோல் ஒருநாளும் உணர்ந்ததில்லை.

"பிரசங்கம் செய்ய ஏற்பாடு செய்தால் ஒத்துக்கொள்ளலாம் என்று எனக்குக் கூறினர்...பிரசங்கம் ஏற்பாடு செய்வதற்கு என் நண்பர்களோடு கலந்தேன். அவர்களில் பெரும்பாலோர் உத்தியோகஸ்தர்களானபடியால் இணங்கவில்லை, அவருள் ஒருவர் எங்களைத் தெருவில் நிறுத்திக் கொண்டு, பிரசங்கத்தைப்பற்றி ஒரு நீண்ட பிரசங்கம் செய்துமுடித்தார்... பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்ய முடியவில்லை என்று பாரதியாருக்குத் தெரிவித்துவிட்டேன்,

"இதற்கு அப்புறம் பாரதியைக் காணும் பேறு எனக்கு வாய்க்கவில்லை"

இந்தப் பகுதியைச் சற்று விரிவாக இங்கு தந்ததற்குக் காரணம் இது வையாபுரிப் பிள்ளை அவர்களின் நடைக்கும் பாணிக்கும் ஒரு சிறந்த உதாரணமாக அமைந்துள்ளது என்பதுதான். 'பாரதியின் உள்ளமும் கவிதையும்' என்ற நீண்ட பகுதியிலே பாரதியின் கவிதையை இலக்கிய நோக்குடன் வெகு விமரிசையாக விமரிசனம் செய்திருக்கிறார். டாக்டர் சாமிநாதையர் அவர்களைப்பற்றியும் விரிவாக எழுதியிருக்கிறார். நடு நிலைமை தவறாமல், ஆராய்ச்சி மனப்பான்மையுடன் எழுதப்பட்ட தமிழ்க் கட்டுரைகளில் சிறந்தது என்று அது இடம்பெறத் தகுந்தது. அவர் அந்தக் கட்டுரையை முடிக்கும் விதம் அலாதியான அழகுள்ளதாக இருக்கிறது,

"ஐயரது வாழ்வு நிரம்பிய வாழ்வு. காலத்தால் நிரம்பிய வாழ்வு; கல்வியாலும் ஆராய்ச்சியாலும் நிரம்பிய

வாழ்வு; பலதிறப்பட்ட பெருமையாலும், பரந்த புகழாலும் நிரம்பிய வாழ்வு. தமிழ்ப் புலமை யுலகில் ஐயர் தம் காலத்தில் தனியாட்சி புரிந்தார் என்றே சொல்ல வேண்டும். இந்நிரம்பிய வாழ்விற்கு மேலே குறித்த சில வாய்ப்பான நிகழ்ச்சிகள் காரணமாயின என்று சிலர் கருதலாம். இக்கருத்து சிறியதோர் அளவில் உண்மையே. அவ்வாய்ப்புகளில் பல வேறு சிலருக்கும் உளவாயிருந்தன. அவர்கள் பெயர்களையேனும் தற்காலத்தவர்கள் அறிவார்களா? அறியமாட்டார்கள். இவ் வாய்ப்புகளைப் பயன்படுத்தி, தமது ஊக்கத்தாலும், சலிப்பறியாத உழைப்பினாலும், இடைவிடாத கல்வியினாலும், ஆராய்ச்சியினாலும், தமது வாழ்வை நிரம்பிய வாழ்வாக ஐயரே செய்து கொண்டார் என்பதுதான் உண்மை...இந்நிரம்பிய வாழ்வினால், தமிழன்னைக்கு மதிப்பரிய பெருந் தொண்டாற்றிய பெரும் பேராசிரியர் டாக்டர் சாமிநாதையர். இவருடைய பூத உடம்பு இப்பொழுது மறைந்துவிட்டது. ஆனால் இவர் புகழுடம்பு சென்னைக் கடற்கரையிலே, அரசாங்கக் கல்லூரியின் முகப்பிலே, சிலைவடிவாக நின்று காட்சியளிக்கிறது. தமிழ்க் காதல் நிரம்பி யமைந்த திருமேனி; தமிழ்ச் சுவடிகள் இருக்கும் இடங்கட்கெல்லாம் ஓடியோடிச் சென்ற திருவடிகள்; ஏட்டுச்சுவடிகள் பெற்று ஆனந்தாதிசயத்தால் விதிர் விதிர்க்கும் திருக்கரங்கள்; தமிழின் பெருமையையும் தமிழின் தொன்மையையும் நினைத்த மாத்திரத்தில் உள்ளத்தே ஓங்கி வருகின்ற உவகையால் ஓங்கி யமைந்த திருப்புயங்கள்; தமிழ் ஒளியும் தமிழ் அறிவும் ஒருங்கு விளங்குகின்ற திருநயனங்கள்; தமிழ்த்தொண்டு எனும் தவத்துறையிலே நெடுங்காலம் முழுகி முதிர்ந்த திருக்கோலம்—இவை நமது கண்ணுக்கு விருந்தாய் அமைந்து நிற்கின்றன.''

தொல்காப்பியரையும், வள்ளுவரையும், சங்க காலத்துக் கபிலரையும், கம்பரையும், மாணிக்கவாசகரையும்,

பவணந்தியையும், பரிமேலழகரையும், குமரகுருபரரை யும், இராமலிங்க சுவாமிகளையும், ஆசிரியர் சுந்தரம்பிள்ளை யையும், வி. கனகசபைப் பிள்ளையையும், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையையும் மற்றவர்களையும் இதேபோல நமக்கு மிகவும் நெருங்கியவர்களாக அறிமுகம் செய்து வைக்கிறார் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள். இந்தப் பேராசிரியருக்கு என்னவோ மலையாளப் பிரதேசத் தில் ஒரு மோஹம்—அது காரணமாகவே தொல்காப்பிய ரையும் மற்றவர்களையும் மலைநாட்டினருடன் தொடர்புள் ளவராக விவரிக்க முயலுகிறார் என்று சொல்ல முடியாத படி ஆராய்ச்சி நடத்துகிறார். சாதாரணமாகப் பண்டிதர் களும் பாமரர்களும் ஏற்றுக்கொள்ளுகிற பழைய கால வரையறைகளை இவர் ஏற்றுக்கொள்வதில்லை என்பது பற்றிப் பண்டிதர்களிலே ஒரு சாராருக்குக் கோபம் என்று நான் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் தொல்காப்பியரின் காலத்தையும், கம்பரின் காலத்தையும் அவர் விவாதமுறை யில் நிர்ணயித்திருப்பதைப் பார்க்கும்போது, இதை மீறி யாரும் எதுவும் சொல்லிவிடமுடியாது என்றுதான் என் போன்றவர்களுக்குத் தோன்றுகிறது.

பண்டைத் தமிழ் இலக்கியத்தையும் இன்றைய தமிழ் இலக்கியத்தையும் பற்றிச் சலிப்பில்லாமல் படிக்கக் கூடிய 400 பக்கங்கள் கொண்ட ஒரு நூலை இயற்ற முடி யும் என்று சாதித்துக் காண்பித்தவர் வையாபுரிப் பிள்ளை. இது அவர் தனிப்பெருமை.

5. லா. ச. ராமாமிருதம்: கதைகள்

# ஜனனி

சந்திரோதயம் என்ற பத்திரிகையில் லா. ச. ராமா மிருதம் அவர்களின் கதையொன்றை நான் வெளியிட்ட போது, ஒரு இலக்கிய நண்பர் "ஏன் ஸார், இந்த ஆசிரியர் எப்போதும் என்னைப் போன்ற பலருக்குப் பிடிக்காத விஷயங்களைப் பற்றியே எழுதுகிறார்?" என்று கேட்டார்.

"பலருக்கும் பிடிக்காத விஷயம் அவருக்குப் பிடித்த தாக இருப்பதனால்" என்று சுலபமாகவே பதிலளித்து விட்டேன் நான். ஆனால் என் பதில் நண்பருக்குத் திருப்தி யளிக்கவில்லை என்பதை அவர் முகபாவத்தில் கண்ட நான் மேலும் சொன்னேன்: "எனக்குப் பிடித்த விஷயத்தைத் தான் ஒரு ஆசிரியர் எழுத வேண்டுமென்று கட்டாயப் படுத்த முடியாது. ஆசிரியர் தானாக விரும்பி எழுதுகிற விஷயத்தைப் பூரணமாக, திருப்தியாக எழுதிவிட்டால் போதும் என்று சொல்வதுதான் சரி. இலக்கிய பூர்வமாகப் பார்க்கும்போது லா. ச. ரா-வின் கதைகள் ஒரு பூரணத் தைக் காட்டுகின்றன. அதனாலேயே அவற்றை நல்ல கதை கள் என்று சொல்ல வேண்டும்" என்றேன்.

"பிடிக்காத விஷயத்தையும் பூரணமாகச் சொல்லு கிறார் என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இந்த விஷயங்கள் எல்லாம் பற்றிக் கதைகள் எழுத வேண்டுமா? வேறு நல்ல, சர்வஜன ரஞ்சகமான விஷயங் கள் பற்றி எழுதக்கூடாதா என்றுதான் எனக்குக் கேட்கத் தோன்றுகிறது!" என்றார் இலக்கிய நண்பர் விடாப்பிடியாக.

ப—3

அவர் சொன்னது உண்மைதான். லா. ச. ரா. கையாளுகிற கதைப் பொருள்களைத் தமிழில் வேறு யாரும் கையாண்டதில்லை. இனிமேல் கையாளக் கூடாது என்பதில்லை; இதுவரை எடுத்தாண்டதில்லை யாரும் என்பதை அவருடைய தனிச் சிறப்புகளில் ஒன்ருகச் சொல்லலாம். அவருடைய தனித் தன்மையை விஷயம் மட்டுமின்றி அவருடைய பாணியும் நடையும்கூடக் கோடிட்டு அழுத்திக் காட்டுகின்றன. அபூர்வமான உருவம் படைத்துவிட்ட கதைகளின் ஆரம்பமும் முடிவும், நடையும் ஓட்டமும் அவருக்கே உரிய ஒரு வேகத்துடன், ஒரு மயக்கத்துடன் அமைந்திருக்கின்றன என்பது விசேஷம்தான். இந்த மாதிரி ஒரு தனித் தன்மையுடன் தமிழில் இன்றுவரை பலரும் கதைகள் எழுதி விடவில்லை. அவருடைய கதையில் ஒவ்வொரு பாராவிலுமே, ஒவ்வொரு வாக்கியத்திலுமே, லா. ச. ரா. முத்திரை சிறப்பாக விழுந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இந்த ஜனனி என்கிற அவருடைய முதல் சிறு கதைத் தொகுப்பில் ஒவ்வொரு பிரதியிலும் அவரே கையெழுத்திட்டு முகவுரை எழுதியிருப்பது தகும் என்று சொல்லவே எனக்குத் தோன்றுகிறது.

இந்தக் கதைகளில் எனக்கு மிகவும் பிடித்த கதை 'கொட்டு மேளம்'. இந்தக் கதையின் வார்ப்பும் உருவமும் அற்புதமாக அமைந்திருக்கின்றன. நுணுக்கமான ஒவ்வொரு சிறிய அம்சமும் அதனதன் இடத்திலே பொருத்தமாகவிழுந்து ஒரு பூரணமான கதையைத் திறமையுடன் நடத்திக் காட்டுகிறது. ஐரோப்பிய இலக்கியத்தின் கடைசிக் கொழுந்து என்று போற்றப்படும் ஜேம்ஸ் ஜாய்ஸின் உத்திகளிற் சிலவற்றை வெகு வெற்றிகரமாக இந்தக் கதையில் கையாண்டிருக்கிருர் ஆசிரியர் லா. ச. ராமாமிருதம்.

"பரதேசிக் கோலம் படி தாண்டி விட்டது. அப்புறம் அவளுக்குத் தாளவில்லை...'இருந்திருந்து இன்னிக்கும்

மாடியிலே இருப்பேனே? என்னை இதிலே வெச்சு மெது வாக் கீழே இறக்கி அவாள்ளாம் வரத்துக்கு முன்னாலே கூடத்து உள்ளே கொண்டு போயிடுங்கோ. இரு இரு. சின்னம்மா, மயிரைக் கொசஞ்ம் கோதி முடிஞ்சு விடு. பீரோவைத் திற. அந்தக் கிளிப் பச்சையை எடு. அது தான்...'

"'பட்டுப் புடவையாம்மா?'"

"ஏண்டி? என்னைப் பார்த்தா உடுத்திக்கிற மாதிரி இல்லையா? இந்தக் கலியாணத்துக்கில்லாமே எப்போ உடுத்திக்கிறதாம்? சரி சரி. நான் ரெடி. மேளம் நெருங் கறுப் போல இருக்கே. ஐயர் உங்களைத் திட்டாமே பாத் துக்கறேன். என்னைக் கீழே சேத்துடுங்கோ.'

"உள்ளங் கையில் ஏந்தினாற்போல்தான் அவர்கள் அவளைக் கீழே கொண்டு போனாலும், அந்தப் பிரயாசை கூட அவளுக்குத் தாங்கவில்லை. நரம்புகள் மார்பில் சுருட்டியடைத்தன. மூச்சுத் திணறிற்று...கூடத்து அறை யில் சேர்ந்துவிட்டோம் என்று நிச்சயப்பட்டதும், ஜானு வுக்குத் திடீரெனக் கண்கள் இருட்டின.

"'சின்னு, ஒரு முழுங்கு தீர்த்தம் கொண்டு வாயேன்!'

"மேளச் சப்தம் நெருங்கிக் கொண்டே வந்தது. மேள நாதம் தூரத்திலிருந்து நெருங்கிக் கொண்டே வந்து அவளுள் பொழிந்து ஒரு பரபரப்பைப் பரப்பியது. அவள் விழுங்கியது ஜலமா அல்லது அந்த நாதத்தின் விரு விருப்பா என்று நிச்சயமாய்த் தெரியவில்லை. உடல் பர பரத்தது. அந்த இன்ப வேதனை தாங்க முடியாது நாற் காலியைவிட்டு எழுந்து அங்குமிங்குமாய் எங்கேனும் ஓடலாமா என்று தோன்றுகிறது. ஆனால் அவளை அவள் உடல் நாற்காலியோடு தான் அறைந்து வைத்தது...

"நாயனத்தின் வாசிப்பைவிட மேளத்தின் சப்தம் தான் தூக்கி நின்றது. யாரோ சின்னப் பயல். முழு உற் சாகத்துடன் வெளுத்து வாங்குகிறான். வேளையின் சந்தோ

ஷமே அவன் மேளத்திலிருந்து குண்டு குண்டு மணிகளாகத் தெறித்து, கலியாணகூடம் முழுவதும் சிதறி ஓடி உருண்டு, பந்துகள்போல் எகிறி எழும்பியது...மேளத்துள் சலங்கை குலுங்கி அதிர்ந்தது.

"இந்தச் சம்பவத்திற்குத்தான் சந்துரு இருபத்திரண்டு வருடங்களாய்க் காத்திருந்தானே என்னவோ, ஜானு அறியாள். ஆனால் அவள் நிச்சயமாய்க் காத்திருந்தாள். புருஷாளுக்கு இதிலெல்லாம் ஆசை ஓடுமோ ஓடாதோ? ஆனால் சந்துருவுக்குக் கலியாணமான பிறகு இன்றுதான் கொட்டு மேளத்தின் சப்தம் வீட்டில் கேட்கிறது...

"எப்படிப்பட்ட கிழமாயிருந்தாலும் அதற்குக்கூட இத்தகைய சமயங்களில் தனக்கும் இம்மாதிரி நடந்ததெல்லாம் நினைவு வருமோல்லியோ?"

ஜானுவுக்குத் தன் கலியாணத்தின் நினைவு வருகிறது. தொடர்ந்து மூன்று வருஷங்கள் முழுக்க ஆகுமுன், வெள்ளிக்கிழமையாய்ப் பார்த்து, காலன் அவள் கழுத்துக் கயிற்றைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டான். ஜானுவின் அண்ணு சந்துரு "எனக்கு நீ, இனி உனக்கு நான்..." என்ருன். அண்ணனும் தங்கையும் மிகவும் நெருக்கமானுர்கள். சந்துருவுக்கு மனைவி என்று ஒருத்தி ஏற்பட்டபின், இந்த நெருக்கம் விபரீதமாகப் பட்டது. "என்னை என் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடுங்கள்" என்ருள் சந்துருவின் மனைவி கௌரி. "இந்த வீட்டில் உங்க தங்கைக்கும் எனக்கும் சேர்ந்து இடமில்லை" என்ருள். அப்போது கௌரி கர்ப்பம். அவள் பிறந்தவீடு போய்விட்டாள். கௌரி மூலமாக ஜானுவின் நற்பெயருக்கே அவள் பள்ளிக்கூடத்தில் கூட ஆபத்து வந்துவிடுகிறது. "'ஸிஸ்டர்—சந்துரு என் அண்ணு'" என்று ஜானு அலறினுள். ஸிஸ்டர் அவளிடம் வந்து அவள் தோள்மேல் கை வைத்தாள். அவள் கண்கள் கலங்கியிருந்தன. "'எனக்கு அது தெரியும் ஜானு. உன்னை ஜாக்கிரதைப் படுத்தவே உன்னைக் கூப்பிட்டேன்.

இது பொல்லாத உலகம். சுத்த அல்பம். மானங்கெட்ட உலகம்...இதெல்லாம் நீ சமாளித்துக் கொள்ள வேண்டும் ஜானு. கோழையாக இருக்கக்கூடாது!' " விஷயம் அறிந்த சந்துருவுக்குத் தன் மனைவியிடம் கோபம் வந்தது. ஆனால் 'இப்போதைக்குக் காத்திருப்பதுதான் சரி' என்றான் அவன். 'நம்ம சொத்து அது. போய்க் கரகரன்னு இழுத்துண்டு வந்து இந்தக் கன்னத்திலே நாலு அந்தக் கன்னத்திலே நாலு கொடுத்தால் நல்ல மருந்தாகிவிடும்' என்பது அம்மா கட்சி. 'இல்லை; காலுக்கு உதவாத செருப்பைக் கழட்டி எறிஞ்சுடு. நமக்குச் சௌகரியமா இன்னொன்று பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்.'

" 'அதுவும் என் காரியமல்ல' என்றான் சந்துரு.

"காத்திருப்பதென்றால் என்ன?...மலைத்தொடர்கள் அசையாமல் நின்று கொண்டிருக்கின்றன. அவை காத்துக்கொண்டிருக்கின்றனவா? காத்துக் கொண்டிருக்கின்றன என்றால் எதற்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன...

"ஜானு நாளுக்குநாள் இளைத்துத் தேய்ந்தாள். பரீட்சைக்குப் பணம் கட்டினதுதான் மிச்சம்; பரீட்சைக்கு உட்கார முடியவில்லை. சப்தங்கள் இல்லாத இடத்தில் சப்தங்கள் கேட்டன. சப்தங்கள் இருக்கும் இடத்தில் காது செவிடாகிவிட்டது."

மன்னிதான் மந்திரம் மாயம் செய்துவிட்டாள் என்று ஊர் வதந்தி. ஜானுவுக்குப் பேயடித்த மாதிரியாகி விட்டது. "உடம்பில் நீர் வைத்துவிட்டது. அவளை ஆஸ்பத்திரியில் கொண்டுபோய்ச் சேர்க்கும் நிலைமை வந்துவிட்டது. ரத்தமாகக் கக்கினாள்...! ஜானு! உன் அண்ணாவுக்குப் பிள்ளை பிறந்திருக்காமே!" என்று யாரோ சொன்னார்கள் " 'அண்ணா! அண்ணா எனக்கு மருமான் பிறந்திருக்கானண்டா' என்றாள் ஜானு தன் அண்ணாவிடம். சந்துருக் கொட்டினான்...அத்தனை ரத்தம் கக்கியும் அந்த உட

வில் உயிர் இருந்ததுதான் அதிசயம். இன்னும் கக்குவதற்கு ரத்தம் இருந்ததுதான் அதிசயம்.

" 'அம்மா கஷ்டப்படுவாள் என்கிற துக்கத்தைத் தவிர எனக்குச் சாகப் போகிறேம் என்கிற பயமில்லே' என்ருள் ஜானு.

" 'உயிருடன் இருப்பது எவ்வளவு முக்கியமில்லையோ, அதேமாதிரி சில சமயங்களில் சாவதும் ஒன்றும் முக்ய மில்லே. சாவதையும் வாழ்வதையும்விட, எதற்காகச் சாகி ேறம், எதற்காக வாழ்கிறேம் என்பதுதான் முக்கியம், வாழ்க்கை வீம்பாகி விடும்போது அதில் சாவுக்கும் உயி ருக்கும் பிரமாத இடமில்லே. ஆகையால் நீ இப்பொழுது செத்தால், உன் சாவுக்கு நான் அழப்போவதில்லே. ஆனல் அது உன் தோல்வி என்றுதான் என்னுடைய பெரும் அழுகையாக இருக்கப்போகிறது. இன்று நீ செத்தால் ஊருக்காகச் சாகப்போகிருய். உனக்காகவே நீ சாகவில்லே. ஊர்ச்சொல் தாங்காமல் நீ சாகப்போகிருய், இந்த ஊருக்கு என்ன தெரியும்? உண்மைக்கும் பொய்க்கும் வித்தியாசம் தெரியுமா? எச்சில்பட்ட நாக்கு ஒன்றுதான் அதற்கு உண்டு. நீ உயிருடனிருந்தாலும் அதற்கு வேடிக்கைதான்; நீ இறந்தாலும் அதற்கு இன்னெரு வேடிக்கை. ஆகையால் நீ அவர்களுடைய வேடிக்கைக்காகச் சாகப்போகிருயா என்று தீர்மானம் செய்துகொள்' என்ருன் ஜானுவின் அண்ணன்."

ஜானு சாகவில்லே. "ஆனல் சாவு தப்பினலும் உடல் ஓட்டைச் சட்டிதான்." மருமானேப்பற்றிக் கற்பனேயில் கனவுகள் கண்டாள். ஆனல் மருமானும் மன்னியும் ஒரு நாள் வரவே வந்துவிட்டார்கள், மன்னிப்புக் கேட்டாள் மன்னி. ஆனல் "சந்துரு உள்ளூறக் கருகிப் போய்விட் டான். எவ்வளவு முயன்றும் அவனல் மறுபடியும் புஷ் பிக்க முடியவில்லே. 'என் குழந்தைக்கு அதன் தகப்பனேயே பரிச்சயம் செய்துவைக்கும் கட்டம்கூட வந்துவிட்டது

பார்த்தாயா!' என்று குமுங்கிக் குமுங்கிக் கருகிப்போனுன். வாழ்க்கை வதங்கிப் போவது ஆச்சரியமல்ல. ஆகவே வதங்கிப்போன நினைவு மாத்திரம் வாடாமல், வாசமும் இல்லாது இருக்கும் நிலைதான் பயங்கரம்...''

ஜானுவின் அண்ணு பிள்ளை ராமதுரைக்கு அன்று கல்யாணம், மருமானின் கலியாணத்தைச் சீக்கிரம் முடித்துப் பார்த்துவிட வேண்டுமென்றுதான் அவளுக்கு அவா. "கொட்டு மேளம் கொட்டுகிறது. இது எதற்கு? ராமதுரைக்கு மாத்திரமா? சந்துருவுக்கும்தான், தனக்கும்தான், ஏதோ இன்னும் தனக்குப் புரியாத முறையில் தன் மன்னிக்கும்தான். எல்லோருக்கும் இன்று ஒரு புதுக் கலியாணம் நடந்துகொண்டிருக்கிறது; வீம்பின் நித்திய கலியாணம்.

"தம்பதி சகிதமாய் ராமதுரை அத்தையை நமஸ்கரிக்க அறைக்குள் நுழைந்தபோது, ஜானுவின் முகத்தில் புன்னகை உறைந்து போயிருந்தது, தீராத் தாகம் தீர்ந்த முகத்தில்தான் அந்த பாவத்தைக் காண முடியும்.

"ஜானு தன் சுனை போய்ச் சேர்ந்துவிட்டாள்'' என்று முடிகிறது, இன்றைய தமிழ் இலக்கியத்தில் மிகச் சிறந்த கதைகளில் ஒன்று என்று சொல்லவேண்டிய 'கொட்டு மேளம்.'

"நாம் தெரிந்தோ தெரியாமலோ - இஷ்டப்பட்டோ, இஷ்டப்படாமலோ அர்ப்பணமானவர்கள். இந்த அர்ப்பணிக்கப்பட்ட தன்மையை நாம் அங்கீகரித்துக்கொண்டு விட்டோமானல், அவரவரின் உண்மையின் உள்ளத்தை ஓரளவு இப்பவே புரிந்துகொள்ள முடியும். இதனுல் நம்மையும் ஆட்டுவித்துக்கொண்டு தானும் ஆடிக்கொண்டிருக்கும் தெய்வத்திற்கோ, அந்தத் தெய்வத்திற்கும் காரணமாயுள்ள சக்தி எதுவோ அதற்கோ நாம் உதவி புரிந்தவர்கள் ஆவோம்'' என்று 'தபஸ்' என்று மகுடமிட்ட தன் முன்னுரையில் கூறுகிறுர் ஆசிரியர். இந்தச் சிந்தனைப் பின்

னணியில் உருவான கதைகளில் சிறப்பாக புற்று, ஜனனி, யோகம், அணுக்கள் என்ற கதைகளைச் சொல்லலாம். பூர்வா என்ற கதையில் ஒரு அற்புதமான பாவத்தை நமக்கு வடித் தெடுத்துத் தந்திருக்கிறார் ஆசிரியர். எழுத்தின் பிறப்பு, மஹாபலி போன்ற கதைகளில் லா. ச. ராமாமிரு தம் வார்த்தைகளுக்கு அடங்காத சில உணர்ச்சிகளை உணர்த்திக் காட்ட முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும்.

வாசிப்பவர்களைச் சற்றுச் சிரமப்படுத்துகிற கதாசிரி யர்தான் லா. ச. ராமாமிருதம். தூக்கத்துக்கும் விழிப்புக் கும் இடையில் உள்ள ஒரு நிலையில், அதிகமாகச் சிரமப் படாமல் பத்திரிகை படிப்பது போலப் படித்து முடித்து விடக்கூடிய கதைகளாக அவர் எழுதவில்லை. பல இடங் களில் பளிச்சென்று கண்களைப் பறிக்கிற மாதிரி விஷயத் துக்குப் பிரகாசம் தருகிற வாக்கியங்களைக்கூட அவர் தேவையை அறிந்து உபயோகிக்கிறாரே தவிர, ஜனங்களுக் குப் பிடித்தமாக இருக்க வேண்டுமே என்று எழுதுவ தில்லை. கையாளுகிற விஷயத்தை வாசகனுக்குத் தெளிய வைக்க வேண்டுமென்பதில் அவருக்குள்ள கருத்து, விஷ யம் பிடித்திருப்பதாக இருக்கவேண்டும் என்பதிலில்லை. இதை அவருடைய பலமாகவும் பல ஹீனமாகவும் ஒரே மூச்சில் சொல்லலாம்.

தமிழரது இந்தத் தலைமுறைச் சிறுகதை இலக்கியம், ஜனனி என்கிற கதைத் தொகுப்பின் மூலம் பிரமாதமான வளம் பெற்றிருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

6. எஸ். வி. வி. — ஹாஸ்யம்

# உல்லாசவேளை

பெந்தம்மாளை நீங்கள் அறிவீர்களா? அறிந்திருந்தால் பாக்கியசாலிகள் என்றே நான் கூறுவேன், இது என்ன இது, பெயரே விசித்திரமாக இருக்கிறதே என்கிறீர்களா? அப்படி நீங்கள் நினைக்கப் போகிறீர்களே என்பதற்காக, எஸ். வி. வி. யே பெந்தம்மாளை அறிமுகம் செய்துவைக்கும்போது சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிடுகிறார்.

"வாசுதேவையர் சம்சாரத்தின் பெயர் பெந்தம்மாள். பெந்து என்று அவர் கூப்பிடுகிறது வழக்கம். முழுப்பெயர் பெருந்தேவி. அது எப்படி எப்படியோ சிதைந்து பெந்து என்று வந்து நின்றது. ஒரு ஜட்ஜின் சம்சாரத்தின் பெயர் பெந்து என்றிருந்தால் சிரிப்பு வரவில்லையா? முன் காலத்துப் பேர்வழி. ஒரு பள்ளிக்கூடம் போனவளல்ல; இன்றைக்கும் ஒரு அக்ஷரம் தெரியாது. முன்காலத்தில் நாட்டுப்புறத்தில், 'ரெயிலை மாடுகட்டி இழுக்கிறதா, குதிரை கட்டி இழுக்கிறதா?' என்று சண்டை போடுவார்கள் என்று கேட்டிருக்கிறோமே, அந்த ரகத்தில் அந்த அம்மாளைச் சேர்க்கலாம். வாசுதேவையருக்கு தம் சம்சாரம் அப்படியிருப்பதில்தான் திருப்தி."

வாசுதேவையரையும், பெந்தம்மாளையும், அவர்களுடைய பெண்கள், பிள்ளை, மற்றுமுள்ள உறவினர்கள் நண்பர்கள் எல்லோரையும் சிருஷ்டித்து நம்மிடையே நடமாடவிட்ட எஸ். வி. வி. அவர்களுக்குத் தமிழர்கள் என்றும் கடமைப்பட்டவர்கள் என்றுதான் சொல்லவேண்டும்

தினசரி பழகி, விருப்பும் வெறுப்பும் கொள்கிற மனிதர்களை அறிகிற அளவுக்கு அவர்களையும் நாம் அறிந்து கொள்ள எஸ். வி. வி. யின் மேதை நமக்கு உதவுகிறது. எவ்வளவு நுட்பமாக எல்லாவற்றையும் கவனித்து, சுலபமாக மனத்தில் பதியும்படியாக விஷயங்களைச் சொல்லியிருக்கிறார் எஸ். வி. வி.! ஹாஸ்யமாக எழுதியதால்தான் அவருக்குப் பெருமை என்று சொல்லமுடியாது. உண்மைக்கும் கலைக்கும் விரோதமில்லாமல், முரண்பாடில்லாமல், அந்த ஹாஸ்யத்தைக் கையாள முடிந்தது என்பது தான் எஸ். வி. வி. யின் தனிச் சிறப்பு.

உல்லாச வேளை என்கிற நூலை நாவல் என்று சொல்வதா? கதைத் தொகுப்பு என்று சொல்வதா? வெறும் கட்டுரைகள் என்று சொல்வதா? மூன்றுமே சொல்லலாம். இலக்கியத்தில் அது எந்த வகுப்பில் சேரும் என்பது பற்றி எஸ். வி. வி.க்கு ஒரு போதும், தன் எந்த எழுத்திலுமே கவலையிருந்ததில்லை. கலை என்கிற ஞாபகமே அற்ற ஒரு கலைஞர் அவர். இலக்கிய நண்பர்கள் கூட்டமொன்றில் அவர் 'தான் எழுதுகிறது எப்படி?' என்பதைப் பற்றி விவரித்துச் சொன்னார்: "பேனாவை எடுக்கும்போது எனக்கு என்ன எழுதப் போகிறேன் என்றே தெரியாது. கதைத் திட்டமோ, கதாநாயகன், நாயகியின் பெயரோ என் மனத்திலிராது. சட்டென்று ஏதாவது ஒரு பெயர் வரும். அவன் ஸ்டேஷனுக்குப் போவான். ஸ்டேஷனுக்குப் போய் என்ன செய்வான்? டிக்கெட் வாங்குவான். எந்த ஊருக்கு? ஏதாவது ஒரு ஊருக்கு. தனக்கா...? தனக்காகவும் இருக்கலாம், வேறு யாருக்காகவும் இருக்கலாம். அது ரெயில் கிளம்பும்போது தெரிந்திருந்தால் போதுமே! கதாநாயகி அநேகமாக அவன் அறிந்தவளாகவே இருப்பாள். ஆனால், அவளைக் கதாநாயகியாக அதுவரை அறிந்திருக்க மாட்டான் அவன். நான் மனசு வைத்தால்தான் அறிந்துகொள்ள முடியும்..."

எஸ். வி. வி.யை மற்ற எழுத்தாளர்களிடமிருந்து பிரித்து வைத்தன அவருடைய கண்களும் காதுகளும் என்று சொன்னால் அது மிகையல்ல. காண்பது பூராவை யும் கண்ணில் வாங்கவும், கேட்பது பூராவையும், கொச்சை மொழி அந்தரார்த்தங்கள் உள்படக் காதில் வாங்கவும், அவருக்கு ஒரு சக்தியிருந்தது. தான் பார்த்ததையும் கேட்டதையும் அப்படி அப்படியே அழகுபெறச் சிருஷ் டித்துத் தந்திருக்கிறார் எஸ். வி. வி. நாம் நேரில் அறிந்து கொண்டவர்களையே பல சமயங்களில் எஸ். வி. வி.யின் எழுத்துக்களிலும் அறிந்து கொள்கிறோம். ஒரு திடமான பழங்கால அறிவுடனும், அநுபவ முதிர்ச்சியுடனும் இன்றைய வாழ்க்கையின் விசேஷங்களை, முக்கியமல்லா விட்டாலும் அநுபவிக்கக்கூடிய அதிசயங்களை, எடுத்துச் சொன்னவர் எஸ். வி. வி. இதைத் தினசரிப் பேச்சுத் தமிழில் சொன்னார் என்பதும், இயற்கையாகவுள்ள ஒரு ஹாஸ்யத்துடனும் சொன்னார் என்பதும் தனி விசேஷங் கள்தான்.

நேற்று—இன்று என்கிற இரண்டு தத்துவங்களுக் குமிடையே இவ்வுலகில் என்றுமே போராட்டம் நடந்து கொண்டுதான் வருகிறது. மனோதத்துவ நிபுணர்கள், தகப்பன் பிள்ளை, தாய் மகன் என்கிற உறவுகள் சிநேக உறவுகள் அல்ல, வெறுப்பு உறவுகளே என்று நிரூபிக்க இந்தக் காலத்தில் வெகுவாக முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றுவிட்டார்கள். மனோதத்துவம் என்கிற கானல் நீரிலே எஸ். வி. விக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடை யாது. அவர் கொண்டுள்ள முடிவுகளும் வற்புறுத்துகிற தன்மைகளும் வாழ்க்கையை நேர்ப் பார்வை பார்த்து அவர் அறிந்து கொண்டவை. ஆனால் நேற்று—இன்று என்கிற தத்துவத்தின் போராட்டத்தை அவரைப்போல தம் தலை முறைக்கு விவரித்துள்ளவர்கள் வேறு யாருமில்லை என்று தான் சொல்லவேண்டும். போராட்டம் என்றோ, தத்துவம்

என்றோ, இது பெரிய விஷயம் என்றோ சொல்லாமல் (உணராமல் என்றுகூடச் சொல்லலாம்) லேசாகச் சொல்லிவிட்டு நகர்ந்து விடுகிறார்.

பெந்தம்மாளை அறிமுகம் செய்து வைத்த கட்டத்திலேயே தொடர்ந்து வருகிறது இச்சம்பவம்

"தாயின் பேரில் இந்தக் குழந்தைகளுக்குப் பிராணன். அவளை எப்பொழுதும் பரிகாசம் செய்துகொண்டிருப்பார்கள். 'அம்மா, பெண் பாடசாலைப் பரிசளிப்பு விழா ஞாயிற்றுக்கிழமை நடக்கப் போகிறது. அப்பா அக்கிராசனம் வகிக்கப் போகிறார். நீ பரிசு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அப்பா அதற்கு ஒப்புக்கொண்டிருக்கிறார்' என்பாள் ஒரு பெண்.

"'பரிசளிக்கிறதென்றால் நமக்கு என்ன செலவு பிடிக்கும்?'"

"'நமக்கு ஒரு செலவும் இல்லை, அம்மா. பள்ளிக்கூடத்தில் புஸ்தகங்கள் வாங்கி வைத்திருப்பார்கள். நீ ஒரு பிரசங்கம் செய்துவிட்டுப் புஸ்தகங்களை அவர்கள் சொல்லுகிறபடிப் பெண்களுக்கு எடுத்துக் கொடுக்க வேண்டும். உனக்கு மாலை போடுவார்கள்...'

"'நான் பிரசங்கம் பண்ணுகிறதா? எனக்கு என்ன தெரியும்? புருஷர்களெல்லாம் வந்திருக்க மாட்டார்களா? அவர்கள் எதிரிலேயா நான் நிற்கிறது?'

"'அதற்கு என்ன பண்ணுகிறது? சர்க்காரில் அந்த மாதிரி உத்தரவு போட்டிருக்கிறார்களே; ஜட்ஜ் அக்கிராசனம் வகித்தால் அவர் சம்சாரம் பரிசளிக்க வேண்டுமென்று.'

"'ஏன், அப்படியா உத்தரவு போட்டிருக்கிறார்கள்? பசங்கள் பரிகாசமாகச் சொல்லுகிறதுகளோ?' என்று புருஷனைக் கேட்பாள்.

"வாசுதேவையர், 'ஐயோ இப்படியும் ஒரு வெகுளி இருக்குமா?" என்கிற மாதிரி அவளைப் பார்த்துச் சிரிப்பார்.

"'ஐயோ! நான் கேட்கிறேன், சும்மா இருக்கிறீர்களே? அப்படியா உத்தரவு போட்டிருக்கிறார்கள்?'

"'பசங்கள்தான் சொல்லுகிறார்கள்; நீ கேட்டுக்கொண்டிருக்கிறாயே!'"

விடாது, "'அம்மா. ஞாயிற்றுக்கிழமை நீ பிரசங்கம் பண்ணித்தான் ஆக வேணும். அம்மா பிரசங்கத்தைக் கேட்க எல்லோரும் போகவேணும்டா' என்று எல்லாக் குழந்தைகளும் சிரித்துக் கோஷம் செய்தார்கள்.

"'மணி பத்தாச்சு. எல்லாம் படுக்கப் போங்கள்'" என்று சொல்லிவிட்டு வாசுதேவையரும் கிளம்பினார்.

"'அவர் சம்சாரம் வாஸ்தவமாகவா? அப்படியா உத்தரவு போட்டிருக்கிறார்கள்?' என்று கேட்டுக் கொண்டே பின் சென்றாள்.

"பிரசங்கம்தான் பண்ணேன்' என்றார் 'வாசுதேவையர்.

"'நன்றாயிருக்கிறது, வெட்கக்கேடு! நிஜத்தைச் சொல்லுங்கள் என்கிறேனே!'

"'பசங்கள் பரிகாசம் பண்ணித்துகள். போய் விசாரமில்லாமல் படுத்துத் தூங்கு' என்று சொல்லிவிட்டு அவர் படுக்கப் போனார்,"

இந்தப் பரிகாசப் பேச்சு, வெறும் பேச்சாக நின்றுவிடவில்லை. பத்தாவது அத்தியாயத்திலேயே பெந்தம்மாள் லேடீஸ் கிளப்பில் பிரசங்கம் செய்து விடுகிறாள்.

"ஸௌம்யா குறுக்கிட்டுச் சொன்னாள்: 'என்ன பேச்சுப் பேசியிருக்கிறாள் என்கிறீர்கள்?'

"'ஆச்சரியம் என்னடி? அவள்தான் உபந்நியாசம் பண்ணுவாள் என்று முன்னமே சொன்னேனே! படித்திருக்கவில்லையே என்று பார்க்கிறாயா? படித்தவர்கள்தாம் ரொம்ப விசேஷமாய்ப் பேச வேணுமென்று நினைத்துக் கொண்டு அசடு மாதிரி உளறிக் கொட்டுவார்கள். படிக்காதவர்களுக்கு இயற்கை அறிவு இருக்கிறது. மனசில் பட்டதைச் சொல்வார்கள். அது சரியாகவே இருக்கும். இந்தக்

காலத்துப் படிப்புப் படித்துவிட்டால்தான் கோணல் புத்தியும் விபரீத யுக்திகளும் ஏற்பட்டு விடுகின்றனவே!'''

இலக்கண சுத்தங்களில் எஸ். வி. வி.க்கு அவ்வளவாக ஈடுபாடோ நம்பிக்கையோ இல்லை என்பது வெளிப்படை. 'வசனத்துக்குத் தெளிவும் நேர்மையுமே அவசியம்; இலக்கண சுத்தங்களைத் தேடிப் போகிற பண்டிதர்கள் அநேகமாகத் தெளிவையும் நேர்மையையும் இழந்து விடுகிறார்கள்' என்று சொல்வது போலவே இந்தப் பேச்சில் விவரித்திருக்கிறார் வாசுதேவையர் வாயிலாக என்று எனக்குத் தோன்றுகிறது,

பெந்தம்மாள் லேடீஸ் கிளப்பில் என்ன பிரசங்கம் தான் செய்தாள் என்று கொஞ்சம் பார்க்கலாம். ஸௌம்யா அப்படியே எழுதிக் கொண்டுவந்து வாசுதேவையரிடம் வாசித்துக் காட்டினாள். பெந்தம்மாள் சொன்னாள்: "என்ன படிப்போ அம்மா. படிச்ச பெண்களைப் பார்த்தால் படிப்பே இல்லாமல் இருந்தால் நன்றாயிருக்கும் போலிருக்கிறது...நல்ல ஆசாரங்களை யெல்லாம் விட்டுவிடுவதற்கா படிப்பு?...படித்த பெண்களெல்லாம் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன் என்கிறது. கல்யாணம் பண்ணிக் கொள்ளாததற்குப் பெண்ணாக ஏன் பிறந்தாள்? கல்யாணம் பண்ணிக்கொண்டால், அவர்கள் சுதந்திரம் போய்விடுமாம்!...அகமுடையான் விரட்டினால் சுதந்திரம் போய் விட்டதாம்: ஆபீஸில் எஜமான் விரட்டினால், அது சுதந்திரமாம்...தெய்வமென்றும் தேவதையென்றும், ஒரு பக்தி, நம்ம ஆசார அநுஷ்டானங்கள், அப்பியாசங்கள் இவைகளை யெல்லாம் வளர்க்கிறதா யிருந்தால், படிப்பு பிரயோஜனந்தான்..." என்று பிரசங்கம் செய்தாள். பெந்தம்மாள் சுகாதாரத்தைப் பற்றியும் பிரசங்கம் செய்தாள்.

பஸ்ஸில் கண்டக்டர் எச்சில்படுத்தி டிக்கட்டுகளைக் கிழித்துக் கொடுத்தான். பெந்தம்மாள், காசுதான்

கொடுத்தாகி விட்டதே, டிக்கட் வேண்டாம், என்றாள். "ஏண்டா அப்பா, மூன்றணாவையும் கொடுத்துவிட்டு,உன் எச்சிலை நான் சுமக்க வேணுமா? ஐயோ ராமா! உத்தமமான சாஸ்திரி குலத்தில் பிறந்து, ஜட்ஜுக்கு வாழ்க்கைப் பட்டு, மூன்றணாவையும் கொடுத்துவிட்டு, உன் எச்சிலையா அப்பா என்னைச் சுமக்கச் சொல்லுகிறாய்? என் தமையனார் சாஸ்திரி; நாலு வேதம் ஆறு சாஸ்திரங்கள் படித்தவர். என் தகப்பனார் மூன்று யாகங்கள் பண்ணினவர். என் புருஷர் ஜட்ஜ் வேலை பார்க்கிறவர்...நாராயணா! நாராயணா! எத்தனை பஞ்சகவ்யம் சாப்பிட்டால் இந்தப் பாவம் போகுமோ?" என்று ஆரம்பித்து, பஸ்ஸையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டாள். பஸ் கண்டக்டரை பஸ்ஸிலிருந்தவர்கள் அடிக்கவே போய்விட்டார்கள்.

எஸ். வி. வி. ஒரு கலைஞர். அவர் எந்த விஷயத்தை எடுத்துக் கையாளலாம், எந்த விஷயத்தைக் கைவிட்டு விட வேண்டுமென்று யாரும் சட்டம் விதிக்க முடியாது. எதுவும், எவ்வளவு சிறிய விஷயமுமே, அவர் நோக்குக்கு உட்பட்டதுதான்—கலைக்கு அஸ்திவாரம்தான். ஏராளமாக எல்லோரும் லுங்கிப் புடவை மோகத்தில் மயங்கி அணிகிறார்கள்; ஒருவன் லுங்கிப் புடவை சாக்ஷியத்தை நம்பி, வேறு ஒருவன் பெண்டாட்டியைத் தன் பெண்டாட்டியென்று எண்ணித் தொட்டு, 'அடியே' என்று கூப்பிடுகிறான். ரகளைதான்! ஐரோப்பாவிலே யுத்தம் நடப்பது பற்றிப் பெந்தம்மாள் என்ன நினைக்கிறாள் என்று பெரியவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் யாரும் கவலைப்பட மாட்டார்கள். ஆனால், நாம் அறிந்து ஆனந்திக்கிறோம். பெந்தம்மாளின் பால்யத் தோழி பார்வதியை நாம் சந்திக்கிறோம்—அவளை நாம் மறக்கவே முடியாது. "வந்தாளே, இந்தப் பிள்ளை யார், இந்தப் பெண் யார் என்று ஒரு கேள்வி கேட்க மாட்டாளோ?" என்றாள் பெந்தம்மாள். "அவளுக்குத்தான் அவள் பெருமையைச்

சொல்லிக் கொள்ளவே பொழுது போதவில்லையே" என்றாள் ரங்கு. உல்லாச வேளையில் நாம் அறிந்துகொள்கிறவர்கள் எல்லோரும் நம்மைவிட்டு அகலாத தோழர்கள். முகத்தைச் சுளிக்காமல் நாம் எங்கு சென்றாலும் நம்முடன் கூட வருவார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

முப்பது வருஷங்களுக்கு முன் நான் கோவையில் இண்டர்மீடியேட் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் போது எஸ். வி. வி. என்கிற மூன்று எழுத்துக்கள் கொண்ட பெயருடன் ஒருவர் தன் முதற் கட்டுரையை ஹிந்துப் பத்திரிகையில் வெளியிட்டார். ஆங்கிலத்தில் தான் எழுதினார் என்றாலும், அது முழுக்க முழுக்கத் தமிழ்க் கட்டுரைதான் என்றே சொல்லலாம். தமிழன் ஆங்கிலம் எழுதினால் இப்படித்தான் எழுத வேண்டும் என்று ஆங்கிலத்தில் ஆசை கொண்டிருந்த எனக்கு அப் போது தோன்றியது. எஸ். வி. வி. ஒரு ஏழெட்டு வருஷங் களுக்குப் பிறகு தமிழில் எழுதத் தொடங்கினார். அதனால் இன்றையத் தமிழ் இலக்கியம் ஒரு தனி வளம் பெறவே செய்திருக்கிறது.

7. வ. வே. ஸுப்ரஹ்மணிய ஐயர் சிறுகதைகள்

## மங்கையர்க்கரசியின் காதல்

இன்று தமிழ் இலக்கியத்தில் தோன்றியிருக்கும் ஒரு புது வேகத்துக்கு, ஒரு புது உயிர்ப்புக்கு அடிகோலியவர் வ. வே. ஸுப்ரஹ்மணிய ஐயர் என்று சொன்னால் அது மிகையாகாது. எல்லோரும் சுப்ரமணிய பாரதிபோலக் கவி பாடவும், வேகம் பெறவும் முடியாது. ஆனால் இலக்கிய விமர்சனத்திலும், கதை எழுதுவதிலும், வசனத் தெளிவிலும் எழுதுகிறவர்கள் எல்லோருமே வ. வே. ஸு. ஐயர் போல ஆக முயலலாம். அந்த முயற்சிக்குத்தான் இன்று வரை மறுமலர்ச்சி என்கிற பெயர் வழங்கி வந்திருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. இலக்கியத்தைப் பற்றிய வரையில் மறுமலர்ச்சி என்கிற வார்த்தையை முதன் முதலில் உபயோகித்தவரும் அவர்தான் என்று எங்கேயோ படித்த ஞாபகமாக இருக்கிறது. எனினும் இதைத் திடமாக என்னால் சொல்ல முடியாது.

**மங்கையர்க்கரசியின் காதல்** என்கிற கதைத் தொகுதியில் எட்டுக் கதைகள் அடங்கியிருக்கின்றன. இதற்கு முன்னரும் தமிழில் கதைகள் இல்லாமல் இல்லை. ஆனால், இன்று நாம் உபயோகப்படுத்துகிற சிறப்பான அர்த்தத்தில், சிறுகதை என்கிற வார்த்தை உபயோகப்படத் தொடங்கியது இந்தத் தொகுதியுடன் தான் என்று சொல்ல வேண்டும். கனமான நடையில், கம்பீரமான ரீதியில், வ. வே. ஸு. ஐயர் இந்த எட்டுக் கதைகளையும் நமக்கு எழுதியளித்திருக்கிறார். படித்துப் போற்றி அனுபவிக்க வேண்டிய பொக்கிஷம்.

"மங்கையர்க்கரசியின்காதலும்,காங்கேயனும் கயேலிக் மகாகவியான ஒஸ்ஸியானுடைய காவியங்களின் பந்தாவில் எழுதப்பட்டிருக்கின்றன" என்று முகவுரையில் சொல்லுகிறார் ஆசிரியர். "இவை தமிழ்நாட்டுப் பழைய வீரத் தன்மையையும், பழக்க வழக்கங்களையும் ஒருவாறு விளக்கிக் காட்டும்...ரீதி புதிது... அமேஸன் ழுக்கேயின் சரித்திரம் இந்த லோக யுத்தத்தில் நிகழ்ந்த ஓர் உண்மைக் கதை. கமல விஜயம் என்பது இந்த யுத்தத்தில் நடந்ததாகக் கற்பித்து எழுதிய கதை." கிரேக்கர்களின் புராணங்களைச் சேர்ந்த எதிரொலியாள் கதையை வெகு அழகாகத் தமிழில் சொல்லியிருக்கிறார். அதைத் தவிர நித்தியமான காதல் கதைகளான லைலா மஜ்னுவையும், அனார்க்கலியையும் சுவை படச் சொல்லியிருக்கிறார். "கதைகள் கவிதை நிரம்பியவையாய், ரஸபாவோ பேதமாய் இருக்கவேண்டும் என்பது என் அபிப்பிராயம்" என்று முடிவுரையில் குறிப்பிட்டிருக்கிறார் ஆசிரியர். ஆங்கிலம், பிரெஞ்சு, தமிழ், சம்ஸ்கிருதம், கிரீக்கு, லத்தீன் முதலிய பாஷை இலக்கியங்களையும், இலக்கிய உத்திகளையும் சுயப் பிரக்ஞையுடன், கலைஞனுடைய நோக்குடன் படித்து, அனுபவித்து, அறிந்த ஐயர் அவர்கள் தன் கதைகளுக்கு அற்புதமான உருவம் கொடுக்க முயன்று வெற்றி பெற்றிருக்கிறார்.

"குலோத்துங்க சோழனுக்காகக் கலிங்கம் சென்று வென்று வந்த கருணாகரத் தொண்டைமானுடைய மகளான மங்கையர்க்கரசி என்னும் மங்கை, கருணாகரன் என்னும் வாலிபனைக் காதலிக்கிறாள். அவள் தகப்பன் இறந்து விட்டதால், அவளுடைய சிற்றப்பன்தான் தற்காலம் அவள் குடும்பத்துக்குத் தலைவன். அவன் அவளை மார்த்தாண்டன் என்னும் வேறு ஓர் இளைஞனை மணக்கும்படி வற்புறுத்தி வருகிறான். ஆனால் மங்கையர்க்கரசி கருணாகரனையே விவாகம் செய்துகொள்வது என நிச்சயித்துக் கொண்டு, அவனை ஒரு நாள் இரவு ஊரின் புறத்திலுள்ள

ஒரு காளி கோயிலுக்கு வரும்படிச் சொல்லி விட்டுத் தான் குறித்த நேரத்தில் கோயிலுக்குச் சென்று காத்துக் கொண்டிருக்கிருள்" என்று சூசிகையில் ரத்தினச் சுருக்கமாக Setting (பகைப் புலத்தை) வாசகர்களுக்கு அறிவித்துவிட்டுக் கதையைத் தொடங்குகிருர். கதையின் பாவத்துக்கு முதல் வார்த்தைகளே அஸ்திவாரம் தருகின்றன: "எங்கே பார்த்தாலும் இருள், காரிருள்: கறுத்த கனத்த மேகங்கள் வானத்தில் இடை விடாது சென்று கொண்டிருக்கின்றன. சந்திரன் சற்று நேரத்துக்குத் தோன்றுகிருன். உடனே முன்னிலும் கனமான மேகங்களுக்கிடையில் மறைந்துவிடுகிருன். காற்று சீறிக்கொண்டு செல்கிறது. தூரத்தில் புலியும் கரடியும் உறுமிக் கொண்டிருக்கின்றன. பக்கத்துக் கொல்லைகளில் நரிகள் ஊளையிட்ட வண்ணமாக இருக்கின்றன. அதோ அந்த ஆலமரத்தின் மீதிருந்து ஒரு கோட்டான் பயங்கரமாகக் கத்துகிறது; உடனே நிறுத்திவிடுகிறது. காதலன் வரவு நோக்கி நின்ற காரிகை, காளியிடம் முறையிட்டுக் கொள்கிருள். காதலன் வரவில்லை. மார்த்தாண்டன் வந்து, 'நான் அவனைத் தனிவழியில் மறித்து வீர சுவர்க்கம் அனுப்பிவிட்டேன்' என்கிருன். தன்னை ஏற்றுக் கொள்ளச் சொல்லி வேண்டுகிருன். ஆனுல், கருணுகரன் விழுந்த இடத்தைக் காட்டச் சொல்லிக் கேட்கிருள் மங்கையர்க்கரசி.

"மரத்தடிக்குச் .சென்ருள். உடனே விழுந்தாள். விழுந்தாள். கோவென்று அலறிஞள்...என் காதற் கணவனே என்று புலம்பிஞள். 'என் நாதா, உன் உதடு அசைகிறதுபோல இருக்கிறதே! என்னை அழைக்கிருயோ? வந்தேன்! வந்தேன்!' இவ்வாறு சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் வார்த்தைகளை ஞாபகமூட்டும் வார்த்தைகளில் பிரலாபித்துக் கொண்டே உயிரற்ற கருணுகரனின் உடல் மீது விழுந்து வெகுநேரம் கிடந்தாள்" எழுந்தபோது, அவள் உருவமே மாறுபட்டுப்

போயிருந்தது. இப்பொழுது அவள் ரௌத்ராகாரமாக விளங்குகிறாள். 'மேகங்கள் சந்திரனை மூடிவிட்டன. அந்த நள்ளிரவில் அவள் கண்கள் தழல் விட்டு எரிகின்றன. காளியே மனித உரு எடுத்தாற்போல் நிற்கிறாள்...மார்த்தாண்டனை ஏற எடுத்துப் பார்த்தாள்... 'என்னை மணக்கலாம் என்றல்லவோ இருந்தாய்! இந்தா, மாலையிடுகிறேன், வா' என்று சொல்லிக் கொண்டே, மார்த்தாண்டன் மருமத்தில் கையீட்டியால் குத்தி வீழ்த்தி விட்டாள். '...பழி வாங்கிவிட்டேன்' என்று கருணாகரன் உடல் இருந்த இடம் சென்று தன்னையும் குத்திக்கொண்டு விழுந்து விட்டாள். மங்கையர்க்கரசியின் காதல் இவ் விதம் முடிந்தது''.

அளவில் மிகச் சிறியதான இந்தக் கதையில் கவிதை நயமும், பாவ ஆவேசமும் ஏராளமாகவே காணக் கிடக்கின்றன. சில இடங்களில் இது கவிதையாக அமைந்து விட்ட கதையோ, வசனத்தில் இவ்வளவு வேகமும் சாத்தியமா என்று எண்ணச் செய்கிறது. இதேபோல அனார்க் கலி என்கிற கதையிலும் ரஸ பாவோ பேதம் ஏராள மாகவே இருக்கிறது. எல்லோருக்கும் சாதாரணமாகத் தெரிந்த ஒரு கதையை விசேஷமாக நடத்திச் செல்லுகிற சிரமமான காரியத்தை மிகவும் வெற்றிகரமாகச் செய் திருக்கிறார் வ. வே. ஸு. ஐயர். யுவராஜன் ஸலீம், ஏழைப் பெண் அனார்க்கலியிடம் தன் காதலை வெளியிடுகிற கட்டம். ''அனார்க்கலி! உனது லாவண்யத்தின் சக்தி உனக்குத் தெரியவில்லை; மலையினின்று விழும் நீரருவிபோலத் தெளி வாயும், பரிசுத்த மாயும் இருக்கிற உன் சுபாவத்தின் ஆகர்ஷண சக்தி உனக்குத் தெரியவில்லை. ஆனால், நான் அவற்றை அறிகிறேன்; காந்தம் ஊசியை இழுப்பது போல அவை என்னை உன் வசப்படுத்தி விட்டன. இனிமேல் நான் ஸலீம் அல்லேன். அக்பர் ஷாவின் ஜேஷ்ட புத்திரனும், யுவராஜனும் அல்லேன்' என் அனார்க்கலியின் குலமாகி

விட்டேன்'' என்றான் ஸலீம். ஆனால், அனார்க்கலி ஒதுங்கி நின்றாள். "முயற்குட்டிக்குச் சிங்கத்தை மணக்கும் பாக்கியம் வருமா? தெருவில் மிதிபடும் தும்பைப்பூ, சூரியனை இச்சிக்கலாமா? ஆகையால் எனக்குத் தங்கள் மீதுள்ள காதலை இருதயத்தை விட்டுப் பறித்துவிட்டேன்'' என்றாள் அனார்க்கலி, யுவராஜனின் காதலுக்குப் பாத்திரமான குற்றத்துக்காக அனார்க்கலி காவலில் வைக்கப்பட்டாள். ஸலீம் வந்து காப்பாற்றுவான் என்று காத்திருந்தாள். நாட்கள் சென்றன. "வருஷங்கள் ஆகஆக அனார்க்கலியின் சரீரம் மெலிந்து விண்டுபோய்விட்டது. அன்புக்கும் மலர்களுக்கும் அவள் மனம் தவித்தது. அவ்விரண்டையும் தவிர மற்றவைகளெல்லாம் அவளுக்குக் கிட்டின. அவளுக்குத் தீராத நோய் வந்து விட்டது.''

ஸலீம், ஜஹாங்கீர் பாதுஷாவாகிவிட்டான். பாதுஷாவானதும் அனார்க்கலியை மறந்து விடாமல் தேடி வந்தான். ஆனால், அனார்க்கலியை அவன் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவள் சித்தமும் கலங்கிப் பொயிருந்தது. "பேதுற்றவள்போல் விழித்தாள். நீ யார் தம்பி? ஆ, நம் அக்பர்பாதுஷாவின் மகனா? உன்னை, மங்கையர்களை மோசம் செய்கிற வஞ்சகன் என்று எல்லோரும் சொல்லுகிறார்களே? எனக்குத் தோன்றவில்லை. நீ நல்லவன் போலத் தான் தோன்றுகிறது. அனார்க்கலியை நீ பார்த்திருக்கிறாயா? நல்ல பெண் அவள். எங்கேயோ போய் விட்டாள். என்னை ரோஜா மலர்கள் எடுத்துக் கொண்டு வரச் சொன்னாள். நான் எடுத்துப் போகப் போகிறேன். நீயும் வருகிறாயா!'' என்று சொல்லி விட்டு அனார்க்கலி அப்படியே பிரக்ஞை தப்பிப் போய்விட்டாள். "ஒரு விநாடிதான் அவளுக்கு மறுபடி ஞாபகம் வந்தது. அவன் மடியிலே உயிர் துறந்தாள்.''

**மங்கையர்க்கரசியின் காதலில்** வருகிற எல்லாக் கதைகளுமே காதலையும், சோகத்தையும் வடித்தெடுத்த சரித்

திரங்கள்தான் என்று பொதுவாகச் சொல்லலாம். நிறைவேறிய காதலைச் சொல்கிற கமலவிஜயம் என்னும் கதை, மற்ற கதைகளைப்போல அவ்வளவு வெற்றி யடையவில்லை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. கவிதை உள்ளம் படைத்த வ. வே. ஸு. ஐயர், வீரத்துக்கும் காதலுக்கும் தன் எழுத்தில் முக்கிய ஸ்தானம் அளித்து எழுதியதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

இந்தக் கதைகளுக்கு முத்தாய்ப்பு வைத்ததுபோல உள்ள ஒரு கதை பற்றி நான் இதுவரை எதுவும் சொல்ல வில்லை என்பது வெளிப்படை. ஏன் சொல்ல வில்லை? என்று சிலருக்குப் பதட்டமாகவும், கோபமாகவும்கூட இருக்கலாம். குளத்தங்கரை அரசமரம் என்கிற இந்தக் கதை, இந்த முப்பது வருஷங்களில் படித்தவர் ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் கொள்ளை கொண்ட கதை. வ. வே. ஸு. ஐயர் வேறு எந்தக் காரியத்தையும் செய்யாதிருந்தாலும், வேறு எதையுமே எழுதாமலிருந்தாலும், இந்த ஒரு கதையை எழுதிய ஒரு காரணத்தினுலேயே தமிழர்களின் நன்றிக்கும், பாராட்டுக்கும் உரியவர் ஆவார் என்பதில் எனக்குச் சற்றும் சந்தேகம் இல்லை. எனக்குத் தெரிந்து இந்தத் தலைமுறையில் எழுதுகிறேன் என்று பேரெடுக்கிற ஆசிரியர்களில் யாரும் இந்தக் கதையின் அழகுக்கும், அமைதிக்கும் பலியாகாமல் இருந்ததில்லை. இதில் உத்தியும், உணர்ச்சியும் ஒரே அழுத்தத்துடன் விழுந்து நம்மைப் பரவசப்படுத்துகின்றன என்று சொல்ல வேண்டும். பாரதியார் சொன்னதுபோல "கண்ணீர்த்துளி வர உள்ளுருக்கும்" காரியத்தை வ. வே. ஸு. ஐயர் இந்தக் கதையில் பிரமாதமாகவே சாதித்திருக்கிறுர்.

இந்த கதை, "எங்களூர்க் குளத்தங்கரை அரசமரத்தால் சொல்லப்பட்டது. அது நன்னூல் முதலிய இலக்கணங்கள் படித்ததில்லை... செந்தமிழை எதிர் பார்க்க வேண்டாம்...நம் கதாநாயகர்கள் பேசிய வார்த்தைகளை

அது வழுவின்றி நினைத்துக் கொண்டிருந்தது எனக்கே ஆச்சரியத்தைத் தந்தது. கதையைப் படிப்போர் ருக்மிணியை மறவாமல் நினைத்துக் கொண்டிருப்பார்கள். என்று பூரணமாய் நம்புகிறேன்" என்று முகவுரையில் எழுதியிருக்கிறார் ஆசிரியர். ஆனால், ருக்மிணியை அறிந்து விட்டவர்கள் அவளை மறப்பதென்பது சாத்தியமே யல்ல.

குளத்தங்கரை அரசமரம் கதை சொல்கிறது; "பார்க்கப் போனால் நான் மரந்தான். ஆனால், என் மனஸிலுள்ளதையெல்லாம் சொல்கிறதானால் இன்னைக்கெல்லாம் தீராது. இந்த ஆயுஸுக்குள் கண்ணாலே எத்தனை பார்த்திருக்கிறேன்! காதாலே எத்தனை கேட்டிருக்கிறேன்! உங்கள் பாட்டிகளுக்குப் பாட்டிகள் வந்து விளையாடுவதை இந்தக் கண்ணாலே பார்த்திருக்கிறேன். சிரிக்கிறீர்கள். ஆனால், நான் சொல்லுகிறதிலே எள்ளளவேனும் பொய் இல்லை. நான் பழைய நாளத்து மரம்—பொய் சொல்லக் கத்ததில்லை", என்று ஆரம்பித்து அந்த அரசமரம், ருக்மிணியின் சண்டைக் கதையைச் சொல்லுகிறது. "...ஏழெட்டு நாளாய் எனக்கு ருக்மிணியின் ஞாபகமாகவே இருக்கிறது. பதினஞ்சு வருஷ மாச்சு. ஆனால் எனக்கு நேற்றுப்போல இருக்கிறது. உங்களில் ஒருவருக்கும் ருக்மிணியைத் தெரியாது. பார்த்தால் சுவர்ண விக்கிரகம் போலிருப்பாள். குழந்தை. அவளுடைய சிரிச்ச முகத்தை நினைத்தால் அவளே எதிரில் வந்து நிற்பதுபோல இருக்கிறது எனக்கு. அவள் ஒருத்தியின் அழகை இன்னைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். நல்ல உயரமாக இருப்பாள். அவள் கையும் காலும் தாமரைத் தண்டுகள் மாதிரி நீளமாயிருக்கும். அவள் சரீரமோ மல்லிகைப் புஷ்பம் போல மிருதுவாக இருக்கும். ஆனால் அவள் அழகெல்லாம் கண்ணிலே தான். என்ன விசாலம்! என்ன தெளிவு! என்ன கனவு! களங்கமற்ற நீல ஆகாசம் ஞாபகத்துக்கு வரும். அவள் கண்களைப் பார்த்ததும் நீலோற்பலம் நிறைஞ்ச, நிர்மலமான

நீரோடையைப் பார்ப்பது போல் இருக்கும்.'' இது முதல் காட்சி.

கடைசிக் காட்சியையும் பார்ப்போம். ''ஊரின் சோபையையும், தாயார் தகப்பனுர் ஜீவனையும், என்னுடைய சந்தோஷத்தையும் எல்லாம் ஒண்ணுய்ச் சேர்த்துக் கட்டிக்கொண்டு ஒரு நிமிஷத்தில் பறந்துபோய்விட்டாளே என் ருக்மிணி. (குளத்தில் விழுந்து இறந்தவளை) கீழே அந்த மல்லிகைக் கொடி ஓரத்திலே விட்டிருந்தார்கள். எத்தனை தடவை அந்த மல்லிகை மொக்குகளைப் பறித்திருக்கிருள் அவள் பொன்னுன கையாலே! குளத்தங்கரையெல்லாம்—அவள் குழந்தையாயிருக்கிறபோது—அவள் பாதம் படாத இடம் ஏது. அவள் தொடாத மரமேது, செடியேது! ஐயோ, நினைக்க மனம் குமுறுகிறது. அந்த அழகான கைகள், அந்த அழகிய பாதங்கள் எல்லாம் துவண்டு தோஞ்சு போய்விட்டன. ஆனுல் அவள் முகத்தின் களை மாத்திரம் மாறவேயில்லை...அதியாச்சரியமான சாந்தம் வியாபித்திருந்தது.''

''பெண்கள் மனசு நோகும்படி ஏதாவது செய்யத் தோணும்போது இனிமேல் இந்தக் கதையை நினைத்துப் பார்த்துக்கொள்ளுங்கள். விளையாட்டுக்காகக் கூடப் பெண்ணுய்ப் பிறந்தவர்களின் மனதைக் கசக்கவேண்டாம்'' என்று கதையை முடிக்கிறது குளத்தங்கரை அரசமரம். வேண்டுமென்றே தான் ருக்மிணியின் சோக சரிதத்தை இங்கு சுருக்காமல் விட்டிருக்கிறேன். அது அவரவர்கள் படித்தறிந்து கொள்ளவேண்டியது. இன்றைச் சூழ்நிலையை வைத்து எழுந்த ஒரு உணர்ச்சிமயமான காதல், சோகக் கதை—சிறு காவியம்.

8. ஸ்ரீமதி யதுகிரி அம்மாள் ஜீவியம

# பாரதி நினைவுகள்

நானும் புதுமைப் பித்தனும் ஒருநாள் வயதான நண்பர் ஒருவருடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். நண்பரும் எழுத்தாளர்தான் என்பதால் சுபாவமாகவே எங்கள் பேச்சு இலக்கியத்தைப் பற்றித்தான் இருந்தது. பழசு, புதுசு எல்லாவற்றையும் பற்றி அலசி அலசிப் பேசிக் கொண்டிருந்தோம். கடைசியில் நானே, 'சொ. வி.'யோ-எனக்கு ஞாபகமில்லை—எங்கள் நண்பரை பாரதியாரை நேரில் பார்த்ததுண்டா என்று கேட்டோம். தூரத்தி லிருந்து பார்த்ததுண்டு இரண்டொரு தடவைகள் என்றும், நெருங்கிப் பார்க்கப் பழக, சந்தர்ப்பம் கிடைக்கவில்லை என் றும் சொன்னார் நண்பர். இதற்கு ஒரு மாதத்திற்குப் பிறகு இதே நண்பர் அப்போது பிரபலமாகிக் கொண்டிருந்த பத்திரிகையில் பாரதியாரைத் தான் சந்தித்த சம்பவங்கள், சந்தர்ப்பங்கள் எல்லாவற்றையும் பற்றி, வசன காவிய நடையிலே எழுதத் தொடங்கி விட்டார். இருபது இருபத் தைந்து வாரங்கள் வரையில் எழுதினார் என்றுகூட எனக்கு ஞாபகம். பாரதியார் சமீப காலத்தில் வாழ்ந்தவரென்பதி னாலும், அவரைப் பற்றிய நினைவுகளை உற்பத்தி செய்வது, அர்த்தமற்ற நாடோடிப் பாட்டுகளைத் தானே உற்பத்தி செய்து, ஆஹா ஊஹூ என்று புகழ்ந்து பாராட்டுவது போல சுலபமாக இருக்கிறது என்பதனாலும், பாரதி யாரைப் பற்றி எழுதி விடுவது எதையுமே ஒரு தடவைக் கிரண்டு தடவையாகப் புரட்டிப் பார்த்துத் தான் இன்று ஏற்றுக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. உள்ளத் திலே உண்மையொளி இல்லாத காலத்திலே உண்மைக்

கவியாகப் பிறந்த பாரதியாருக்கு இது தகுந்த தண்டனை என்றே சொல்லவேண்டும்.

உள்ளத்திலும் வாக்கிலும் உண்மை ஒளியுள்ள பாரதி நினைவு நூல்கள் இல்லையென்று நான் சொல்லவில்லை. எனக்குத் தெரிந்த அளவில், வ. ரா.வின் பாரதியார் சரித்திரமும், செல்லம்மாளின் தவப்புதல்வர் பாரதியாரும், யதுகிரி அம்மாளின் பாரதி நினைவுகளும் சிறந்தவையாகத் தோன்றுகின்றன. என் கண்களில் படாத வேறு பல பாரதி நூல்களும் இருக்கலாம் என்பது சாத்தியமே. இந்த மூன்று நல்ல நூல்களில், யதுகிரியம்மாளின் பாரதி நினைவுகள், பாரதியாரின் வாழ்வு பூராவையும் சொல்லாவிட்டாலும் ஒரு ஆறேழு வருஷத்திய வாழ்க்கைச் சம்பவங்களைச் சொல்லி நம் கண்முன் பாரதியாரைக் கொண்டுவந்து நிறுத்துகிறது. எந்தக் கவியையுமே மனிதனாக அறிந்துகொள்வது மிகவும் சிரமமான காரியம். கவியின் ஏக்கங்களையோ, ஆசைகளையோ, உள்ள நிறைவுகளையோ, உள்ளக் கிளர்ச்சிகளையோ அப்படியொன்றும் சுலபமாக அறிந்துவிட முடியாது. கவியின் ஒரு காரியத்துக்குச் சாதாரண மனிதர்கள் சொல்கிற காரணங்கள் எதுவும் சரியாக இருக்க வேண்டும் என்பது அவசியமேயில்லை.

ஜான்ஸன் என்கிற ஆங்கில ஆசிரியரை இன்று அப்படி ஒன்றும் பெரியவராக யாரும் நினைப்பதில்லை. ஆனால் அவரைப் பற்றி எழுதப்பட்ட ஜீவிய சரித்திரம் ஆங்கில இலக்கியத்திலே ஒரு சிகரமாகக் கருதப்படுகிறது. எந்த ஜீவிய சரித்திர ஆசிரியனும் இன்றுவரையும் சாதிக்காத ஒரு காரியத்தை பாஸ்வெல் என்பவர் சாதித்துவிட்டார். ஜான்ஸனிடம் அவருக்கு அன்பு மட்டுமில்லை—ஒரு ஒற்றுமையே இருந்தது—இருவரையும் பிரித்துச் சொல்லமுடியாத அளவிற்கு ஒரு உளப்பான்மை இருந்தது என்று சொல்லுவார்கள். மகாகவி பாரதியாருக்கு உறுதுணையாகவும்

தோழராகவும் இருந்த மண்டயம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸாச்சாரி யாரின் மூத்த புதல்விதான் யதுகிரி அம்மாள். புதுவை யில் பாரதியார் இருந்த சமயம் சிறுமியாக இருந்தவர். பாரதியாருடன் பல்லாண்டுகள் நெருங்கிப் பழகி, அவரது அன்புக்குப் பாத்திரமாகும் பேறு பெற்றிருந்தவர். தமது சிறு வயதில் பாரதியாரைத் தாம் அறிந்த வரையில் கவி ஞரை நமக்கு விவரிக்கிறார். ஒரு சிறுமியின் கண்கள் மூலம் இந்த நூலில் நாம் பாரதியாரைக் கண்டு களிக்க முடிகிறது. பெரியவர்கள் சொல்ல முடியாத சில உண்மை களைச் சிறியவர்கள் எவ்வளவு சுலபமாகப் புரிந்துகொண்டு, எவ்வளவு சுலபமாகச் சொல்லி விடுகிறார்கள்!

"அதிகாலையில் கடற்கரை சென்று தினசரி ஒரு மணி நேரம் நடந்தால் என் தேகம் ஆரோக்கியம் பெறும் என்று டாக்டர் சொன்னார். அதன்படி நடந்து வந்தேன். குழந் தையை என் தாயிடம் விட்டுவிட்டுக் கடற்கரைக்குச் செல் வேன். எனக்குத் துணையாக என் தகப்பனாரும் தங்கையும் வருவார்கள்...ஒருநாள் எங்கிருந்தோ பாட்டுச் சத்தம் கேட் டது. உதய ராகத்திலே உள்ளத்தை உருக்கும்படி மதுர மாக இருந்தது அந்தப் பாட்டு...பாரதியாரின் குரல்போல் இருந்தது.

"ஒரு கட்டுமரத்தின் மேல் பாரதியார் அமர்ந்திருந் தார். கறுப்புச் சொக்காய், கச்சை போட்ட வேஷ்டி, கூப்பிய கரங்கள். கடலில் உதயமாகும் பால சூரியனை நோக்கியபடிப் பாடிக்கொண்டிருந்தார் அவர். வெளிச்சம் நன்றாகப் பரவவில்லை; மங்கலாக இருந்தது. கம்பீரமான பாட்டு. உள்ளத்தைக் கவரும் ராகம், பாட்டின் உன்னத மான பொருள் எல்லாம் சேர்ந்து உண்மையில் தெய்வத்தை எதிரில் காண்பதுபோல் மயிர்க்கூச்செறியச் செய்தன. உள்ளம் குளிர்ந்தது.

"பாரதி:-இரவு இங்கே வந்தேன். கற்பனை உலகத்தில் பறந்துகொண்டிருந்தேன். எழுந்து பார்த்தால் கடற்கரை

குளிர்ந்த வேளை. திருவாய்மொழிப் பாட்டின் பரவசத்தில் இருந்தேன். நீர் அழைத்தீர்.

"ஸ்ரீ ஸ்ரீ (சலிப்புடன்):-வீட்டில் அவர்கள் எவ்வளவு கவலைப்படுவார்கள்? நல்ல கற்பனா உலகம்! நீர் இப்படிச் செய்வது சரியா?

"பாரதி (தலை கவிழ்ந்து):-வெய்யிலின் கொடுமை தாள வில்லை. கடற்கரை கற்பனா உலகம் எல்லாவற்றிற்கும் அனுகூலமாக இருந்தது...

"பாரதியாரோடு என் தகப்பனார் ஆங்கிலத்தில் பேசினார். அவர் பதிலே பேசவில்லை. ஆனால் அவர் கண்களில் தாரை தாரையாக நீர் பெருகியது. அந்தக் காட்சி என் கண்களைவிட்டு இன்னும் அகலவில்லை...

"திரும்பும்போது என் தங்கை என் தகப்பனாரைக் கேள்வி கேட்டாள்.

"ரங்கநாயகி:-ஐயா பாரதியாரின் கண்களில் ஏன் அவ்வளவு ஜலம் வந்தது! அழுதாரா? என்னத்துக்கு?

"ஸ்ரீ ஸ்ரீ:-கண்களில் சமுத்திர மணல் விழுந்திருக்கும்.

"நான்:-ஐயா, பாரதியார் இரவெல்லாம் வீட்டுக்கு வராமல் இருந்தும் செல்லம்மாள் ஒன்றும் கேட்கவில்லையே.

"ஸ்ரீ ஸ்ரீ:-இது முதல் தடவையாக இருக்காது. இப்படி எவ்வளவு நாளாய் இரவில் சமுத்திரக்கரை, தோப்பு, மடு என்று சுற்றுகிறாரோ! யாருக்குத் தெரியும்?

"நான்:-ஐயா, அவர் ஏன் முன்போல் இல்லை. நான் ஊரிலிருந்து வந்ததுமுதல் பார்க்கிறேன்; அவர்கள் வீட்டில் ஒருமாதிரி குழப்பமாக இருக்கிறதே?

"ஸ்ரீ ஸ்ரீ:-செல்லம்மாளையோ பாரதியையோ ஒன்றும் கேட்டுவைக்காதே? மனக்கஷ்டப்படுவார்கள்!

"அன்று மாலை ஐயர் (வ. வே. ஸு. ஐயர்) வந்தார்.

"நடந்ததை நான் சொன்னேன்.

"ஐயர்:-ஐயா கூப்பிட்டவுடன் தெரிந்துகொண்டாரா?

"நான்:-தெரிந்துகொண்டார். ஆச்சரியப்பட்டார் ...
ல்லாம் புதிர்போல் இருக்கிறது. நீராவது சொல்லும்
யரே.

"ஐயர்:-அவருக்கு ஏதாவது புது வழி தோன்றிவிட்
டால் அதைச் செய்யலாமா கூடாதா என்றுகூட யோசிப்ப
தில்லை...வீட்டு எஜமானி குழந்தைகளையோ மற்றவர்
களையோ ஒரு வழியாகச் சமாளித்துக்கொண்டு போகலாம்.
ஆனல் நம் தேசத்தில் கணவனை அடக்கி ஆள்வது முடி
யாது...குடும்பத் தலைவன் நியாயமாகவும் தருமமாகவும்
நடந்துகொண்டால் குழப்பம் இராது. அவன் செய்யும்
பிசகினல் வீடு கலகலப்பற்று அழுகையும் முணுமுணுப்பும்
முறலுமாகி, பெரிய சிறைச்சாலையாகத் தெரியும். எஜ
மானிக்குக் குழந்தைகளை விடவும் முடியாது; கணவனைத்
தள்ளவும் முடியாது; இந்தத் தர்மசங்கட நிலை பெருகி,
வீட்டுத் தொல்லைகளை மறக்க ஏதாவது ஒரு வழி தேடு
கிருன் குடும்பத் தலைவன். தன் நிலை என்ன, பெருந்தன்மை
யென்ன, ஒன்றையும் கவனிக்காமல் அந்த நிமிஷ நிலையில்
கற்பனை உலகத்தில் சந்தோஷமாக இருக்க லாகிரி வஸ்துக்
களை உட்கொண்டால் தொல்லைகளை மறந்து ஆகாயக்
கோட்டை கட்டலாம்.

"நான்:-அவர் பாடிய உதயராகம் மிகவும் நன்றாக
இருந்தது

"ஐயர்:-வெண்கலத் தொனி. காலை வேளை. பட்சிகளின்
சல சலப்பு. கடலின் சல சலப்பு. அவரும் கம்பீரமாகப்
பாடியிருப்பார்...சாமியார், பண்டாரம் முதலிய சிலரின்
கூட்டுறவு அவரை வேறு வழியில் இழுத்துச் செல்கிறது.
மனத்தை ஆள்பவன் தான் திடமான மனிதன். மனக்
குரங்கு எந்த நிமிஷம் எப்படிக் கட்டளை இடுகிறதோ
அந்த வழி செல்வது என்பது அப்படிச் செல்பவர்களுக்கும்
நல்லதல்ல; அவர்களின் சுற்றத்தாருக்கும் சுகமில்லை. சிலர்
வாழ்வு இப்படி ஆகிவிடுகிறது.

"இப்படிச் சொல்லிவிட்டு ஐயர் பெருமூச்செறிந்தார். எனக்கு ஒன்றும் புரியவில்லை; எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது."

திறம்படத் தெளிவாக ஒரு விஷயத்தைச் சொல்ல யதுகிரி அம்மாளுக்குள்ள திறமையைக்காட்ட ஒரு உதாரணமாக இந்தச் சம்பவத்தில் பெரும்பகுதியை இங்கு எடுத்து எழுதினேன். பாரதியாரைக் கவிஞனாகவும், சீர்திருத்தவாதியாகவும், குடும்பஸ்தராகவும், பொறுப் பற்றவராகவும், நண்பராகவும் இங்கு இந்த நூலில் பல இடங்களில் காண்கிறோம். பாண்டிச்சேரியில் ட்யூப்ளேக்ஸ் சிலைமுன் வாசித்த பாண்டு வாத்தியக்காரர்களின் ஆங்கில மெட்டுக்கொப்ப அவர் 'மூன்று காதல்' என்கிற பாட்டைப் பாடியதை விவரித்திருக்கிறார் ஆசிரியை. இதேபோல நமக்குத் தெரிந்த பல பாரதியார் பாடல்கள் எழுந்த சந் தர்ப்பங்களையும் விவரித்திருக்கிறார்.

"மாசி மகத்தன்று...மாலை நாலு மணிக்குப் பாரதி யார் குழந்தை சகுந்தலாவுடன் வந்தார். என் கடைசித் தங்கை ரங்கநாயகியும் சகுந்தலாவும் சம வயது. இருவரும் விளையாடினார்கள்...அவர்கள் பேசிக்கொள்வதைக் கவனித் துக்கொண்டே இருந்த பாரதியார் கலகலவென்று சிரித்து, 'பாப்பா, இங்கே ஓடி வாருங்கள். நீங்கள் இருவரும் கிளி போல் பேசுகிறீர்கள். ஒன்று தங்கக் கிளி. ஒன்று இரும்புக் கிளி. யார் எந்தக் கிளியாகிறீர்கள்?' என்றார்.

"சகு:-அப்பா நான் தங்கக்கிளி, ரங்கா இரும்புக்கிளி. சரிதானே அப்பா?

"ரங்:-நானே தங்கக்கிளி. நீ இரும்புக் கிளியாக இரு.

"சகு:-அதெல்லாம் முடியாதடி. எங்கப்பாதானே சொன்னார்? நான்தான் தங்கக்கிளி.

"ரங்;-போம்மா. நீ சண்டை போடாதே. நாம் இரண்டுபேருமே தங்கக்கிளிகள்!

"பாரதியாருக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ரங்காவை எடுத்துக்கொண்டு என் தந்தையிடம் சென்றார். 'நான் குழந்தைகளின் மனம் நோகும்படி சொன்னேன். இந்தக் குழந்தை சரிப்படுத்தி விட்டது' என்று, அவர்கள் சம்பாஷணையைச் சொன்னார்...

"ரங்:-நான் சொல்லியது தப்பா?...

"பாரதி:-நீ சொல்லியது சரி. நீங்கள் இருவரும் தங்கக் கிளிகள் தான் அம்மா.

"ரங்:-சகுந்தலாவை ஏன் எடுத்துக் கொள்ளவில்லை?

"பாரதி:-வா பாப்பா, சகுந்தலா! ரங்கா உன்னையும் தங்கக்கிளி பண்ணிவிட்டாளே!"

இந்தமாதிரிச் சம்பவங்கள் பலவற்றை மிகவும் விரிவாகச் சொல்லி யிருக்கிறார் யதுகிரி அம்மாள். ஒவ்வொன்றிலும் பாரதி என்கிற மனிதனை நாம் காணமுடிகிறது என்பதுதான் இந்த நினைவுகள் தொகுப்பின் தனிச் சிறப்பு. யதுகிரியின் குழந்தை இறந்து விட்டது. அதற்குப் பிறகு அவர் பாரதியாரைச் சந்தித்தபோது, "அவர் பதினைந்து நாள் மௌனவிரதம் ஆரம்பித்திருந்தார். 'குழந்தையில்லாமல் உன்னைப் பார்ப்பது எங்களுடைய பாவம்!' என்று ஒரு சீட்டில் எழுதி என்னிடம் காட்டினார்.

"நான் அவரை உற்றுப் பார்த்தேன். வெறும் எலும்புக்கூடு! சிவப்பான கண்கள்! துர்ப்பலமான உடம்பு! பார்க்க சகிக்கவில்லை.

"'நான் புதிய வழியில் யோகசாதனம் செய்கிறேன். அதனால் உடம்பு இளைத்திருக்கிறது' என்று எழுதிக் காட்டினார்.

"பாஞ்சாலி சபதம் துகிலுரியும் சர்க்கத்தை அன்று முடித்திருந்தார். அதைப் பாடிக்காட்டினார். மௌன நாட்களில் பேசத்தான் மாட்டார்; கவிதைகளைப் பாடுவார்.

"அவர் மௌனம் பற்றிச் செல்லம்மாள் கண்ணீர் வடித்தாள். பாரதியார் 'நான் மந்திரச் சொல்லைக் கண்டு

பிடிக்கப் பேசாமல் இருந்தால் செல்லம்மா கலாட்டா செய்கிருள்' உன்று எழுதிக்காட்டினூர்.''

"சமுத்திரக்கரையில் யாரோடு பேசினீர்?" என்ருல், "பராசக்தியோடு, கடலோடு'' என்று சிரிப்பார்.

பாரதியாருக்கு மண்டபம் கட்டித் திருப்தியடைந்து விட்ட தமிழர்கள் இலக்கிய பூர்வமாக அவர் கவிதைகளைக் கண்டு அனுபவிக்க ஒரு முயற்சியும் செய்யவில்லை. பாரதி என்கிற மனிதனை அறிந்துகொள்ளவும் அதிகமாக முயற்சிகள் செய்யவில்லை. பாரதி என்கிற கவியின் மனுஷ்யத்வத்தை அறிய யதுகிரி அம்மாளின் இச்சிறு நூல் நமக்குப் பெரிதும் உதவும்.

9. வ. ரா. கட்டுரைகள்

# நடைச் சித்திரம்

''ஒவ்வொரு காலத்திலே ஜன சமுகத்தின் உயிர் ஒவ்வொரு வழியாக வழிந்து ஓடிக்கொண்டிருக்கும், இந்தக் காலத்தில் அந்த உயிர் ஹோட்டல் வழியாக வழிந்து கொண்டிருக்கிறது. ஹோட்டல் மணி, அந்த உயிரின் ஜீவ நாடி. நாடிபிடித்துப் பார்த்து, தேக ஆரோக்கியத்தைக் கவனிப்பதுபோல், மணியை நாடிபிடித்துப் பார்த்துத் தெரிந்துகொண்டால், ஹோட்டலைப்பற்றிப் பூராவாகத் தெரிந்துகொள்ளலாம்...

''ஹோட்டல் மணியின் பிறப்பு வளர்ப்புப்பற்றிப் பேசுவானேன்? சீதையைப்போல மண்ணில் அகப்படவில்லை. பிரம்மாவைப்போல நாபியில் (தொப்புளில்) பிறக்கவில்லை. கவிதையைப்போல ஆவேசத்தில் ஜனனம் எடுக்கவில்லை 'தாயைக் குடல் விளக்கம் செய்ய' அவதரித்த தாமோதரன் இனத்திலும் அவன் சேர்ந்தவனல்லன். மணி சிறுபிராயத்துக் கலியாணத்தினுல் ஏற்பட்ட முதற் பயிர், முதல் விளைவு...

''மணிக்குப் பத்து வயதிலேயே தரித்திர தரிசனம் ஏற்பட்டுவிட்டது. ஆனுல் அதைக் கும்பிட மனம் கொள்ளவில்லை. கும்பிட்டால் கூண்டோடு கைலாசம் எல்லோரும் போகவேண்டியதுதான். பிறப்புக்கும் மரணத்துக்கும் நடுவே வாழ்வு இருப்பதாக வெகுபேர்கள் கண்களில் படுவதேயில்லை. கட்டின பசுப்போல இருப்பதுதான் பெரும்பான்மையோரின் தொழில். இந்த இனத்தைச் சேர மணி சிறிதும் விருப்பம் கொள்ளவில்லை.

"வேலைக்கு அலைந்தான். ஆனால் ஓயவில்லை. சின்னப் பிள்ளைகள் தவிப்பதைப் பார்த்து இரங்குவது பண்டைக் கால வழக்கம். அவர்களைச் சாறுபிழிந்து வேலைவாங்குவது இக்காலத்து நாகரிகம். ஆனால் இதற்குச் சற்றும் பயப்பட்டவனன்று மணி. கஞ்சி தானாக வராது என்று அவனுக்குத் தெரியும். கஞ்சிக்கு உழைப்பது கருமம் என்று முடித்துக் கொண்டான்...

"எதிலும் ஒட்டிக்கொள்வதுதான் சிரமம். ஒட்டிக் கொண்டபின் அஷ்டாவதானம் செய்யமாட்டானா மணி?... உழைத்து உழைத்து, அவன் உருவம் நன்றாக அமைந்து விட்டதாயினும், அவன் உள்ளம் தேய்ந்துகொண்டே வந்தது. கற்பனைக்கு இடமில்லாத வேலையில் ஒருவருக்குமே மனம் நீடித்து நிலைத்து நிற்காது. வாத்தியார் கையில் பிரம்படிபடவில்லை என்றால் மணியின் கற்பனை செத்து மடிந்து போகுமா?

"மணிக்கு நாடகத்திலும் சினிமாவிலும் ஆசை. மணிக்கு பாரதி பாட்டு முதல் தெம்மாங்குவரையில் எல்லாம் தெரியும். பாட்டிலும் இலக்கியத்திலும் அரசியலிலும் அவன் பரம ரஸிகன். இவைகளைத் துணையாகக் கொண்டு அவன் எப்படியோ காலந்தள்ளிவருகிறான். காதல் கலியாணத்திலேதான் அவனுக்கு ஆசை. எனவே, கண்ணில்படுகிற பெண் உருவங்களை அவன் அப்படியே விழுங்கித் தீர்த்துவிடுகிறான். இதைப்பற்றிக் குற்றமாகப் பேசினாலும் அவன் கோபித்துக்கொள்ளமாட்டான். ஆனால், அவனை 'ஹோட்டல்காரப் பையன்' என்று யாராவது இழிவாகச் சொன்னால் அதுதான் அவன் நெஞ்சில் அம்புபோலப் பாய்ந்துவிடுகிறது."

இது ஹோட்டல் மணியைப்பற்றிய நடைச் சித்திரம். வேலைக்காரி அம்மாக்கண்ணுவைக் கொஞ்சம் பார்ப்போம்.

"வார நாட்கள், வாரத்துக்கு ஒருநாள் திரும்பித் திரும்பி வருவதனால் கொஞ்சம் தேய்ந்துபோனாலும் போயி

ருக்கும். சூரியன் சதா உருண்டுகொண்டே யிருப்பதனுல் (சம்பிரதாயப் பொய்: சூரியன் உருளுவதில்லை என்று நிபுணர்கள் சொல்லுகிருர்கள்) ஒரு பக்கம் மூளியாய்ப் போனுலும் போயிருக்கலாம். ஆனுல், இரவுபகலாய், சலிக்காமல் முப்பது வருஷ காலமாக எங்கள் வீட்டில் வேலைசெய்து வரும் அம்மாக்கண்ணுவின் உடம்பு ஏன் தேய்ந்துபோக வில்லை...

"நாள் ஒழிந்தாலும் ஓயும்; அவளுக்கு வேலையிலிருந்து ஓய்வே கிடையாது. தினம் தினம் புதுமாதிரி வேலையா? அதுவுமில்லை. செய்ததையே திருப்பித் திருப்பிச் செய்கிற கழுத்தறுப்பு வேலை அவளுடைய வேலை. மூளை வேலையா? இல்லவேயில்லை. அவள் செய்யும் வேலையை யோசித்துச் செய்யவேண்டும் என்ற தேவையே கிடையாது, கடிகாரத்தின் முள் ஓடிக்கொண் டிருக்கிறமாதிரியான வேலை.

"கல்யாணமாகவில்லை என்ற குறை நீங்கிற்றேயல்லாமல், அம்மாக்கண்ணு, சொந்தக் குடும்ப சுகம், சொந்தக் குடும்பக் கவலை—ஒன்றுமே அறியாதவள். சென்ற முப்பது வருஷங்களாக நாங்கள்தான் அவள் குடும்பம்; நாங்கள் தான் அவளுக்குக் குழந்தைகள். எங்கள் வீடுதான் அவள் வீடு. எங்கள் குடும்பத்தின் சுகதுக்கம்தான் அவளுடைய சுகதுக்கமும். கடைசி ஜாமக்கோழி கத்தினுல் எழுந்திருந்து விடுவாள். காலையில் முதல் காக்கை கத்தினுல் போதும்,எங்களை எழுப்பிவிடுவாள். எங்கள் தாயாரிடம்இதைப்பற்றிச் சலுகை சொல்லிக்கொள்ளப் போனுலும் பலிக்காது. 'வளருகிற குழந்தை படுக்கையிலிருக்கலாமோ!" என்று அம்மாக்கண்ணு சொன்னுல் அப்பீல் கிடையாது...

"கோழியோடு எழுந்திருக்கிற அம்மாக்கண்ணு, இரவில் கோவில் கடைசி மணி அடித்தபிறகுதான் படுத்துக் கொள்ளுவாள்...

"அம்மாக்கண்ணு செய்கிற வேலையின் ஜாப்தா தேவையா? ஜாப்தா தயாராய் வைத்திருக்கிறேன். வாச

லுக்குச் சாணி தெளிப்பான்; வீடுகூட்டுவாள்; வீடு மெழுகுவாள்; மாடுகறப்பாள்; மாட்டுக்காரன் வராவிட்டால் மாடுகளை மேய்த்துக்கொண்டு வருவாள்; பாத்திரங்களைத் துலக்குவாள்; எங்களுக்கு எண்ணெய் தேய்த்துவிடுவாள். எங்கள் துணிமணிகளை அவள்தான் துவைப்பாள்; நெல் அறுவடைக்காலத்தில் களத்துக் கங்காணம் செய்ய (மேற்பார்வை பார்க்க) அவள் போவாள்; நெல் புழுக்குவாள்; நெல் குத்துவாள்; மருந்து அரைப்பாள்; குழந்தைகளுக்கு மாத்திரை கரைத்துப் போட்டுவாள். எங்கள் பந்துக்கள் வீட்டுக்குச சேதி கொண்டுபோவாள். எங்கள் வீட்டிலே அதிகாரம் செய்வாள்...

"எங்கள் வீட்டிலே எங்கள் தாயாருக்கும் தகப்பனுருக்கும் தகராறு ஏற்பட்டால், அதைத் தீர்த்துவைக்கிற பஞ்சாயத்துப் பொறுப்பு அம்மாக்கண்ணுவைச் சேர்ந்தது.

"குலதெய்வம், கும்பிடும் தெய்வம், வீட்டுத் தெய்வம் கூடத் தனது பக்த குடும்பத்தார்களிடம் இவ்வளவு கவலையும் சிரத்தையும் காண்பிப்பதில்லையே! குலதெய்வம் இருக்கிற இடத்திலே அம்மாக்கண்ணுவைப் பிரதிஷ்டை செய்து கும்பிட்டாலென்ன?

"அம்மாக்கண்ணுவுக்கு மனிதர்களைப்பற்றி கதையே தெரியாது. காக்காய், குருவி, நரி, கழுதை இவைகளின் கதைதான் தெரியும். கதையும் நன்ருய்ச் சொல்லத் தெரியாது. கதை நன்ருயில்லையே என்ருல் 'உனக்கு அவசரம்; உனக்குக் கேக்கத் தெரியல்லே' என்பாள். சொல்லத் தெரியாத குற்றம், குறை ஒன்று இருப்பதாக அவள் எண்ணியதே கிடையாது.

"தனக்கு ஒன்றும் இல்லையே என்ற சிந்தனையாவது விசாரமாவது அவளுக்கு இருந்ததில்லை, வெளியூர்களுக்குப்போய், நாங்கள் ஊருக்குத் திரும்பிவந்தால் 'வீட்டுக்கு என்ன கொணந்திருக்கே?' என்று கூசாமல் கேட்பாள். 'எனக்கு என்ன கொண்டுவந்திருக்கிருய்?' என்று அவள்

கேட்டதே கிடையாது. வீட்டு பக்தி அபரிமிதமாய்க் கொண்ட அம்மாக்கண்ணுவிடமிருந்து நம்மவர்கள் ஏன் தேசபக்தியைக் கற்றுக்கொள்ளக்கூடாது? மானம் இன்ன தென்று நாம் எல்லோருமே அவளிடமிருந்து நன்ருகப் பாடம் கற்றுக்கொள்ளலாம்''

ஹோட்டல் மணி, வேலைக்கார அம்மாக்கண்ணு இரண்டும் அறிஞர் வ. ரா. வின் **நடைச் சித்திரங்கள்.** அதே போல குழந்தை ராமு, தரகு கிருஷ்ணன், காவல் காத்தான், டாக்டர் திருமலை, குப்பிப் பாட்டி இன்னேரன்னவர்கள் பற்றி இந்த நூலில் முப்பத்தியேழு சித்திரங்கள் அடங்கியிருக்கின்றன. அனுதாபத்துடனும், அறிவுடனும், ஆண்மையுடனும் ஒவ்வொருவரையும் நோக்கி, வாசிப்பவர் தெளிவாகத் தெரிந்துகொள்ளும்படி இரண்டொரு பாராக்களில், இரண்டொரு வாக்கியங்களில் ஒவ்வொருவருடைய அடிப்படைத் தத்துவத்தையும் விளங்கவைக்கிருர் வ. ரா. சிந்தனைக்கு விருந்து என்று சொல்லி ஒதுங்கிக் கொள்ள முடியாது வ. ரா. வின் வாசகன். சிந்தனையைக் கிளறி, புதுவிஷயங்களை அறிந்து ஏற்றுக்கொள்ளச் செய்கிற தார்க்கோல் வ. ரா. இன்றைய தலைமுறையின் எழுத்தாளர்கள் எல்லோரும் வ. ரா. அவர்களைத் தங்களுடைய தலைவராக மதித்ததற்கு இதுதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. எதையும் அங்கீகரிக்காமல், சோர்வுற்று ஓயாமல், அலசித் துருவிப் பார்த்து மனத்தைக் கலக்கும் ஒரு சக்தி வ. ரா. விடமிருந்தது. அந்தச் சக்திதான் இன்றைய கலை எதற்கும் அடிப்படையாக இருக்கவேண்டும் என்று நம் தலைமுறைக் கலைஞர்களுக்குத் தோன்றியது. அதனுல் வ. ரா. வைத் தலைவராகவும் அங்கீகரித்தார்கள் என்று சொல்ல எனக்குத் தோன்றுகிறது.

முற்போக்காளர்களுக்கெல்லாம் முற்போக்கானவர் என்று வ. ரா. வைச் சொன்னுல் அது முற்றிலும் பொருந்தும். அஞ்சாமல் எதையும் சொல்வதும், அதைச் சொல்லப்

பண்டிதர்கள் ஒப்புக்கொள்ளாத ஒரு வசன நடையைச் கையாண்டதும் வ. ரா. வின் தனிச் சிறப்புகள். புரட்சி செய்யத் துணிவு மட்டும் போதாது. புரட்சி செய்யத் தெம்புடன் திறமையும் வேண்டும் என்பதை நிரூபிப்பதுபோல அமைந்திருக்கின்றன வ. ரா. வின் எழுத்துக்களெல்லாம். தார்மீகமான கோபம் தவறு என்று சொல்லுகிற இந்த நாட்களிலே வ. ரா. தார்மீகமான கோபம் கொள்ளத் துணிந்தார். உணர்ச்சி வசப்பட்டவர்கள் வாய்திறந்து அரற்றுவது தவறு என்கிற கொள்கையுள்ளவர்கள் மத்தியிலே 'எனக்கு உணர்ச்சி வசப்படவும் உரிமையுண்டு. அந்த உணர்ச்சியை மற்றவருக்கு எடுத்துக் கூறவும் உரிமையுண்டு' என்று சொல்லி எழுதியவர் வ ரா. அவர்கள். இல்லாவிட்டால் இன்றையத் தமிழில் வளர்ச்சியில்லை, பண்டை வளமும் கூடப் பொய்யாகிப் போய்விடும் என்று அச்சம் தெரிவித்த அறிஞர்களின் முடிவு, சரியாகிவிட்டிருக்கும்.

வ. ரா. வுக்குத் தமிழ் சரியாக எழுதவராது என்று ஒரு கட்சி. அந்தக் கட்சியின் கூற்றுக்களைப் பக்கத்துக்குப் பக்கம் பொய் என்று நிரூபிக்கிறார் வ. ரா. இந்த நடைச் சித்திரத்திலே. முதல்பக்கத்திலேயே நாம் குழந்தை ராமுவைச் சந்திக்கிறோம். நம் மனத்தைவிட்டு என்றும் அழிந்துவிடமுடியாத சந்திப்பு அது. "குழந்தை ராமு தங்கத்தை உருக்கி வார்த்த விக்கிரகத்தைப்போல இருப்பான். அகன்ற நெற்றி, செந்தாமரைக் கண்கள். சுவாமி விவேகானந்தரைப்போன்ற தலை. பூமியில் ஒரு நிமிஷமும் தறிக்காமல் எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் கால்கள். ஓயாத நாக்கு. ஸயன்ஸியீர்கள்கூட விளக்கத்தோடு பதில்சொல்ல முடியாத கேள்விகள். பம்பரம்போல் விநாடியில் தூங்கும் குணம், சொன்னதை வேதமாக நம்பும் தன்மை-இவைகள் எல்லாம் சேர்ந்தவைதான் ராமு". குழந்தை ராமுவைப் பற்றிய கட்டுரையை முடிக்கும்போது ஆசிரியர் சொல்லு

கிறார்: "குழந்தை ராமுவைப்போல் விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தைகள் நம் நாட்டின் வருங்காலத் தலைவர்கள். அவர்களுடைய இன்றைய நடத்தையைப் பொறுத்தது, அவர்கள் வாழப்போகிற வாழ்வு. அவர்களை மண்டையிலடித்து அவர்களுடைய மூளையைக்,குழம்ப வைப்பது வயதில் மூத்தவர்களுக்கு அழகல்ல. அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு வாய்ப் பதட்டத்துடன் இருக்கிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு இந்தநாட்டுக்கு அவர்களால் நலம் உண்டாகும்." எதிர்காலத்துப் பிரஜைகளிடம்தான் எவ்வளவு நம்பிக்கை ஆசிரியர் வ. ராவுக்கு? இந்த நம்பிக்கையையும் குழந்தை ராமுவின் உருவத்தையும் இதைவிடத் தெளிவாக யார் சொல்ல முடியும்? விஷயத் தெளிவுடன் வாக்கியத் தெளிவும் கண்ட ஆசிரியர் வ.ரா. நிச்சயமாகச் சொல்லலாம்.

வ. ரா.வின் மந்திரி பதி ஒரு அழகிய சித்திரம். "ஜாதிச் சண்டை, சமயச்சண்டை, பதவிச்சண்டை, உத்தியோகப் போட்டி, ஆண் பெண் மனோவிகாரம், பணச்சண்டை, அடிமை நிலைக்குப் போட்டி-ஆகியவை நிறைந்திருக்கும் சமயத்தில் பசுபதிக்கு நற்கதி ஏற்படாவிட்டால், வேறு யாருக்கு ஏற்படும்?... அதிகமான பிரயாசையின்றி பெரிய மந்திரிப் பதவியைப் பெற்ற பசுபதி, தமது வேலையைப் பற்றியும் அதிகமாக சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை, எடுத்துக்கொள்ளத் தேவையில்லை என்பதும் அவருக்குத் தெரியும். தம்மைத் தாக்குகிற ஜனங்களைப் பயமுறுத்தவும் தம்மைத் தாங்குகிற சர்க்காரைத் துதிக்கவும் அவருக்கு நன்றாகத் தெரியும். சட்டசபையில் பதில் சொல்லுவதற்குத் தேவையான சில வார்த்தைகளை பசுபதி பொட்டணம் கட்டி வைத்துக்கொண்டிருந்தார். ஆமாம். இல்லை, முன் பகுதி சரி, பின்பகுதிக்குப் பதில் சொல்லத் தேவையில்லை, கவனிக்கப்படும்...வாரத்துக்கு ஓர் உத்தியோக விருந்து. வாரத்துக்கு மூன்று தடவைகளுக்குக் குறையாமல் பத்தி

ரிகை நிருபர்களுக்குப் பேட்டி, வெளியூர்ப் பிரயாணம், வர வேற்புப் பத்திரங்கள், அழகு ஜரிகை மதுரைமாலை, ஒழிந்த வேளையில் கோயிலுக்குச் செல்லுதல்—இவைதாம் பசுபதியின் மந்திரி ஸ்தானத்தின் திட்டம்...மிராசுதார் களின் துயரம் நிரந்தரம்; ஏழ்மை என்பது கர்மபலன்; நோய்கள் ஆண்டவன் சோதனை; தற்கொலை பைத்தியத் தின் விளைவு; தொழிலில்லாமல் திண்டாடுவது அறிவின் மையின் தோற்றம்; மானமும் அவமானமும் கீதையின் பிரகாரம் சமம் அல்லது ஒன்று— இப்படிப்பட்ட சில தீர் மானமான முடிவுகளைக் கொண்ட பசுபதிக்கு பட்டமும், பதவியும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்துவந்தால் பசுபதி உங்களையும் என்னையும் ஏன் ஏள னம் செய்யமாட்டார்? அடுத்த எலக்ஷன் வரட்டும் என் கிறீர்கள். அதற்கும் பசுபதிக்கு வழி தெரியும்."

தன் எழுத்துத் திறனாலும், மூச்சு நிற்கும் வரையில் நேர்முகமான உற்சாகமான பாராட்டுகளினாலும் வ. ரா. இன்றைத் தமிழ் இலக்கியத்தை வளமுள்ளதாகச் செய்த வர். அவர் எழுத்துக்களிலே சிறந்தது என்று இந்த நடைச் சித்திரத் தொகுப்பைச் சொல்லவேண்டும். வ. ரா. முகவுரை யில் கூறுவதுபோல "நடைச்சித்திரம் என்பது வேற்று நாட்டு இலக்கியத்தின் சிறந்த ஆபரணமாயிருந்தும், நமது தமிழ்நாட்டிலும் நிலைத்து விட்டது." வ. ரா.வினால் என்று நாம் சேர்த்துச் சொல்லலாம்.

10. "சங்கரராம்" நாவல்

# மண்ணாசை

1930-ல் என்று ஞாபகம். ஒரு ஸெப்டம்பர் மாதத்தில், லீவில், காலேஜ் லைப்ரரியில் உட்கார்ந்து நிம்மதி யாகப் புஸ்தகங்களைப் படிப்பதற்காக அண்ணுமலை நகர் ஹாஸ்டலில் தங்கியிருந்தேன். அப்போதெல்லாம் ஹாஸ் டலில் வசதி மிகக் குறைவு. ஹரிகேன் லைட்டுகள்தான். ஹாஸ்டல் வராந்தாவில் பாம்புகளும் தேளியும். அறுநாறு எழுநூறு பேர் இருக்க வேண்டிய ஹாஸ்டலில் படிப்பில் ஆர்வமுள்ளவர்கள் ஒரு பத்து இருபது பேர்தான் தங்கி யிருந்தோம். அந்தச் சமயம் பார்த்து ஒரு பையில் ஐம்பது, நூறு புஸ்தகங்களைப் போட்டுக்கொண்டு (கதர் என்று தான் ஞாபகம்) தூயவெள்ளை உடை அணிந்த ஒருவர் வந்தார். பையிலிருந்த புஸ்தகங்களில் ஒன்றை எடுத்துக் காட்டினுர். "ஆறு அணுதான் ஸார்-எல்லாம் நான் எழுதிய கதைகள்" என்ருர். எனக்கு அப்போது ஆங்கி லத்தில் எழுத்தாளனுக வேண்டுமென்கிற மோஹம் ஏற் பட்டுக்கொண்டிருந்த காலம். ஆறணு கொடுத்து ஒரு பிரதி வாங்கினேன்-நம்மைப்போல் ஒரு ஆசிரியர் பிழைக் கட்டும் என்று. இரண்டு பிரதிகள் வாங்கக்கூட எனக்கு இஷ்டம்தான்; ஆனுல் ஒருவரே இரண்டு பிரதிகள் வாங் கினுல் கற்பனை நிறைந்த ஆசிரியர் என்ன நினைப்பாரோ என்று பயம் எனக்கு. கதைகள் எழுதுவதுபற்றி ஆசிரிய ருடன் பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். ஆனுல் அவர் சுலபத்தில் தன் ரகசியத்தை வாய் திறந்து சொல்லிவிடுகிற பேர்வழியாக இல்லை. அன்று அவர் சொன்னதில் ஒன்று மட்டுமே எனக்கு இன்னமும் ஞாபகம் இருக்கிறது. "இதில்

வருகிற கதாபாத்திரங்கள் எல்லோரும் எங்களூரில், எனக்கு அறிமுகமான மனிதர்கள் ஸார்'' என்றார் அவர்.

அந்த இலக்கியப் பிரியர்தான் சங்கரராம். அவர் இயற் பெயர் நடேசன் என்பது பின்னர்தான் எனக்குத் தெரிந்தது. நான் ஆறணா கொடுத்து வாங்கிய புஸ்தகம் **காவேரியின் குழந்தைகள்** என்கிற ஆங்கிலச் சிறு கதைத் தொகுப்பு. சங்கரராம் வீட்டிலே தெலுங்கு பேசுகிறவர். அவர் ஆரம்பத்தில் எழுதியதெல்லாம் ஆங்கிலத்தில்தான். **மண்ணாசை** என்கிற நாவலைக்கூட Love of Dust என்கிற பெயருடன் அவர் 1932-ல் வெளியிட்டார் என்று நினைக்கிறேன். அதற்கு ஏழெட்டு வருஷங்களுக்குப் பிறகு 1939-ல் தான் தமிழில் வெளியாயிற்று என்று எண்ணு கிறேன். ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்ததுதான் எனினும், ஆசிரியரே மொழிபெயர்த்திருப்பதால், அதைத் தமிழ் நாவல் வரிசையில் சேர்த்து மதிப்பிடுவதுதான் சரி யான காரியம். **மண்ணாசைக்குப்** பிறகு அவர் பல நாவல் கள் எழுதி வெளியிட்டுள்ளார். எனினும் வேறு எதுவும் இந்த அளவுக்கு வெற்றிகரமாக வந்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

**மண்ணாசையிலே** மண் வாடை ரொம்பவும் நன்றாக வீசுகிறது, அதுவும் திருச்சிராப்பள்ளி ஜில்லா காவேரிக் கரை மண்வளம் நன்கு தெரிகிறது. ஆசைகளால் மனித னுக்கு என்றுமே துன்பம்தான் வரும்; அதுவும் இந்தப் பொல்லாத மண்ணாசையினால் வேறு ஒன்றும் வராது; எனினும், மண்ணாசை விடாது என்பதை வேகு நேர்த்தி யாகச் சித்திரித்திருக்கிறார் ஆசிரியர் சங்கரராம். கதைக்கு சுவாரசியம் அளிப்பதற்காக ஒரு காதல் கதையையும் இத்துடன் பின்னியிருக்கிறார். திருச்சி ஜில்லா பாஷையிலே இதில் வருகிற கதா பாத்திரங்கள் பேசுகிற பேச்சு அழகாக அமைகிறது. பாத்திரங்களின் குண விசேஷங்களை மிகைப் படுத்தாமல், வரம்புக்குட்பட்ட வகையில் உண்மையாகத்

திட்டியிருக்கிறார். இன்றைய நாவல்களில் ஒரு சிறந்த நாவல் என்று சொல்லுகிற அளவுக்கு மண்ணாசை திறம் பட எழுதப்பட்டிருப்பது உண்மை.

" 'என்ன வேங்கடாசலம், சீட்டுக்கிளிச்சான் கடலை யைப்பற்றிக் கேள்விப்பட்டியா?' " என்றார் அண்ணாமலைத் தாத்தா.

" 'சீட்டுக்கிளிச்சான் கடலையா? புதுப் புதுச் சமாசாரம் கொண்டாரையே தாத்தா?' " என்றான் வேங்கடாசலம்.

" 'நமக்குத் தெரியாட்டிப் புதுசுன்னு எண்ணிக்கொள் ளணும். களுகுபட்டி சுப்ரமண்ய படையாச்சியைத் தெரியு மில்லை ஒனக்கு. அவர் புன்செய்க் காட்டிலே போட்டிருக் காங்களாம். அது ஒரு கடலைதானும். ஆனா நம்ப பொட்டுக் கடலைபோல நாலு அஞ்சு பங்கு பெரிசா இருக்குதாம். வெள்ளாமை காச்சுத் தள்ளிடுதாம். சுப்ரமண்ய படை யாச்சி கையி ரொம்ப இறங்கிப்போயி..."

" 'என்ன தாத்தா, நம்மூருலே நல்ல நஞ்சை நெலங் களா வாங்கப் பாக்கறாராமே?' "

" 'அதுக்குள்ளே அவசரப்படுகிறியே. அதைத்தான் நானும் சொல்லவந்தேன். ஆரோ வெளிநாட்டிலிருந்து வந் தவங்க அந்தக் கடலையிலே நாலு அஞ்சு மரக்கா கொடுத் தாங்களாம். அதை ரகசியமாப் பயிரிட்டுப் பார்த்தாராம். மாசூல் நம்ம பொட்டுக்கடலை ஒரு கலமின்னா அந்தக்கடலை மூணு கலம் கண்டுச்சாம். அவ்வளவுதான், கடனை ஒடனை வாங்கிக் கையிலே இருந்த எல்லாப் பணத்தையும் போட்டு உவரு புஞ்சை ஒரு நூத்துச் சொச்சம் ஏக்ராவிலேயும் போட்டுத் தள்ளிட்டாரு. ரெண்டு, மூணு மாசம் வரையி லும் அவருக்குத் திக்குத் திக்குன்னுதான் இருந்தது. இந்த லட்சணத்திலே அந்த வருஷம் மழை கூடக் கொஞ்சம் கொற வுதான். எல்லாம் இப்போதுதான்-மூணும் வருஷம். எப் படியோ தட்டுக்கிட்டுப் பயிரு தலை எடுத்திடுச்சு. அப்புறம் பாரேன். பச்சைப் பசேலின்னு கண்ணுக்கெட்டின மட்

டும் ஒரே வெள்ளாமைதான். அவரு திருஷ்டிக்குச் செல வளிச்சதே இவ்வளவு அவ்வளவூன்னு இல்லையாம். நாலா வது அறுப்புக்காலம் வந்தவுடனே, நாலு கிராமத்துப் பொம்பளைங்க விடாத பதினைஞ்சு நாள் வேலை செஞ்சுகூட முடியல்லையாம். போயேன். அவருமட்டும் அதை அப்படியே குவிச்சு வச்சிருந்தாரோ அது எவ்வளவு பெரிசு இருக்குமோ சொல்ல முடியாது. ஆனால் ஒண்ணு. எவன் கண்ணாவது பட்டுப் பாளாய்த்தான் போயிருக்கும். இதையெல்லாம் யோசிச்சு பட்டணத்திலிருந்து மண்டிக்காரங்களை வரவ ழைச்சு அன்னன்றை சரக்கைக் கோணிகள்ளே போட்டு அனுப்பிச்சுட்டாராம். அந்த வருஷம் செலவெல்லாம் போக முப்பதாயிரம் கெடச்சுதாம். கடனெல்லாத்தையும் ஒளிச்சாராம். சீட்டெல்லாம் கிளிக்கப்பணம் கொடுத்தாச் சில்லே. அதனாலே சீட்டுக்கிளிச்சான் கடலேன்னு பேரு வச்சிட்டாங்களாம். இப்போது அந்தப் பக்கமெல்லாம் அதுதான் வெள்ளாமையாம்!' என்று கிழவன் முடித் தான்.''

முதலில் வாங்கின கடனையும், இரண்டாவது வாங்கின கடனையும் தீர்க்க வேங்கடாசலமும் கடன்வாங்கித் தனக் கிருந்த புஞ்சையெல்லாம் சீட்டுக்கிளிச்சான் கடலை போட் டுப் பார்த்தான். கடலை நன்றாகத்தான் விளைந்திருந்தது. ஆனால் அவன் அதிர்ஷ்டம் சுற்றுப்பக்கத்திலிருந்த சோளக் கொல்லையில் தீப்பற்றவே பயிரெல்லாம் தீய்ந்துவிட்டது. சீட்டுக்கிளிச்சான் கடலைபோட வாங்கிய கடனையும் வேங் கடாசலம் சுமக்க வேண்டியதாயிற்று. அந்தக் கடனைத் தீர்க்க வழியில்லை. நிலத்தை விற்றுப் போட்டுக் கடனை அடைத்துவிட்டு, கொஞ்சத்தை வைத்துக்கொண்டு சமா ளிப்பதுதான் சிறந்தவழி என்று எல்லாரும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். வேங்கடாசலம் சம்மதிக்கவில்லை.

''நான் எங்க நெலத்து மேலே எவ்வளவு உயிரு வச்சி ருக்கேன்! நீ என்னத்தைக் கண்டே. சாப்பாட்டுக்கு ஏற்

பாடு செஞ்சிக்குட்டு வந்தே? அடே, நாய்கூட வயிரு பொளக்குதடா? இதோபாரு, எங்களுக்கு எங்க நெலங்க எங்க உயிருக்குமேலே. ஊ, உம். அறிஞ்சுக்கோ!"

மண்ணில் வேங்கடாசலத்துக்குள்ள ஆசையை பின்னணியாகக் கொண்டு வேலன்-வள்ளி காதல் நாடகம் நடக்கிறது. முதல் அத்தியாயத்திலேயே நாம் வேலனையும் வள்ளியையும் மல்லனையும் சந்தித்துவிடுகிறோம். நாவலின் போக்குக்கு அவசியமான ஒரு முக்கோணம் இது. மாங்காயடித்துக்கொண்டிருந்த குழந்தைகள் ஆலங்கட்டி மழை விழத் தொடங்கவே விழுந்தடித்துக்கொண்டு ஓடினார்கள். மல்லன் வள்ளியைப் பிடித்துத் தள்ளிவிட்டு முன்னால் ஓடினான். முதலில் போன வேலன் வந்து வள்ளியைத் தூக்கிவிட்டு மல்லனுடன் சண்டையும் பிடித்துக்கொண்டான். மல்லனை அடிக்கவும் அடித்துவிட்டான் வேலன். மல்லனின் அத்தை மீனாட்சி விஷயத்தை அறிந்துகொண்டு வேலன் மேல் வஞ்சம் கூறினாள். வள்ளியை அவன் மணக்காதபடி செய்துவிடுகிறேன் என்றாள். வேங்கடாசலத்தின் வளர்ப்புப் பிள்ளையான வேலனைத் தொலைத்துவிடுகிறேன் என்றாள். மீனாட்சி கையில் பணம் உள்ளவள்; கெட்டிக்காரி. பிடிவாதமாக சூழ்ச்சி செய்யும் திறனுள்ளவள். அவளுக்கு வேங்கடாசலத்தின் போக்கும் உதவிற்று. "மடையன்! லெச்சுமி ஒரு குடும்பத்திலே எப்பவும் இருப்பாளா? பணக்காரன், பிச்சைக்காரன் ஆவுறதுதான். பிச்சைக்காரன் பணக்காரன் ஆவுறதுதான். எப்பேர்ப்பட்ட ராசாவெல்லாம் பிச்சை எடுக்க வந்தபோது நம்மைப்போலக் கையகலம் நெலபுலம் வெச்சிருக்கிறவர்களுக்குக் கஷ்டம் வந்தா அது ஆச்சரியமா?" என்றாள் மீனாக்ஷி.

"வேங்கடாசலம் அவ்வளவு அயோக்கியனா?...இந்த ஊரெல்லாம் தேடிப்பார்த்தால்கூட அவனைப்போல நல்லவன் கிடைக்கமாட்டானே" என்றாள் வள்ளியின் தாய்.

"வேங்கடாசலம் அயோக்கியனின்னு நான் சொன்னேன்? நல்ல எண்ணந்தான். ஆனால் நல்ல எண்ணத்தோட நாம் எவ்வளவு தீங்கு பண்ணிடறோம்? அதிலேயும் வேங்கடாசலத்தைப்போல் ஆத்திரக்காரன்களுக்குக் கேக்க வேண்டியதே இல்லே. அவசரத்திலே ஒரு தப்பு பண்ணிட்டு அப்பான்னு முடியுமா? ஐயோன்னு முடியுமா?"

வேங்கடாசலம் சோர்ந்துவிட்டான். படுத்த படுக்கையாகவும் ஆகிவிட்டான். சோற்றுக்கே திண்டாட்டமாகி விட்டது. வள்ளியை வேலனுக்குக் கொடுப்பது என்கிற பேச்சுப் போய், மல்லனுக்குக் கொடுத்துவிடுவது என்று பேச்சு நடமாட வாரம்பித்தது. அந்தச் சந்தர்ப்பத்திலே வேலன் வள்ளியைச் சந்தித்து ஆண்பிள்ளைச் சிங்கமாகக் காரசாரமாகப் பேசினான். "வள்ளியினால் அழுகையை அடக்க முடியவில்லை. கைகளால் முகத்தை மூடிக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்.

"'சரி. இந்த நாடகம் இங்கே வாணும். உன் புருஷன் கிட்டே வச்சிக்கோ!'" என்றான் வேலன்.

"'சீ! வாயைமூடு. யாரு என் புருஷன்?'" என்று தேம்பியவாறு அவன்மேல் சீறிவிழுந்தாள். அவள் அடுத்த நிமிஷம் கீழே சாய்ந்து விம்மி விம்மி அழுதாள்."

ஒரு ஆட்டம் ஆடி ஓய்ந்துவிட்டு வேலன் கடைசியாக "மௌனமாக அவளை இரண்டு நிமிஷநேரம் உற்றுப்பார்த்தான். அவளும் சளைக்கவில்லை. இமைகொட்டாமல் அவன் உள்ளத்தைப் பரிசோதிப்பதுபோல் அவனை விழித்துப் பார்த்தாள்.

"பிறகு வேலன் 'நீ நெனைக்கிறப்போல நான் அவ்வளவு கெட்டவனில்லே' என்று மெதுவாகச் சொன்னான்...'அந்தப் பயல் பேச்சைக் கேட்டுவிட்டு நான் குதிச்சேன். நீ ஒண்ணும் மனசிலே வச்சுக்காதே. நீ எப்பவும் போல இருக்கிறேங்கிறது எனக்கு எவ்வளவு சந்தோசமா இருக்குது, தெரியுமா? இன்னும் ஒரே சங்கதி, வள்ளி,

என் உயிரெல்லாம் உம்மேலே இருக்குதூன்னு உனக்குத் தெரியுமே...'

"'செத்தாலும் பொளச்சாலும் ஒண்ணுத்தான்னு சொல்லு?' வள்ளி பதில் கூருமல் தன் தலையை அவன் கைகளில் மறைத்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள். ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்திருக்க முடியாதென்று அவர்கள் நன்கு உணர்ந்தார்கள். எக்காலத்திலிருந்து அவர்களுக்குப் பரஸ்பரம் அவ்வளவு பிரியம் ஏற்பட்டதென்று அவர்களுக்கே தெரியாது. அது வருஷக்கணக்காக வளர்ந்த அன்பு. அது சிறுபிராயத்திலிருந்து ஆரம்பித்து நாளடைவில் விருத்தியாகி இப்பொழுது அவர்கள் அறியாமல் பரிபக்குவம் அடைந்தது." இந்தக் காதல் காட்சியைத் தமிழ் நாவல் இலக்கியத்திலே ஒரு சிகரம் என்று சொல்லவேண்டும். அதற்கீடான காதல் காட்சி எதையும் நான் தமிழில் இன்றுவரை படித்ததில்லை.

விடிந்தால் மல்லனுக்கும் வள்ளிக்கும் கல்யாணம் என்றிருக்கும் நேரத்திலே மல்லனின் தகப்பன் மாயாண்டியை யாரோ குத்திக்கொன்றுவிட்டதும், சந்தேகம் வேலன்மேல் தான் விழுகிறது, மாயாண்டியைக் கொல்வதாக அவன் சொன்னதாகத் தான் கேட்டதாகவும், அவன் ரத்தக்கறை படிந்த துணிகளை அலசிக்கொண்டிருந்ததைப் பார்த்ததாகவும் சாட்சிகள் வேறு சொல்லவே வேலனைக் கைதுசெய்து விட்டார்கள். வேலன் கட்சிக்கு ஆள் திரட்டிக்கொண்டு, கச்சேரி வக்கீல் நியாயம் என்று பேசுகிற காட்சிகளில் பல ஆங்கில நாவலாசிரியர் சார்லெஸ் டிக்கன்ஸை நமக்கு நினைவூட்டுகின்றன. உலகில் நல்லவர்களும் கெட்டவர்களும் கலந்திருப்பதை அற்புதமாகச் சித்திரித்திருக்கிருர் ஆசிரியர். வேலன் கொலைக்குற்றத்துக்காக விசாரிக்கப்படும்போது உண்மைக் குற்றவாளியே வந்து குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிருன். மாயாண்டியின் மூத்த மகனே, தகப்பன் தனக்கிழைத்த கொடுமைக்காகக் கொன்றதாகக்

குற்றத்தை ஏற்றுக்கொண்டான். வேலன் விடுதலையாகி ஊர் திரும்புகிறான்.

வேங்கடாசலத்தின் நண்பன் வேலனின் தகப்பன் அக்கரைச் சீமையில் பணம் நிறையச் சம்பாதித்து தன் நண்பனுக்கும் பிள்ளைக்கும் ஆறு லட்ச ரூபாய் உயில் எழுதிவிட்டுப் போனான் என்று சொல்லவந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலனை மறுபடியும் கைதுசெய்ய வருகிறார் என்று பயந்து வேங்கடாசலம் வலிப்புவந்து இறந்துபோனான். தன்னை வளர்த்த தந்தையை இழந்த வேலன் வளர்ப்புத் தாய்க்காகவும், காதலி வள்ளிக்காகவும் உயிர்வாழ மனம் ஒப்புகிறான் என்று கதையை முடிக்கிறார் ஆசிரியர்.

கதை அப்படி ஒன்றும் அசாதாரணமான கதையல்ல. கதாபாத்திரங்கள் எல்லோரும் சாதாரண மக்களே என்பதும், நமக்கு நன்றாகத் தெரிந்த மனிதர்களே என்பதும், இந்த நாவலில் ஒரு விசேஷ அம்சம். எல்லாவற்றையும் சூழ்ந்து நிற்கும் மண் வாசனை இந்நாவலுக்குத் தனியானதொரு அழகைத் தருகிறது. வேங்கடாசலத்தைப் போன்ற மண்ணாசை பிடித்த மனிதர்கள்தான் நமது மனித வளத்துக்கே—மண் வளத்துக்கே—ஆதாரமான புருஷர்கள் என்பதை ஆசிரியர் தெளிவாக, வியக்கும் வண்ணம் விவரித்திருக்கிறார் என்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம்.

11. ஏ. கே, செட்டியார் கட்டுரைகள்

# உலகம் சுற்றும் தமிழன்

எனக்குச் சின்ன வயதாக இருக்கும்போது கதை சொல்வாள் என்பாட்டி. அவள் பிள்ளைகளில் நால்வர் லாகூர், கல்கத்தா, பம்பாய், ரங்கூன் என்று மூலைக்கொருவராக உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆகவே அவள் அந்த நாலு நகரங்களிலும் பல நாட்கள் இருந்தவள். தான் பார்த்ததையும் கேட்டதையும் வெகு அற்புதமாகக் கதையாகச் சொல்லுவாள் அவள். பிற்காலத்தில் அந்த ஊர்களை யெல்லாம் நானே பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தபோது 'அடடா! பாட்டியின்கதைகளில் இந்த ஊர்களெல்லாம் எவ்வளவு நன்றாக இருந்தன! நேரில் பார்க்கும்போது அப்படி சுவாரசியமாக இல்லையே! பாட்டியின் கதைத்திறன் எனக்கில்லையே! கண்களில் சக்தியில்லையே! அவள் கண்ட மாதிரிக் காணமுடியவில்லையே!' என்று வருத்தப்படுவேன்.

இந்த நாட்களில் பலர் பலவேறு தேசங்களில் பிரயாணம் செய்துவிட்டு வருகிறார்கள். ஆனால் எமர்ஸன் சொன்னதுபோல, "யார் எங்கே போனால்தான் என்ன? தங்களையும் சுமந்துகொண்டு தானே போகிறார்கள்? தங்களை மீறி நகர்ந்துவிட முடிவதில்லையே!" இப்படிப்பட்டவர்கள் பிரயாணம் செய்வதனால் அவர்களுக்கு ஏற்படுவது ஒரே ஒரு லாபம்தான். "நான் அங்கே போனபோது" என்று ஆரம்பித்து, "வேண்டாம், விடுமையா" என்று சொன்னாலும் விடாமல், ஓடுபவனையும் துரத்திப்போய்த் தங்கள் பேச்சை முடிப்பார்கள். அப்படியில்லாமல் தன் பிரயாணங்களைப்பற்றி ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி

யுள்ள ஒரே ஆசிரியர் ஏ. கே. செட்டியார். தமிழில் மட்டும் என்று சொல்லவில்லை நான் என்பதைக் கவனிக்கவும். தமிழில் மட்டுமல்ல; பிரயாண நூல்கள் எழுதிய எந்த பாஷை ஆசிரியரையும்விடக் குறைவாக எழுதி, இன்னும் கொஞ்சம் எழுதமாட்டாரா என்று நம்மை நினைக்கச் செய்பவர் ஏ. கே. செட்டியார். உலகம் பூராவும் சுற்றி வந்த செட்டியாருக்கு, எல்லா இடங்களையும் பற்றி 96 பக்கங்கள் மட்டும்தான் எழுத முடிந்தது! இதுவே ஒரு ஆச்சரியமான விஷயம், பாராட்ட வேண்டிய விஷயம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ஏ. கே. செட்டியார் ஒரு விஷயத்தை நோக்குகிற விதமே அலாதியானது—அவருக்கே உரித்தானது. ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்ல அவர் கையாளுகிற தந்திரங்களும் அவருக்கே உரித்தானவை. அவர் ஹாஸ்யங்களும் அவருடைய தனி முத்திரை பெற்றவை. ஈஸிசேரில் சாய்ந்துகொண்டு, கண்ணையோ, காதையோ, மனசையோ அதிகமாகச் சிரமப்படுத்திக் கொள்ளாமல், எவ்விதமான கஷ்டமும் படாமல், செட்டியார் வழி காட்ட, நாமும் உலகம் பூராவையும் சுற்றி வந்துவிடலாம். அவசியம் அடைய வேண்டிய அனுபவம் இது—எழுதப்படிக்கத் தெரிந்த தமிழர் அனைவருக்கும் கிட்டக் கூடிய இன்பம் இது.

இந்த உலகம் சுற்றும் தமிழனில் ஒரு கட்டுரை உலகில் எங்கும் மகாத்மா காந்தியின் பெயர்தான் இனிமையாக ஒலிக்கிறது என்று நிரூபிக்கிறது. "ஜப்பானில், ஓய்ஞ என்னும் சிறிய ரயில் நிலையத்தில் ரயிலுக்காகக் காத்துக் கொண்டு நின்றேன். முன்பின் அறியாத இரண்டு ஜப்பானிய வாலிபர்கள் வேகமாக வந்தனர்.

"அவர்களில் ஒருவன் என் கையைப் பிடித்துக் குலுக்கி 'நீங்கள் காந்தியடிகளின் நாட்டிலிருந்து வந்தவர் தானே?' என்றான்.

"'ஆம்' எனத் தலையசைத்தேன்.

'உலகத்தில் காந்தியடிகளைப் போன்ற மனிதர் யாரும் கிடையாது. ஜப்பானில் எத்தனையோ வீரர் பிறந்திருக்கிறார்கள்; சக்கரவர்த்திகள் பிறந்திருக்கிறார்கள். ஆனால் காந்தியடிகள் போன்ற சிறந்த மனிதர் பிறந்ததில்லை' என்றான்.

"சக்கரவர்த்தியையே கண்கண்ட தெய்வமாகக்கொண்டாடும் ஜப்பானியர், காந்தியடிகளைப் பாராட்டுவதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன்."

டோக்கியோவில் ஒரு திரைப்படக் காட்சிசாலையில் உட்கார இடந் தந்த ஒரு சீனப் பெண் "ஹலோ, இங்கே உட்காருங்கள். காந்தீஜி சௌக்கியமா?" என்று கேட்டாளாம். காந்தி கொரியாவுக்கும் வரக்கூடும் என்று அந்த நாளில் செட்டியார் சொல்லக் கேட்ட ஒரு கொரியா மாணவன் செட்டியாரைப் பிடித்துக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினானும். ஹவாய்த் தீவில் ஒரு பத்திரிகை செட்டியார் நகருக்கு வந்த அன்று "காந்தியடிகள் நாட்டிலிருந்து ஒருவர் வந்திருக்கிறார்" என்று செய்தி பிரசுரித்ததாம். "ஐரோப்பாவிலிருந்து ஆஸ்திரேலியா செல்லும் கப்பலில் போலந்து தேசப் பெண் ஒருத்தியைச் சந்தித்தேன். அவள் ஒரு பாட்டுப் பாடினாள். அதில் இரு முறை அவள் மகாத்மா காந்தி என்றாள். கேட்டபொழுது, போலந்தில் உலகப் பெரியார்கள் மீது கவி பாடுவதுண்டென்றும், அவர்களுள் காந்தியடிகள் முக்கியமானவரென்றும் குறிப்பிட்டாள்."

உண்மையில் சொல்லப்போனால் இந்த உலகம் சுற்றும் தமிழனிலுள்ள கட்டுரைகள் எல்லாவற்றிலுமே சிறப்பாக மகாத்மா காந்தியின் பெயர்தான் ஒலிக்கிறது. இரண்டாவது உலக யுத்தத்துக்குமுன் எழுதப்பட்ட இந்தக் கட்டுரைகள் எல்லாம் இந்தியாவின் புகழ் ஓங்க காந்தியடிகளின் பெயர் உலகில் மூலைமுடுக்குகளிலெல்லாம் பரவியிருந்தது என்று சொல்லுகிறது. ஒவ்வொரு இந்திய

ணேயும் காந்தியடிகளாக உலகத்தார் மதிப்பதற்கேற்றபடி நாம் நடந்துகொள்ள வேண்டுமே என்று ஒரு ஏக்கம் செட்டியாருக்கு இருக்கிறது (இருந்தது) என்றுகூடச் சொல்லத் தோன்றுகிறது.

கரும்பு, அன்னுசிப்பழம், யாத்திரிகர்கள்-இவைமூன்றும் ஹாவாயர்களின் தனி விசேஷம் என்று விளக்குகிறுர் ஆசிரியர். அவர்கள் "மொழியில் பன்னிரண்டு எழுத்துக்களே உள்ளன" என்று சொல்லி ஒரு ஏழெட்டு ஹாவாய் பாஷை வார்த்தைகளுக்கு அர்த்தமும் சொல்லியிருக்கிறுர் செட்டியார். ஸான்பிரான்சிஸ்கோவில் இறங்கிப் புது உலகத்தில் கால் வைத்ததை விவரித்திருக்கிறுர். நீக்ரோ என்று செட்டியாரை எண்ணித் தங்க இடம் மறுத்துவிட்டது லாஸ் ஏஞ்சல்ஸ் நகரம்.

"லாஸ் ஏஞ்சல்ஸிலிருந்து நியூயார்க் மூவாயிரத்து இருநூறுமைல்: ரயிலில் நான்குநாள் பிரயாணம். நியூயார்க்கில் எம்பயர் ஸ்டேட் பில்டிங்குக்கு எதிரில் இருந்தது என் பள்ளிக்கூடம்."

"ராக்பெல்லர் என்பது உலகறிந்த பெயர். இவ்வள்ளல் கோடி ரூபாய் செலவில் நியூயார்க் நகரில் 'இன்டர் நேஷனல் ஹவுஸ்' என்ற சர்வதேச மாணவர்விடுதியை அமைத்துள்ளார். அங்குள்ள இந்திய சமூகத்தில் நானும் ஐக்கியமானேன். ஐம்பத்திரண்டு தேசங்களைச் சேர்ந்த முந்நூறு மாணவர்களும் மாணவிகளும் அங்கு வசித்தனர். அவர்களுடைய தேசீய உடையும், மொழியும் வெவ்வேறு விதமானவை. ஆனுல் அவர்கள் அனைவரும் அங்கு ஒரே மாதிரி உடையணிந்திருந்தனர்; ஒரே மொழியைப் பேசினர்.

"வெளியுலகில் நடைபெறுத சில 'அதிசயங்கள்' அந்த விடுதியிலே நிகழ்ந்தன. ஜப்பானியரும் கொரியாப் பெண்ணும் கைகோத்துச் செல்வார்கள், ஜெர்மனும் யூதனும் அளவளாவுவார்கள். சீனரும் ஜப்பானியரும் அன்னியோன்னியமாயிருப்பார்கள். ஆங்கிலேயரும் இந்தியரும்

இணைபிரியாதிருப்பார்கள். அமெரிக்கரும் நீக்ரோவும் அரியாசனத் தமர்வார்கள். இத்தாலியரும் எத்தியோப்பியரும் கைகுலுக்கி க்ஷேமம் விசாரிப்பர். ஆனால் அவர்களில் பெரும்பாலோர் சொந்த நாடுகளுக்குச் சென்றவுடன் சிறந்த தேசீயவாதிகளாகிவிடுவார்கள்.” செட்டியார் இங்கு சேர்த்துள்ள ஜோடிகள் இரண்டாவது யுத்தத்துக்கு முந்திய நிலையில் கூடிய ஜோடிகள். இன்றானால் வேறுவிதமாக ஜோடி சேர்த்திருப்பார்.

பின்லாந்துக்குப் போகும் கப்பலில் பலர் பல மொழிகளில் பேசினார்கள். அவற்றில் ஒன்றுகூட எனக்குத் தெரியவில்லை என்கிறார் செட்டியார். “பின்லாந்தில் ஹெல்சிங்கியில் நேராக ஒரு உணவு விடுதிக்குச் சென்றேன். முன்னரே நான் அறிவிக்காமலிருந்ததால், அதன் நிர்வாகி என்னைக் கண்டு ஆச்சரியப்பட்டார். அன்று காலையில் ஒரு ‘கறுப்பு மனிதன்’ தமது உணவு விடுதிக்கு வரக்கூடும் என்று அவர் கனவிலும் நினைத்திருக்க மாட்டார். நிர்வாகி என்னை மேல் மாடிக்கு அழைத்துச்சென்று ஓர் அறையைக் காண்பித்தார். உணவு விடுதிக்குள் நான் நுழைந்தவுடனேயே ஒரு பரபரப்பு உண்டாயிற்று. விடுதியில் தங்கியிருந்த பெண்களும், விடுதியின் வேலைக்காரப் பெண்களும் ஜன்னல் வழியாகவும், மூலை முடுக்குகளில் நின்றுகொண்டு மறைவாகவும் என் ‘தரிசன’த்திற்குக் காத்திருந்தனர். சில வேலைக்காரப் பெண்கள் ஓடி ஒளிந்துகொண்டார்கள். அக்காட்சி மிகவும் சுவாரசியமாக இருந்தது.”

இன்னொரு கட்டுரையில் இது; “டென்மார்க்கு தேசத்தில் **1939**-ஆம் ஆண்டு நடைபெற்ற சர்வதேச வியாபார மகாநாட்டுக்கு பர்மாச் செட்டியார்கள் சங்கப் பிரதிநிதியாகச் சென்றிருந்தேன்...(டென்மார்க் தேசத்து) அரச தம்பதிகள் இரண்டாயிரம் பேரோடு கை குலுக்கினார்கள். அரசி இரண்டாயிரம் பேரையும் ‘சௌக்கியமா’ என்று

விசாரித்தார். ஆனால் இரண்டாயிரம் பேரோடு நின்ற இடத்திலேயே நின்று கை குலுக்கிய அரச தம்பதிகளை சௌக்கியமா என்று ஒருவருமே கேட்கவில்லை. அறுபது வயதான டென்மார்க் அரசர் இந்தியப் பிரதிநிதிகளோடு அரை மணி நேரம் அளவளாவியது சில வெள்ளையர்களுக்குப் பிடிக்கவே இல்லை.''

ஜெர்மனியின் தலைநகரான பெர்லினில் ஒரு தமிழ்ப் புலவரைச் சந்தித்ததைப் பற்றி எழுதியிருக்கிறார் செட்டியார். '''தமிழ்நாட்டுக்கு நீங்கள் எப்போது சென்றீர்கள்?' என்றேன். 'முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பே; அதாவது சுமார் மூன்று மகாமகங்களுக்கு முன்னே''' என்றார் (பைதான்) சாஸ்திரியார்...அவர் தில்லை நகரசபையில் அங்கத்தினராயிருந்தவர். இந்தியாவிலிருந்து இவர் ஜெர்மனிக்கு வந்ததும், சர்வகலாசாலையில் அந்நியநாட்டு மாணவர்கள் சம்பந்தமானவற்றைக் கவனிக்கும் அதிகாரியிடம் சென்று, 'இந்தியாவிலிருந்து யாராவது தமிழ் மாணவர் வந்தால் தயவுசெய்து தெரிவியுங்கள்' என்று கூறினாராம். பல ஆண்டுகள்வரை ஒரு தமிழரையும் அவர் சந்திக்கவில்லை. பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அவ்வதிகாரி 'தமிழ் என்று ஒரு மொழியிருப்பதாக நான் நம்பவில்லை' என்று கூறினாராம்.

சாஸ்திரியாருக்கு என்னிடம் பேசப் பேசத் தமிழ் நாட்டு நினைவுகள் அதிகமாயின. இட்டிலி, சாம்பார், அப்பம், அப்பளாம் முதலியவைபற்றி அவர் கூறிய பொழுது எனது நாக்கில் ஜலம் ஊறிற்று. அதை நினைத்துப் பரஸ்பரம் இருவரும் வருந்தினோம்.''

இதோ வெனீஸ் நகரம்பற்றி ஒரு குறிப்பு: ''அந்த அழகான வெனீஸ் நகரத்தில்-வீதிகளெல்லாம் ஆறுகளாக விளங்கும். அந்த அபூர்வமான வெனீஸ் நகரத்தில்-குடிப்பதற்கு நல்ல தண்ணீர் கிடையாது. வெகுதூரத்திலிருந்து குழாய் வழியாக நல்ல தண்ணீர் கொண்டுவந்தார்கள்.''

கப்பல் பிரயாணம், ரயில் பிரயாணம் முதலியன பற்றிப் பொதுவாகவும் வேறுபல ஞாபகங்கள் பற்றிக் குறிப்பாகவும் எழுதியிருக்கிறார் செட்டியார். யோனே நெகுசி என்கிற ஜப்பானியக் கவியையும், ரோமா ரோலன் என்கிற பிரஞ்சு ஆசிரியரையும் சந்தித்ததுபற்றி விரிவாக எழுதியிருக்கிறார். மேலே குறிப்பிட்ட தேசங்கள் தவிர, அயர்லாந்து, பிரான்சு, செக்கோஸ்லவேக்கியா, தென்னாப்ரிக்கா முதலிய தேசங்களில் கண்டதைப்பற்றியும் எழுதியிருக்கிறார்.

உலகம் சுற்றிய தமிழன் இந்தியாவில் செய்த பிரயாணங்கள்பற்றியும் ஒரு நூல் வெளியிட்டிருக்கிறார்-பிரயாணக் கட்டுரைகள் என்று. "உலகமெலாம் சுற்றி யென்ன லாபம்—இந்தியாவைச் சுற்றிப் பார்க்காதிருக்கலாமா?" என்று. இந்த நூலும் ரத்தினச் சுருக்கம்தான். 96 பக்கங்கள்தான். இந்தக் கட்டுரைகளில் பெரும்பாலும் யுத்த காலத்தில் எழுதப்பட்டவை.

'பிரயாணம் செய்யுங்கள்' என்பது முதல் கட்டுரை. "நான் இந்த ஊரில் பத்துவருஷ காலமாக வேலைபார்க்கிறேன். வீடுண்டு, ஆபீஸுண்டு; வேறு ஒன்றும் எனக்குத் தெரியாது. அடுத்த வீட்டுக்காரர் யார் என்றுகூட எனக்குத் தெரியாது என்று பெருமையடித்துக் கொள்ளுபவர்களும் நமது நாட்டில் இருக்கிறார்கள்...தமிழர் தமிழ் நாட்டை ஒருமுறையாவது சுற்றிப்பார்க்க வேண்டியது அவசியம்" என்று கட்டுரையை முடிக்கிறார் செட்டியார்.

பொதுவாக இந்தியாவில் பிரயாணம் செய்வது பற்றியும், இங்கு பிரயாணம் செய்வதற்கும், வெளிநாடுகளில் பிரயாணம் செய்வதற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் பற்றியும்; சிறப்பாக பம்பாய், கல்கத்தா, ஜெய்ப்பூர், ராஜ்கோட், பூரி, பீஜப்பூர், கோவா முதலிய பிரதேசங்கள் பற்றியும் மனத்தைக் கவருகிற வகையில் எழுதியிருக்கிறார் செட்டியார். செஞ்சி, திருவண்ணமலை, புதுச்சேரி, தரங்கம்

பாடி, குமரிமுனை முதலிய தமிழ்நாட்டு ஸ்தலங்களைப்பற்றி யும் எழுதியிருக்கிறார். அவருடைய எழுத்துக்கு உதாரண மாக இடமில்லாததால் இரண்டொரு சிறு குறிப்பு களே தர இயலும். "திருவண்ணாமலையில் உற்சவ காலத் தில் நடக்கும் பெரிய வியாபாரங்கள் இரண்டு. ஒன்று சிற்றுண்டிச்சாலை. மற்றொன்று கத்தரிக்கோல் வேலை... தரங் கம்பாடியில் பரம்பரையாகச் சிற்றுண்டிச்சாலை நடத்தும் அய்யர் ஒருவர் இருந்தார். இவர் பழையகாலத்து மெட்ரிகு லேஷன். இவருடைய பலகாரத்தைவிடப் பேச்சு இனிமை யாக இருந்தது. குமரிமுனையில் அதோ அங்கே இருக்கும் பாறைக்கு நீந்திச்சென்று, அதன்மீதுதான் சுவாமி விவேகா னந்தர் தவம் செய்தார். இங்கேதான் மகாத்மா நீராடினார். பழம் பெருமைகொண்ட எனது தாய்நாட்டின் எல்லை இது என்று நினைக்கும்பொழுது எந்த இந்தியன்தான் மனம் பூரிப்படையாமல் இருக்க முடியும்?"

**உலகம் சுற்றும் தமிழன்** நமக்கு அளிக்கும் பிரயாணக் கட்டுரை விருந்தை ரஸித்து அனுபவிப்பவர்கள் பாக்கிய சாலிகள். பிரயாணங்களிலே எத்தனையோ தொல்லைகள் உண்டு. அவற்றைத் தவிர்த்து ஓரளவுக்குப் பிரயாண பலனை இந்தக் கட்டுரைகளைப் படிப்பதாலேயே நாம் அடைந்துவிட முடியும்.

12. தி. ஜானகிராமன் கதைகள்

# கொட்டு மேளம்

எந்த பாஷையிலுமே இலக்கிய வளர்ச்சியின் சரித்திரத்தைக் கவனிக்கும்போது, ஒரு சில வருஷங்களில் மட்டும் வளர்ச்சி பிரமாதமாக இருப்பது தெரியவரும். மற்ற வருஷங்களில் சாதாரணமாக இருக்கும். தமிழில் 1890 முதல் 1900 வரையில், பின்னர் 1933 முதல் 1946 வரை, இலக்கிய வளம் ஓரளவுக்கு அசாதாரணமாக இருந்திருக்கிறது என்று சொல்லலாம். 1947க்கு மேல் இன்றுவரை 1956 ஓரே தேக்கம் என்றுதான் சொல்லவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இதற்குக் காரணங்கள் பல சொல்லலாம். ஆனால் எனக்குத் தெரிந்தவரையில் இதற்கு முக்கிய காரணம் இலக்கியம் வளர்ந்த அளவுக்கு இலக்கிய விமரிசனம் வளராததுதான் என்று தோன்றுகிறது. அதற்கடுத்தபடியாக ஒரு காரணம் சொல்லவேண்டுமானல், இலக்கியத்தில் பத்திரிகைகளின் அளவுக்கு மீறிய ஆதிக்கமும், நல்லதற்குப் பதில் நடுத்தரமானதே போதும் என்கிற மனப்பான்மையும்தான் என்று சொல்லலாம். 1946க்குப் பிந்திய இலக்கியத் தேக்க காலத்திலே தோன்றிய நல்ல ஆசிரியர் என்று தி. ஜானகிராமனைச் சொல்லவேண்டும். சூழ்நிலே, இன்றைய வேகம் என்கிற இரண்டையும் எதிர்த்து நீச்சுப் போடுவதென்பது சிரமமான காரியம். இந்தக் காரியத்தை இலக்கியபூர்வமாகவும், ஒரு அலக்ஷிய பாவத்துடனும் செய்திருக்கிருர் தி. ஜானகிராமன் என்று சொல்லத் தோன்றுகிறது. இந்த சாதனையைச் சாத்தியமாக்கியது கிண்டலும் கேலியும் செய்யும் அவருடைய கலைத்திறன் என்று சொல்லலாம்.

கொட்டு மேளம் என்கிற இந்தக் கதைத் தொகுதியில் பசி ஆறிற்று என்று ஒரு கதை. "அடுத்த வீட்டில் பேசுவது காதில் விழுந்தது, 'ஏனக்கா, ஏன் இவ்வளவு மெதுவாகப் பேசுகிறாள், அடுத்தவீட்டு அம்மாமி?' என்று. அதற்காக அவள் வருத்தப்படவில்லை. அதைப்போல எவ்வளவோபேர் சொல்லியிருக்கிறார்கள். டமாரச் செவிட்டுக்கு மாலைபோட்டுவிட்டு இதையெல்லாம் சட்டைசெய்து கொண்டிருந்தால் எப்படி வேலை நடக்கும்? அதைப்பற்றி அவள் கவலைப்படவில்லை. அவள் கவனத்தை இழுத்தது, அந்தக்குரல் புதிதாக இருந்ததுதான்"

அடுத்தவீட்டு ருக்மிணியின் தம்பி வந்திருந்தான். "வாசலுக்கு வந்த அவன் இடுப்பிலிருந்த பொடி மட்டையை எடுத்து ஓட்டுச்சார்ப்பின் மூங்கிலுக்குள் செருகிவிட்டுத் தற்செயலாகத் திரும்பினான். திண்ணையிலிருந்தே போக்குவரத்து செய்துகொள்வதற்காக இருந்த திறப்பின் வழியாக அகிலாண்டம் நிற்பதைப் பார்த்தான். தெருவில் கிழக்கும் மேற்குமாக ஒருமுறை பார்த்தான். குரைக்கக் கூடச் சோம்பல்படும் நாயைத் தவிர வேறு ஈ, காக்காய் இல்லை, தைரியமாக அவளைப் பார்க்க ஆரம்பித்து விட்டான்.

"நறுக்கென்று அவள் மறைந்துவிட்டாள். ஆனால் ரேழிக்குப் போனதும் கால் தயங்கிற்று. சற்று நின்றாள். உள்ளுக்கா, வாசலுக்கா என்று கேட்டுக்கொண்டிருந்த மனத்தைக் கடைசியில் வாசல் பக்கமே திருப்பிவிட்டாள். நிலைக்கருகில் நின்றுபார்த்தபோது அவனைக்காணவில்லை... சடக்கென்று தான் மறைந்ததைப் பார்த்ததும் பயந்து கொண்டுபோய் விட்டாரோ என்னவோ?

"வாஸ்தவமாகத் தன் துணிச்சலை நொந்துகொண்டு தான் அவன் போனான்.

"அவளுக்கும் தான் செய்தது தப்பு என்றுபட்டது. 'வேறு என்ன செய்வது? பைத்தியக்காரப் பெண் ஜன்மம்

அந்தச் சமயத்தில் வேறு என்ன செய்யும்!' என்று பெண்மையை நொந்துகொண்டாள். 'அவன் திரும்பி வரட்டும், இங்கேயே நின்று கொண்டிருக்கலாம். அவன் திரும்பி வரும்போது அவனுடைய சந்தேகத்தையும் பயத்தையும் போக்கிவிடலாம்' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

"'மேல் வீட்டில் எல்லோருமே அழகுதான்...! எப்படியிருந்தால் என்ன பயன்! இதையெல்லாம் நினைத்து என்ன பிரயோசனம்? கவைக்குதவாத ஆசை!"

இந்த விஷயத்தை இதைவிட நாஸூக்காகவும் அழகாகவும் நயமாகவும் விரஸமில்லாமலும் வேறு யார் தமிழில் இவ்வளவு நாட்களில் எடுத்துச் சொல்லி யிருக்கிறார்கள்? இந்த நயம் ஜானகிராமனுடைய தனிச் சிறப்புகளில் ஒன்று. மேலே கதையை இன்னும் கொஞ்சம் பார்ப்போம்.

"அவளுக்கு மட்டும்...அவளுக்கு மட்டும் என்ன? செவிட்டுக் கணவனிடம் பிரியம் இல்லாமலா இருக்கிறது? எல்லாம் இருக்கிறது. ஆனால் குறை குறை தானே?"

அவள் நினைவுகள், தான் கண்டு காதலிக்க எண்ணிய புருஷர்களைப்பற்றி ஓடுகிறது. கல்யாணத்துக்கு முன் எதிர் வீட்டுப் பையன். இப்போது எதிர்வீட்டுப்பையன், ராஜத்தினிடமும் அவள் மனத்தைப் பறிகொடுத்தவள் தான். "'இருபது வயதிருக்கும். எங்கேயோ மீரத்தில் மிலிடரியில் உத்தியோகம்...கண் தலையாட்டிப் பொம்மை மாதிரி ராஜத்தின் மேலே திரும்பித் திரும்பி விழுந்தது ... பிறகு இரண்டு நாளைக்கு அகிலாண்டத்துக்கு ஒன்றும் ஓடவில்லை, தேனீ மாதிரி அவன் நினைவே வந்து அவளை ஒட்ட ஒட்ட மொய்த்துக்கொண்டிருந்தது. ஏதாவது ஒரு சாக்கைச்சொல்லி எதிர் வீட்டுக்கு மணிக்கு ஏழுதடவைபோக ஆரம்பித்தாள்' இரண்டு நாட்களுக்கெல்லாம் அவன் அவளிடமும்

போய்ட்டு வரேன் என்று சொல்லிக்கொண்டு கிளம்பிவிட்டான்; அதுதான் முடிவு அந்தக் காதலுக்கு. அவன் போன பின் தன் வீட்டு வேலைக்காரியுடன் சண்டைபோட்டாள்.

"படபடப்பு ஓய்ந்ததும், நடந்ததை நினைத்து அழுதாள் அகிலாண்டம். நிம்மதியிலிருந்து நழுவிவிட்ட மனம் வேதனை தாங்கமாட்டாமல் அழுந்திக்கொண்டிருந்தது. நாலு நாள் கழித்துத் தற்செயலாக அவள் தகப்பனார் வந்தார். அவரோடு பிறந்தகம் போய்ப் பத்துப் பதினைந்துநாள் இருந்துவிட்டு வந்ததும் தான் மனம் நிலைகொண்டது. கொஞ்சம் கொஞ்சமாக இரண்டுநாள் அவள் கற்பனையிலும் ஆசையிலும் நாடகம் ஆடிவிட்டுப்போன ராஜத்தை மறந்துவிட்டாள்.

"இப்பொழுது அந்த ஸ்தானத்துக்கு வந்துவிட்டான் ருக்மிணி அம்மாமியின் தம்பி. அவனுக்கு லீவு பத்துப் பதினைந்து நாள் இருக்கிறது. இருந்தால் என்ன? அவள் அதிருஷ்டம் தெரிந்ததுதானே. இருந்தும் மனது கேட்க மாட்டேன் என்கிறது. ஒரு ஆசை—குளிக்கப்போனவன் இன்னும் வரவில்லை. துடிக்கத் துடிக்க அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் அவள்.

"என்ன யோசனை பலமாயிருக்கு!" என்று குரல் கேட்கவே, சூன்யத்தைப் பார்த்து நினைவிழந்திருந்தவளுக்குத் தூக்கிவாரிப்போட்டது. அவள் புருஷன் நைவேத்தியப் பாத்திரத்துடன் புன்சிரிப்பு சிரித்துக்கொண்டு நின்றான்.

"'ரொம்ப நாழி பண்ணிவிட்டேனே? பசி துடிக்கிறதாக்கும் அம்பாளுக்கு?' என்று கேட்டார் அவர். செவிடனின் சிறுகுரலில் எவ்வளவு பரிவு! எவ்வளவு கனிவு! எவ்வளவு நம்பிக்கை! என்ன நிர்மயமான நிர்மலமான பார்வை! வெயிலில் கால் பொரிய நடந்துவிட்டுவந்த தேகம் வேர்த்து விறுவிறுத்துக்கொண்டிருந்தது. ஜன்மத்திலேயே

கோபத்தை அறியாத கண்ணும் உதடும் வழக்கம்போல் புன்சிரிப்பில் மலர்ந்திருந்தன.

"இதைவிட என்னவேண்டும்?" என்று மயங்கிப்போனாள் அகிலாண்டம்.

"சிரித்துக்கொண்டே, நைவேத்தியப் பாத்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டு அவ்வளவு அன்பைக் காட்டிய விதியை உள்ளே அழைத்துப்போய்க் கதவைத் தாழிட்டு, அதன் உடல் வேர்வையைத் துடைத்தாள். அது இலையில் உட்கார்ந்து சாப்பிடும்போது, அவளுக்கு எல்லாப் பசியும் தீர்ந்துவிட்டது" என்று முடிகிறது கதை. சின்னக்கதை தான். ஒரு பெரிய விஷயத்தை மிகவும் லேசாக, பாதிக் கிண்டலாக எடுத்துச் சொல்லிவிட்டார் ஆசிரியர்.

இன்னொரு கதையையும் பார்க்கலாம். மாமா பையனையும் மாப்பிள்ளையையும் ரெயிலேற்றிவிட வந்திருந்தார். பையன் ஆரஞ்சு ஆரஞ்சு என்று எவ்வளவோ கேட்டும் மாமா காதில் விழாதமாதிரியே திரும்பிப் போய்விட்டார். வண்டி கிளம்பியதும் பையன் ஆரம்பித்தான்.

" 'யப்பா, யப்பா!'

" 'ஏண்டா கண்ணு?'

" 'பிச்சி மாமாவுக்கு வந்து, வந்து, தொளாயிர ரூபாய் சம்பளம். பணக்காரர். இவ்வளவு பணக்காரரப்பா!' என்று கையை ஒரு கடவாத்திய அளவுக்கு அகற்றி,மோவாயை நீட்டினான், குறை சொல்லுகிறாற் போல.

" 'அதுக்கு என்ன இப்ப?'

" 'வந்து செத்தே முன்னாடி ஆரஞ்சு கேட்டேனேல்லியோ, வாங்கிக் குடுக்காம எங்கேயோ பாத்துண்டு நின்னார்ப்பா'

" 'அவர் காதிலே விழுந்திருக்காது. விழுந்திருந்தா வாங்கியிருப்பார்'

" 'நான் இரைஞ்சுதான்பா சொன்னேன்.'

“ ‘பின்னே ஏன் வாங்கிக் கொடுக்கல்லே?’ கேள்வியை நானே திருப்பிக் கேட்டுவிட்டேன். பையன் திணறினன்.

“ ‘வந்துப்பா, வந்து...பிச்சி மாமாவைவந்து ஒரு மூனு கால் ஸைக்கிள் வாங்கித் தான்னேன். வந்து, தரேன் தரேன்னு ஏமாத்திப்பிட்டார்ப்பா!’

“ ‘அவர் என்னத்துக்குடா வாங்கணும்? நான் வாங்கித் தரேன்’

“ ‘நீ எப்படி வாங்கித்தருவியாம்?’

“ ‘ஏன்?’

“ ‘உனக்கு நூறு ரூபாதானே சம்பளம்?’

“ ‘உனக்கு யார் சொன்னு?’ ”

திருச்சினுப்பள்ளியிலே தகப்பனர் தான் பையனுக்கு ஆரஞ்சு வாங்கிக்கொடுத்தார். “ ‘யப்பா’ இதை ஊருக்குப் போய்த் திங்கறேம்ப்பா. அம்மா உரிச்சுக் கொடுப்பா கையிலே, வாங்கித் திங்கறேம்ப்பா’ என்று கெஞ்சினன். ‘ஆல்ரைட் அப்படியே செய்’ ”

ஒரு அம்மாளும் ஒரு பெண்ணும் அந்த வண்டியில் ஏறிக்கொண்டிருந்தார்கள். அந்த அம்மாளைப் பார்த்தால் ஒரு வளமான பணக்காரத் தோற்றம். பெண் ஏழ்மையின் சின்னம். அந்த அம்மாளுக்கும் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம்? எப்படிக் கேட்பது?...

ஒரு வழியாக அந்தப் பெண்குழந்தை கல்கத்தாவில் ஒரு தமிழ்க் குடும்பத்தில் வேலைசெய்யப் போகிறது என்று அறிந்துகொண்டதும் பெண் குழந்தையையே விசாரித்தார் அவர்.

“ ‘குழந்தை, உனக்கு அப்பா அம்மா இருக்காளா?’

“ ‘இருக்கா’

“ ‘அப்பா என்ன பண்ருர்?’

“ ‘ஒண்ணுவது வாத்தியார்’

“ ‘அக்கா, தங்கை, அண்ணு, தம்பி...’

" 'இருக்கா. நாலு அக்கா. ரெண்டு அண்ணு. ஒரு தம்பி இருக்கான். அதுக்கப்புறம் ஒரு தங்கை.'

" 'அண்ணு என்ன பண்ருன்?'

" 'பெரிய அண்ணு கிளப்பிலே வேலை செய்யருன் சின்ன அண்ணு சகிண்ட்பாரம் வாசிக்கிருன்'

" 'நீ வாசிக்கல்லையா?'

" 'இல்லை. அண்ணு ஒருத்தன்தான் வாசிக்கிருன். எங்களுக்கெல்லாம் சம்பளம் கொடுக்க முடியல்லே, அப்பாவுக்கு'

" 'அதுக்காக நீ வேலைக்குப் போறயாக்கும்?'

" 'ஆமாம். மத்தியான்னச் சாப்பாட்டுக்கே எல்லாருக்கும் காணமாட்டேங்கறது'

" 'உனக்கு என்னவேலை செய்யத் தெரியும்?... புடவை தோப்பியா? உனக்குப் புடவையைத் தூக்க முடியுமோ?' "

சர்விஸ்ஆன பெண்தான் அது. ஒன்பது வயசாகிற பெண்ணுக்கு மூன்று வருஷம் வீட்டு வேலைகள் செய்து பழக்கமாகிவிட்டது. பெரிய ஜட்ஜ் வீட்டிலே' பழையது சாப்பிட்டு வளர்ந்த பெண். வயிறு நிரம்பாமல் சாப்பிட்டு வேலைசெய்யப் பழகிக் கொண்டு விட்டது. வேறு ஒரு பெரிய இடத்தில் வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தது. தன் பிள்ளைக்கும் அந்தப் பெண்ணுக்கும் சாப்பாடுசெய்து வைத்தார் தஞ்சாவூரிலே. சாதாரணமாகப் பாடாகப் படுத்துகிற பையன். அவளிடம் ஒட்டிக்கொண்டு, வருஷக் கணக்கில் பழகிவிட்டதுபோல அவளைப் பிடித்துக்கொண்டு வந்தான் பையன். கல்கத்தாவிலே ஒரு குழந்தையைப் பார்த்துக்கொள்வதற்காக இங்கிருந்து போய்க்கொண்டிருந்த குழந்தை அது.

" 'ரொம்பச் சமர்த்தும்மா இந்தக் குழந்தை' என்றேன் அந்த அம்மாளிடம்.

'நாதனில்லாட்டாச் சமர்த்துத் தானு வந்துடறது. ஒட்டி ஒட்டிண்டு பழகறது. கல்கத்தா போகாட்டா நானே

இதை வச்சிண்டிருப்பேன்... என்னமோ பகவான்தான் காப்பாத்தணும்...ஆனா இது எங்கேயும் சமாளிச்சுண்டு டும் போலத்தான் இருக்கு' என்ருள் அந்த அம் மாள்''

தகப்பன் அந்தப் பெண்ணுக்கு ஒரு ரூபாய் கொடுத் தான். பையன் தன் கையிலிருந்த ஆரஞ்சுப் பழத்தையே கொடுத்துவிட்டான். "வாங்கிக்கோம்மா!" பெண் வாங்கிக் கொண்டது. "'ஸ்வாமி. நல்ல உத்தமமான பிள்ளையைப் பெத்திருக்கேள். வாடா கண்ணு எனக்கு ஒரு முத்தம் கொடுத்துட்டுப் போ' என்று அம்மாள் அழைத்தாள். பையன் கொடுத்துவிட்டு ஓடிவந்தான். என் மெய் சிலிர்த் தது. முகத்தைக் கூடியவரையில் யாரும் பார்க்காமல் அப் பால் திருப்பிக்கொண்டு கீழே இறங்கி அவனைத் தூக்கிக் கொண்டு நடந்தேன். அவனுக்கு நடக்கவா தெரியாது? எனக்கு என்னவோ அவனை வாரியணைத்துக் கொள்ள வேண்டும் என்று உடம்பு பறந்தது. தூக்கி எடுத்துத் தழுவிக்கொண்டே போனேன். உள்ளம் பொங்கி வழிந் தது. அன்பையே, சச்சிதானந்தத்தையே கட்டித் தழுவுகிற ஆனந்தம் அது" என்று முடிகிறது சிலிர்ப்பு என்னும் கதை.

ஸ்வாமி கோயிலில் தப்புச் செய்து "பொட்டை" யிடம் மாட்டிக்கொண்ட பண்ணையின் தத்துப் பிள்ளை, பெண்டாட்டி சரியில்லாத அத்து, கிழம் சாகப்போகிறது என்று காத்திருக்கும் ஊரார், பில் வசூல் செய்யத் தெரி யாமல் தரும ஆஸ்பத்திரி போர்டு போடுகிற டாக்டர் என்று பலரை நாம் 'கொட்டு மேளத்தில் சந்திக்கலாம். அற்புதமான பூரணமான ஓர் அனுபவம் இது.

13. மு. வரதராசன் நாவல்

# கரித்துண்டு

டாக்டர் மு. வரதராசன் இதுவரையில் சற்றேறக் குறைய அறுபது நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார். அவை ஒன்றோடொன்று போட்டி போட்டுக்கொண்டு பிரமாதமாகவே விற்பனையாகின்றன என்பது எல்லோரும் அறிந்த விஷயம். சென்ற தலைமுறையில் வாசகர்களிடையே கவி யோகி சுவாமி சுத்தானந்த பாரதியார் வகித்த ஸ்தானத்தை இந்தத் தலைமுறையில் பேராசிரியர் வரதராசன் வகிக்கிறார் என்று சொன்னால், அது மிகையே யாகாது. கவி யோகியைப் போலவே வரதராசனும் இலக்கியத்தில் பல துறைகளில் ஈடுபட்டு எழுதியிருக்கிறார். நாவல்கள், கதைகள், இலக்கியப் பேருரைகள், அற மொழிகள் முதலியனவற்றைச் சற்றுத் தாராளமாகவே எழுதியிருக்கிறார். கவிதையும் மொழிபெயர்ப்பும் அவர் கையாண்டதாகத் தெரியவில்லை. **கரித்துண்டு** என்பது அவருடைய நாவல்களில் ஒன்று.

வரதராசன் எழுதியதைப் படிக்கும்போது முதன் முதல் நம் மனத்தில் பதிகிற விஷயம் அவருடைய நடை. தங்குதடையேதுமின்றி, கை வீசி வேகமாக, நடக்கிறது அவர் நடை. **கரித்துண்டில்** இரண்டு இடங்களிலிருந்து உதாரணங்கள் எடுத்துச் சுவைத்துப் பார்க்கலாமே!

''மறு நாள் மாலை ஆபீஸை விட்டுப் புறப்பட்டதும் என் கால்கள் பாரி முனையை நோக்கி நடந்து சென்றன. காரணம் இல்லாமல் இப்படி நடந்து வருகின்றோமே என்று சிறிது நின்றேன். பலவகையாக நிறம் நிறமாகத் தீட்டிய படங்களை வைத்துக்கொண்டு கைத்தறி நெச

வாளர் கூட்டுறவுச் சங்கக் கடைக்கு எதிரே ஒருவன் உட்கார்ந்திருந்தான். அவனை நோக்கி அணுகினேன். படங்கள் அழகாகவே இருந்தன. பல படங்கள் இயற்கைக் காட்சிகளைத் தீட்டிய ஓவியங்களாக இருந்தன. மாலைக் கதிரவனைப் பொறித்த படங்கள் சில, காலையில் கடலில் கதிரவன் எழும் காட்சிகள் சில, கதிரவன் இல்லாத அந்திவானம் சில வகை, மூன்றும் பிறை முகில் கூட்டங்களுக்கிடையே புன்னகை பூக்கும் காட்சிகள் சில, நிறைமதி நீள் கடலிடையே எழுந்து கடற்கரையில் வெண்ணிலவு பொழியும் காட்சிகள் சில, மலையிடையே நிலவு தோன்றும் படங்கள் சில வகை, செறிந்த காட்டிடையே குரங்குகள் தாவி விளையாடும் படங்கள் சில, புதரிலே பாம்பு வட்டமிட்டு உறங்கும் படம் ஒன்று, மானும் முயலும் துள்ளி விளையாடும் முல்லை நிலக் காட்சிகள் சில, இருண்டு மழை பொழியும்போது மின்னல் கொடி கொடியாக வானத்தில் பூத்தொழில் புனையும் ஓவியம் சில, குற்றால அருவிக் காட்சிகள் சில, கோடைக்கானல் ஏரிக்கரைக் காட்சிகள் சில, பல நிறப் பூந்தோட்டக் காட்சிகள் சில, கடற்கரையில் எழுந்து விழும் அலைகளின் படங்கள் சில, ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரின் காட்சி சில, ஆடும் மயில்களின் அழகிய கோலங்கள் சில, காக்கைப் பள்ளிக் கூடத்தை எள்ளி நகையாடும் கிள்ளைக் கழக ஓவியம் சில, புறாக்களின் காதல் சில, தூக்கணங் குருவியின் தாய்மை சில, இவ்வாறே இன்னும் பற்பல ஓவியங்கள் வெள்ளைத் தாளில் தீட்டிய வண்ணப் படங்களாக விளங்கின. இவற்றிற்கிடையே அழகிகளின் ஓவியங்கள் சில இருந்தன; குழந்தைகளின் கொள்ளைச் சிரிப்பு, வெள்ளை அழுகை, தளர்நடை முதலியவற்றை எழுதிய ஓவியங்கள் சில இருந்தன. என் கண்கள் அவற்றை மாறி மாறிப் பார்த்தன. சிலர் என்னைப்போல் வந்து எட்டிப் பார்த்தனர்; ஒரு சிலர் எடுத்துப் பார்த்தனர்; அவருள் நால்வர் ஐவர்

பணம் கொடுத்துப் பெற்றுச் சென்றனர். எனக்கும் சில வற்றையேனும் வாங்கிச் செல்ல வேண்டும் என்ற வேட்கை எழுந்தது.''

சிந்திப்பதற்கோ, மூச்சுவிடுவதற்கோகூட வாசகன் தயங்க வேண்டியதேயில்லை இந்த வசனத்தைப் படிப்பதில். இதே போல இன்னொரு இடம். "ஓவியர் பெருமூச்சு விட்டுத் தலை நிமிர்ந்தார்! 'உங்களிடம் சொல்வதில் தப்பு இல்லை. நீங்கள் மிகவும் நெருங்கிப் பழகி விட்டீர்கள்; சொல்கிறேன்' என்று நிறுத்தினர். மறுபடியும் பெருமூச்சு விட்டார். 'நிர்மலா வேறு யாரும் அல்ல; என் மனைவி. கலை எங்கள் காதலை வளர்த்தது. அழகுதான் எங்கள் கவர்ச்சிக்குக் காரணமாக இருந்தது. அழகே ஆற்றல் மிகுந்தது என்ற பைத்தியம் எனக்கு அப்போது இருந்தது. பொன்னியின் உறவு ஏற்பட்ட பிறகுதான் அன்புக்கு உள்ள ஆற்றல் எப்படிப்பட்டது என்று உணர்ந்தேன். அன்பின் ஆற்றல் முதலில் அவ்வளவாகத் தெரிவதில்லை. நாளடைவில்தான் அதன் பெருமை தெரிகின்றது. அழகு முதலிலேயே தன் ஆற்றலைக் காட்டிப் பிணைத்து விடுகின்றது. ஆனல், அதன் ஆற்றல் நீடிக்குமா என்று சொல்ல முடியாது; நிலை இல்லாதது. நிர்மலாவைக் காதலித்து, அவளை மணந்துகொண்ட நாட்களில் எனக்கு இந்த உண்மை தெரியாது...' அவருடைய முகத்தில் மலர்ச்சி மிகுந்தது. முன் இருந்த துயரமும் கண்ணீரும் எப்படி மறைந்தனவோ, தெரியவில்லை. இனிக் கவலையில்லை. என்ன வேண்டுமானலும் கேட்கலாம் என்று துணிவு கொண்டேன். 'நல்ல ஆடம்பரமான நிலையிலிருந்துவிட்டு இப்படிப்பட்ட ஏழை வாழ்வுக்கு இறங்கி வர, உங்களால் எப்படி முடிந்தது?' என்றேன். 'துணிவுதான். ஆற்றிலோ குளத்திலோ இறங்கித் தண்ணீரில் குளிப்பதற்கு முன், சிறிது நேரம் தயங்கித் தயங்கி நிற்கிறோம். காலைத் தண்ணீரில் வைக்க மட்டும் தயங்குவதேயில்லை. ஆனல், இடுப்

பளவு நீரில் இறங்கி, உடம்பை நனைப்பதற்குத்தான் தயங்குகிறோம். எளிய வாழ்வைப் பற்றிப் பேசுவதற்குத் தயங்குவதில்லை; எழுதுவதற்கும் தயங்குவதில்லை. வாழ்வதற்குத்தான் தயங்குகிறோம். ஏன் தயங்க வேண்டும்? துணிந்துவிட்டால் பிறகு நல்லதாகிவிடும். தண்ணீரில் துணிந்து ஒரு முழுக்குப் போட்டு மார்பையும் தோளையும் தேய்த்துக்கொண்டு, பிறகு பாருங்கள். குளிர் பறந்துவிடும்; தயக்கம் நீங்கிவிடும். பிறகு தண்ணீரை விட்டு வர மனம் இருக்காது' என்றார்.

"மணி என்ன ஆனதோ தெரியவில்லை. காவல்காரன் வேறொருவனாக மாறியிருந்தான். சேவல் ஒன்று தெளிவாகக் கூவியது கேட்டது. அதற்கு மறுமொழி கூறுவது போல் மற்றொரு சேவல் கூவியது. அரசமரத்து இலைகள் மெல்ல மெல்லத் தம் சலசலப்பைச் செய்துகொண்டிருந்தன."

இந்த மாதிரி வாசகனைச் சிரமப்படுத்தாத வசனத்தைப்போலவே ஆசிரியர் வரதராசன் கதைப் போக்கையும் வாசகனைச் சிரமப்படுத்தாத வகையில் அமைத்திருக்கிறார். ஒரு இடத்திலாவது வாசகன் நின்று யோசித்து இப்படியா என்று எண்ண வேண்டியதில்லை. கற்பனைக் கண்களைத் திறந்து, சொல்லாத விஷயங்களைக் கிரஹிக்கத் திணற வேண்டியதில்லை. வரதராசனாரின் நாவலில் வார்த்தைகளில் சொல்லாத விஷயம் என்று ஒன்றுமே கிடையாது. இந்த அம்சம் முக்கியமாகப் பலருக்கும் பிடித்திருக்கிறது என்பதில் வியப்படைய ஒன்றுமில்லை.

கரித்துண்டின் கதை அப்படி ஒன்றும் திருப்பங்கள் இல்லாத நேரான கதையல்ல. கரிக்கட்டியை வைத்துக்கொண்டு ஒருவன் நடைபாதையிலே அழகழகாகச் சித்திரங்கள் தீட்டுகிறான். கூடுகிற கும்பலில் சிலர் வியந்து, அவனுக்கு ஏதாவது கொடுத்துவிட்டுச் செல்கிறார்கள். அந்தக் கலைஞன் நொண்டி. அவனைப் பின்பற்றிச் சென்று

அவனிருப்பிடம், அவன் சேர்மானமான பொன்னி, பொன்னியின் முதல் கணவனின் புதல்வன், அக்கம்பக்கத்தார் முதலியவர்களை அறிந்து கொள்ளுகிறார் கதையைச் சொல்லும் சாதாரண மனிதர். வடநாட்டுப் பெண்ணை மணந்துகொண்டிருக்கும் ஒரு பேராசிரியரும் வருகிறார் இந்த நாவலிலே—கதை சொல்கிறவரின் நண்பர், ஒரு மாணவன் மூலம். இந்த மாணவர் புரட்சிக்காரர். புரட்சி மனப்பான்மையும், அரசாங்கம் கவனியாத பல விஷயங்கள் பற்றிக் குற்றச் சாட்டுகளும் அங்கங்கே அள்ளித் தெளிக்கப்பட்டிருக்கின்றன. பல தினசரி சாதாரண விஷயங்கள் பற்றியும், அவை எப்படித் தீரவேண்டும் என்பது பற்றியும் தன் பாத்திரங்கள் மூலமாக ஆசிரியர் ஓரளவுக்கு அழுத்தமாகவே அறிவுறுத்துகிறார்.

கரித்துண்டுக் கலைஞன் வாழ்ந்த குப்பத்திலே வெள்ளம் வந்து ஏழை ஜனங்கள் வேறிடம் தேட நேரிடுகிறது. கதை சொல்பவரும் கலைஞரும் நெருங்குகிறார்கள். காரணமில்லாமலே அவர்கள் இருவரும் சிறைப்பட்டு, ஓரிரவு லாக்அப்பில் இருக்க நேரிடுகிறது. அன்று இரவில் கலைஞர் மனம் திறந்து தன் பழைய வாழ்க்கை பூராவையும் உணர்ச்சி வெள்ளமாகக் கதை சொல்பவர் காதில் கொட்டுகிறார். வங்காளக்காரரர் அவர். மேன்மையான ஸ்திதியிலிருந்தவர்; ஆசைப்பட்டுக் கல்யாணம் செய்துகொண்ட காதலியுடன் வாழும்போது, கால்களை இழந்து ஆஸ்பத்திரியில் இருக்கிறார். அவரை மணம் செய்துகொண்ட காதலி, அவரைத் திரும்பியும் பார்க்கவில்லை. மனமுடைந்து வெளியேறித் தென்னாடு வந்து, தமிழ் கற்றுக்கொண்டு, தமிழர்களிடையே ஏழையாக வாழ்ந்து, பொன்னியின் ஆதரவிலே அமைதி பெற்றவர் கரித்துண்டுக் கலைஞர்.

புரட்சிக்காரர் குமரேசன் அடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். ஏழை பாழைகளுக்குக் கல்வியறிவு புகட்டத் துணிந்ததற்காக அவருக்குக் கிடைத்த தண்டனை அது.

பேராசிரியரும் வந்து குமரேசனைப் பார்க்கிறார்—புரட்சி செய்வது சரியல்ல என்று தன் கட்சியை வலியுறுத்த அவருக்கு ஒரு சந்தர்ப்பமாகிவிட்டது குமரேசன் அடியுண்டது. ஆனால், அதைவிட முக்கியமான விஷயம் காத்திருக்கிறது. பேராசிரியரின் வங்காள மனைவி, அவருக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதி வைத்துவிட்டு, எங்கேயோ போய்விட்டாள். அவள்தான் கரித்துண்டுக் கலைஞனின் பூர்வாசிரமத்தில் அவன் மனைவியாக இருந்த நிர்மலா.

இவ்வளவுதான் கதை. சித்தூர் எல்லைக் கிளர்ச்சி, கைத்தறி நெசவாளர் நிலை, பம்பாய்த் தமிழர் நிலை முதலியனவும் ஆங்காங்கே விவரிக்கப்படுகின்றன. முகவுரை எழுதியுள்ள சீ. வேங்கடசாமி அவர்கள் சொல்வதுபோல, பொது மக்களிடையே அரசியல் அறிவைப் பரப்ப இப் பகுதிகள் பெரிதும் பயன் தரலாம். லட்சிய அரசியல்பற்றி ஆசிரியர் கொண்டுள்ள கருத்துக்கள் பெரும்பாலோருக்கு - அதுவும் பெரும்பாலான தமிழ் வாசகர்களின் மனப் பண்புக்கு ஏற்றதாக இருப்பது இந்த நாவலின் தனிச் சிறப்பு என்று சொல்லலாம். கதாபாத்திரங்களில் சிலரை ஏழைகளின் பிரதிநிதிகளாகவும், சிலரை செல்வந்தர்களின் பிரதிநிதிகளாகவும் வைத்து, அவர்கள் வாய் மூலமாகவே பல விதமான கருத்துக்களை எடுத்துக் கையாண்டிருக்கிறார் ஆசிரியர். "கலையின் தன்மை, கலைஞர் வாழ்வு ஆகியவற்றை அழகுணர்ச்சி கெடாமல் உள்ளது உள்ளபடியே எடுத்துக் கூறும் நோக்கத்தோடு இக்கதை உருவாகியுள்ளது" என்று சீ. வேங்கடசாமி கூறுகிறார். அது எவ்வளவு உண்மை என்பது பார்ப்பவர்களுக்குத் தெளிவாகவே விளங்கும். இத்தனைக்கும் மேலாக ஒரு அம்சம் கரித்துண்டில் காணப்படுகிறது—அதுதான் திருக்குறளின் திருப்புகழ். ஒரு இடத்தில் வேண்டாமை செல்வம் என்கிற திருக்குறளைச் சொல்லி, சொற்களின் பொருளையும் விளக்கினார் கதை சொல்பவர். "அமைதியாகக் கேட்டார் (கரித்துண்டுக்

கலைஞர்). பெருமூச்சு விட்டார். 'எனக்கு இப்போது வேறொன்றும் என் வாழ்க்கையில் குறையாகத் தெரிய வில்லை. இந்த நாட்டுக்கு வந்து வாழ்ந்த பிறகும், இந்த மொழியைப் பேசக் கற்றுக்கொண்ட பிறகும், இந்த உயர்ந்த புத்தகத்தைப் படிக்காமல் செத்துப்போவேனோ என்று கவலைப்படுகிறேன். இதுதான் குறையாக இருக் கிறது' என்று கைகூப்பினார்.'' அவர் திருக்குறளைப் படித் துக் கடைத்தேறினாரா என்பது கதையில் சொல்லப்பட வில்லை, படித்திருப்பார்—அதனால் கடைத்தேறியுமிருப் பார் என்று தமிழர்களாகிய நாம் பெருமையுடன் நம்பலாம்.

கதாநாயகனான கலைஞன் மட்டும்தான் திருக்குறளைப் பற்றி அறிந்துகொண்டான் என்பதில்லை. கலைஞனின் பூர்வாசிரமத்தில் அவன் மனைவியாக இருந்த நிர்மலா, பிறகு தன்னை ஆதரித்த பேராசிரியரை விட்டுப் பிரியும்போது எழுதி வைத்த கடிதத்தில் திருக்குறளைப்பற்றிக் குறிப்பிடு கிறாள் என்பது கவனிக்க வேண்டிய விஷயம். ''அன்புக்கு அடிமையாகும் பண்பாடு எனக்கு அந்தக் காலத்திலே இன்னது என்றே தெரியாது'' என்று எழுதியிருந்தாள் நிர்மலா. ''நான் இவ்வளவு திருந்தியிருக்கிறேனென்றால், அதற்கு முதல் காரணம், என்னோடு உள்ளம் கலந்து தமக்கைபோல் பழகிய (பம்பாய்த் தமிழ்ப் பெண்) செந்தாமரை. இரண்டாவது காரணம், அந்த அம்மா கற்றுக் கொடுத்த திருக்குறள். செந்தாமரையின் நட்பு எனக்குக் கிடைக்காதிருந்தால், நான் திருக்குறளை மதித் துக் கையால் தொட்டிருக்க மாட்டேன். திருக்குறளைப் படித்து அதனிடம் அன்புகொள்ளாமலிருந்திருந்தால், பம்பாயில் உங்களுடைய சொற்பொழிவைக் கேட்க வந் திருக்க மாட்டேன்...திருக்குறளைக் கற்று அப்போதே நான் திருந்திவிட்டேன் என்பது உண்மைதான்...என் வாழ்க்கையைப் பண்படுத்திய அந்தச் செந்தாமரைதான்

இன்று நான் படும் மனநோய்க்குக் காரணம். எனக்கு வாழ்க்கையின் உண்மைகளை உணர்த்திய திருக்குறள்தான் என்னுடைய நெஞ்சம் என்னைச் சுடுவதற்குக் காரணம்... திருக்குறள் என்னைக் கோழையாக்கிவிட்டது; குற்றம் செய்தால் இறுமாந்து திரிய விடவில்லை; நினைந்து வருந்தச் செய்கிறது. குற்றம் செய்யாமல் நல்ல வழியில் வாழ்வதற்கு முயலுமாறு தூண்டுகிறது; தனியே இருந்து சிந்திக்கும் பழக்கத்தை வளர்த்து விடுகிறது...'தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்' அந்தக் குறள் இன்னும் என் செவியில் ஒலித்துக்கொண்டிருக்கிறது...மரத்துப் போயிருந்தது என் நெஞ்சம். அது இப்போது மனச்சான்றின் சுடுகைக்கு உரிய உணர்ச்சியுள்ளதாகிவிட்டது....

...மறுபடியும் மன்ருடிக் கேட்டுக் கொள்கிறேன். மன்னித்து இரக்கம் காட்டுங்கள். திருக்குறளின் பெயரால் வேண்டிக் கொள்கிறேன். திருந்திவிட்ட பெண் மனம் என்பதை உணர்ந்து ஏற்றுக் கொள்ளுங்கள். 'திறனல்லதற் பிறர் செய்யினும் நோநொந்து அறனல்ல செய்யாமை நன்று' " என்று ஒரு குறளுடன் நிர்மலாவின் கடிதம் முடிகிறது.

**கரித்துண்டில்** பேராசிரியர் வரதராசன் திருக்குறளையே கதாநாயகனுகவும், கதாநாயகியாகவும் வைத்துக் கதையை நடத்தியிருக்கிருர் என்று சொல்லவேண்டும். தமிழர் ஒருவருடன் ஒருவர் போட்டியிட்டுக்கொண்டு இது போன்ற வரதராசனுரின் நாவல்களை வாங்குவதில் வியப்பென்ன இருக்கிறது!

14. தி. ஜ. ரங்கநாதன்: கட்டுரைகள்

# பொழுதுபோக்கு

நம்மவர்களில் பெரும்பாலானவர்களுக்குப் பொழுது தானுகவே போய் விடுகிறது. அவர்களாகப் போது போக்குவதில்லை. பொழுதைச் சரியானபடி போக்கத் தெரிந்தவனைக் கலைஞன் என்று நாம் கொண்டாடுவதில் தவறேயில்லை. பொழுதைச் சரியானபடி போக்கத் தெரிந்தவர் தி. ஜ. ர. அவர் எழுதி நமக்களித்துள்ள பொழுது போக்கு என்னும் கட்டுரைத் தொகுதி ஓரளவு நமக்கும் அந்தக் கலையைக் கற்றுத்தர முயலுகிறது. நாற்பத்தியொன்பது கட்டுரைகளில் இந்தக் கலையை நம்மால் கற்றுக் கொள்ள முடியாவிட்டால், அதற்கப்புறம் இந்தக் கலை நமக்கு என்றும் கை வராது என்று விட்டுவிட வேண்டியது தான்.

"தாயுமான ஸ்வாமிகள் இப்போது உயிருடனிருந்தாருல் எந்தப் பத்திரிகை ஆபீஸிலாவது அவருக்கு ஆசிரியர் உத்தியோகம் கிடைக்குமா?" என்ற கேள்விக்குப் பதில் அளிக்க முயலுவது மிகவும் ரஸமான விஷயம். எங்கெந்தப் பத்திரிகைகளுக்கு யார் யாரிடம் சிபார்சு வாங்கிக் கொண்டு, எந்த எந்த மாதிரி விண்ணப்ப நமூனுக்கள் எழுதிக்கொண்டு தாயுமானஸ்வாமிகள் கிளம்பியிருப்பார் என்று சிந்தித்துப் பார்ப்பதிலே ஒரு நாள் என்ன, ஒரு வாரம் பூராவும்கூடப் பொழுதைக் கழித்துவிடலாமே! தாயுமானஸ்வாமிகளுக்குக் கண்டிப்பாய் இன்றையப் பத்திரிகைகளில் எதிலும் வேலை கிடைக்காது என்று ஆசிரியர் தி. ஜ. ர. சொல்வதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமேயில்லை. ஏன் ஏற்றுக்கொள்ள மறுக்கிருேம்

என்பதற்கும் காரணங்கள் கண்டு பிடித்துக் கொண்டே மேலும் ஒரு வாரம் கழித்து விடலாமே நாம்!

இலக்கியமே ஒரு பெரும் பொழுது போக்குத்தான் என்று ஒரு கட்சியுண்டு. அதை ஒப்புக்கொள்ள மறுக்கிறவர்களும் கூட, தி.ஜ.ர.வின் கட்டுரைகள் போன்ற கட்டுரைகள் வெறும் பொழுதுபோக்குத்தான் என்று நிச்சயமாக ஏற்றுக்கொள்வார்கள். உல்லாஸமான பொழுதுபோக்கு இது என்பதுதான் விசேஷம். சிந்திக்கத் தூண்டி பலவிதமான நோக்குகளை நமக்கு, நமது தினசரி சாதாரணக் காரியங்களிலும்; உண்டாக்கித் தருகிற பொழுது போக்கு இது.

"பாடத் தெரியாதவன் சங்கீதத்தைப் பற்றிப் பேசலாமா, கூடாதா?"-இதென்ன அசட்டுக் கேள்வி என்று நமக்குத் தோன்றும். ஆனால் கட்டுரையாளர் எடுத்துரைக்க எடுத்துரைக்க "இது ஒன்றும் அப்படி அசட்டுத்தனமான கேள்வியல்ல; இதில் விசேஷம் அடங்கியிருக்கிறது" என்கிற எண்ணம் நமக்குத் தோன்றுகிறது. ஆனால் முடிவு என்னவோ அப்படி ஒன்றும் முக்கியமல்ல. "சமைக்கத் தெரியாதவன் சாப்பிடவே கூடாது என்று சொல்ல யாராவது துணிவார்களா?"

"ஸைக்கிள் வண்டிக்குச் சரியான தமிழ்ப் பதம் துவிச்சக்கர வண்டிதானா? அல்லது உதை வண்டியா?'—இதைப் பற்றியெல்லாம் நான் யோசிக்கவில்லை. ஸைக்கிள் வண்டி என்று சொல்லிக் கொண்டே அதைக் கைவிட்டேன். ஆகையால் தான் ஸைக்கிள் வண்டி என்ற பெயருடனேயே இந்தக் கட்டுரையையும் எழுதுகிறேன். இந்த அவையடக்கத்துக்குப் பிறகும் தூய தமிழ் நண்பர்களுக்கு ஏதாவது அதிருப்தி இருக்குமானால், அவர்கள் தங்களுக்குப் பிரியமான துவிச்சக்கரம் அல்லது உதையை ஸைக்கிளுக்குப் பதிலாக இந்தக் கட்டுரையில் மாற்றிக்கொண்டு படிப்பதில் எனக்குச் சிறிதும் ஆட்சேபம் இல்லை?" என்று ஸைக்

கிள் பாடம் என்கிற கட்டுரையைத் தொடங்குகிறார் ஆசிரியர்.

பொழுது போக்குத்தானே என்று இந்த ஸைக்கிள் பாடத்தில் ஸைக்கிள் என்று வந்திருக்கிற இடங்களையெல்லாம் கணக்கெடுத்துப் பார்த்தேன். என் கணக்குப்படி மூன்று பக்கங்களில் பதினெட்டு இடங்களில் வந்திருக்கிறது இந்த வார்த்தை. 'நான் தூய தமிழ் நண்பனானால் ஸைக்கிள் என்பதற்குப் பதில் துவிச்சக்கர வண்டி என்று சொல்வேனா, உதை வண்டி என்று சொல்வேனா, இஷ்டப்படி மாற்றி மாற்றி இரண்டுமே (ஸைக்கிளையும் சேர்த்து மூன்றையுமே) சொல்வேனா? வார்த்தைகளை மாற்றியமைத்து இந்தக் கட்டுரையை எத்தனை விதங்களில் திருப்பி எழுதலாம்' என்று எண்ணிப் பார்த்தேன். கணக்கில் நான் புலியல்ல—ஆகவே விடை அப்படியொன்றும் சரியாக வரவில்லை. ஆனால் பகுத்தறிவுப் போட்டிகள், குறுக்கெழுத்துப் போட்டிகள், நேர் எழுத்துப் போட்டிகள், வரிசை எண் போட்டிகள் இதெல்லாவற்றையும்விட இது நல்ல பொழுது போக்காகவே எனக்குத் தோன்றிற்று. பிரவேசக் கட்டணம் எதுவுமில்லாததால் இது லாபகரமாகவும் இருந்தது என்பது வெளிப்படை.

ஸைக்கிளைப்பற்றி தி.ஜ.ர. சொல்கிற விஷயங்களும் கவனிக்கப்பட வேண்டிய விஷயமேதான். "பொதுவாக, யந்திரங்கள் எவற்றைக் கண்டாலுமே எனக்குப் பரம பிரமிப்பு. அதுவும் இந்த ஸைக்கிளிடம் என் உள்ளம் மகா வசியப்பட்டிருந்தது. அந்தக் காலத்தில், அடாடா! அந்த வெள்ளைக்காரன் வேலை தான் என்ன வேலை, போங்கள்! இந்த ஸைக்கிள் வண்டியைப் பார்க்கும்போதுதான் கடவுளின் ஒரு பெரிய தன்மையும் வெள்ளைக்காரனின் ஒரு பெரிய சாமர்த்தியத்தையும் பற்றி நாம் சிந்திக்க வேண்டியதாக இருக்கிறது. ஸைக்கிள் வண்டியின் நுட்பம் என்ன? சாதாரண வண்டிகளை மாடு, குதிரைகள் இழுக்கின்றன

மோட்டாருக்குப் பெட்ரோல் தேவையாக இருக்கிறது. இந்த மாதிரியெல்லாம் எந்த அந்நிய சக்தியின் உதவியும் இல்லாமல், மனிதன் தன் சொந்தச் சக்தியைக் கொண்டே தன் நிஜ சக்திக்கு மிஞ்சிய வேகத்திலும் தூரத்திலும் பிரயாணம் செய்யச் சாத்தியமாக்கும் அபூர்வக் கருவியல்லவா ஸைக்கிள் வண்டி. மனிதனுக்கு இரண்டு சக்கரக் கால்கள் முளைத்தது போன்றது ஸைக்கிள் வண்டி. இந்த யுக்தி கடவுளுக்குத் தோன்றாமல் போயிற்று; வெள்ளைக்காரன் கண்டு பிடித்துவிட்டான். சக்கரக் கால்கள் தான் ஸைக்கிள் வண்டியின் நுட்பம்." விளையாட்டாகவும் வினையாகவும் பொழுது போக்காகவும் சிந்திக்க வேண்டிய விஷயம் தான் இது. தி. ஜ. ர.வின் ஸைக்கிள் கட்டுரைக்கு நாம் மிகவும் கடமைப்பட்டவர்களாகி விடுகிறோம் இதைப் படித்தவுடனேயே.

"...கன்னிப் பெண்கள் தன் காதலரை (இலக்கியப் படி) சந்திக்க வேண்டிய ஆனால் (வாழ்க்கைப்படி) சந்திக்காத இன்ப நிலவிலே என் ஸைக்கிள் பால பாடம் ஆரம்பமாயிற்று." ஸைக்கிள் கற்றுக் கொள்கிற பயிற்சிக்கு ஒரு உதாரணம் சொல்கிறார் ஆசிரியர்—"ஹநுமான் சஞ்சீவி பர்வதத்தைக் கொண்டு வருகிற மாதிரி" என்று. சஞ்சீவி பர்வதம் வந்து சேருவது ராமாயணத்தின் போக்குக்கு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் இன்றைய துரித வாழ்க்கையை நடத்த, ஸைக்கிள் கற்றுக்கொள்வதும் என்று சொல்வதில் தவறில்லை.

வாத்தியார் ரகங்களைப் பற்றியும் தி. ஜ. ர. குறுகிய அளவில் சொல்வதற்கு நிறையவே விஷயங்கள் வைத்திருக்கிறார். "வாத்தியார் வேலை மிகவும் உயர்ந்தது என்பது என் திடமான அபிப்பிராயம். ஏனென்றால், அது தான் பகல் தூக்கத்துக்கு முற்றும் வசதியான உத்தியோகம். அநேக வாத்தியார்கள் அப்படித் தூங்குவதில்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் மாணவர்

களை விசாரித்துப் பார்ப்பீர்களானால், நல்ல வாத்தியார்கள் அத்தனை பேரும் வகுப்பில் தூங்குகிறார்கள் என்று கண்டு கொள்வீர்கள்" என்று கட்டுரையைத் தொடங்குகிறார் ஆசிரியர் தி. ஜ. ர. "எனக்கு அந்த வேலை கிடைக்காதற்காக நான் என் வாத்தியார்களை மறக்கவில்லை'' என்று எவ்வளவு நயமாக மொழிந்திருக்கிறார்!

"நான் சின்னப் பையனாய் இருந்தபோது, மிக நல்ல வாத்தியார் ஒருவர் இருந்தார். சாது, விஷயம் ரொம்பத் தெரிந்தவர். அப்படியிருந்தும் அவருடைய பிரியத்துக்குப் பாத்திரமாக யாருக்குமே இஷ்டமில்லை. அது விஷயமாக, ஒரு நாள் மாணவர்களுக்குள் பிரமாதமான சண்டைகூட உண்டாகிவிட்டது. நாள் தவறாமல் பக்திக்கு உதாரணமாக ஏகலைவன் கதையை அவர் எங்களுக்குத் திரும்பத் திரும்பச் சொல்லி வந்தார். யாருடைய கட்டை விரலுக்கோ வாத்தியார் அடிபோடுகிறார் என்ற பயம் எல்லோருக்கும் உண்டாகிவிட்டது. ஒவ்வொரு பையனுக்கும் அர்ஜுனனாக இஷ்டம் இருக்கிறதேயொழிய, ஏகலைவனாக எவனுக்கும் இஷ்டமில்லை." நியாயம் தானே!

தூக்க மருந்து என்று ஒரு கட்டுரை. இந்த நாற்பத்தியொன்பது கட்டுரைகளில் இதுதான் எனக்கு மிகவும் பிடித்தது என்று சொல்ல தைரியமில்லை-ஏனென்றால் எல்லாக் கட்டுரைகளிலுமே ஏதாவதொரு சிறிய விஷயமாவது எனக்குப் பிடித்ததாக இருக்கிறது. ஆகவே, இந்நூலிலுள்ள நாற்பத்தொன்பது நல்ல கட்டுரைகளில் இதுவும் ஒன்று என்று சொல்லிவிட்டுச் சில பகுதிகளை மட்டும் இங்கு தருகிறேன்.

" 'சென்னை சட்டசபை நேற்றிரவு முழுவதும் தூக்கமில்லாமல் வேலை செய்து சரித்திரத்தை சிருஷ்டித்து விட்டது' என்று எழுதினார் ஒரு பத்திரிகை நிருபர். நான் எத்தனையோ நாள் இவ்விதம் சரித்திரத்தைச் சிருஷ்டித்திருக்கிறேன். ஆனால் பத்திரிகைகள் வெளியிட்டதில்லை.

ஏனென்றால், அந்தக் கௌரவம் என்னைச் சேர்ந்ததில்லை. என் அறையிலுள்ள மூட்டைப் பூச்சிகள், கொசு, சிட்டுக் கட்டு, எதிர் வீட்டு கிராமபோன் ஆகியவற்றுக்கே அது உரியதாகும்.''

இதுதான் கட்டுரையாளரின் கலை என்று தி. ஜ. ர. வின் கட்டுரையை எடுத்துத் தருவது தவறில்லை. இலக்கியத் துறைகளிலே கவிதை, நாவல், சிறு கதை, நாடகம் என்றெல்லாம் பல சிறு பகுதிகளுக்கு மதிப்பும் பெருமையும் ஏற்பட்டுவிட்டது நமக்குத் தெரிகிறது. மான்டேன் என்கிற பிரெஞ்சு ஆசிரியர் தொடங்கி, லாம்ப் என்கிற ஆங்கில ஆசிரியர் சிறப்பாகச் செய்து நமக்களித்திருக்கும் கட்டுரைக் கலையின் இன்றையக் கொழுந்து தி. ஜ. ர. என்றால் அது மிகையாகாது. தமிழில் அறிவியல் கட்டுரை, விஞ்ஞானக் கட்டுரை, வேதாந்தக் கட்டுரை என்றெல்லாம் அடிபடும் கட்டுரை சிறப்பாகப் பெயர் பெறுவது தி. ஜ. ர. அவர்கள் கையில்தான் என்று சொல்ல எனக்குத் தோன்றுகிறது. கனமான விஷயங்களையும் லேசாக, ஒரு தனி நோக்குடன், சொல்லியிருக்கிறார் தி. ஜ. ரங்கநாதன். இந்த ரகத்தில் தி. ஜ. ர.வைப் பின்பற்றுபவர்கள் ஒருவர் இருவர் இருக்கலாம்; அவரை மிஞ்சிவிட்டவர்கள் என்று சொல்ல முன்னும் ஒருவரும் இருந்ததில்லை; இன்றும் இல்லை.

தூக்கத்தைப் பற்றிய அவருடைய கட்டுரையை மேலும் பார்ப்போம். சுவாரசியமான விஷயம் அல்லவா? "தூக்கம் இயற்கையின் வைத்தியன்; மனக் கவலை தீர்க்கும் மருந்து; ஏழைகளின் பூலோக சொர்க்கம். தூக்கம் நமக்கு ஒரு புது உலகத்தை-அதிசயக் கனவு ராஜ்யத்தைப் படைத்துத் தருகிறது. சாத்தியமில்லாத நமது மனோரதங்களையும் ஆசைகளையும் பூர்த்தி செய்து தரும் சாதனம் தூக்கந்தான்.

"தூக்கமில்லாவிட்டால் அதிசயக் கனவுகளெல்லாம் காண்பது நமக்கு சாத்தியமாகுமா? நேற்றிரவு நான் ஒரு

பிரமாதமான காவியத்தைச் சிருஷ்டித்து விட்டேன். பத்திரிகைகளெல்லாம் அதை ஏகோபித்துப் புகழ்ந்தன; ஜனங்களெல்லாம் அந்த நூலை வாங்கி, ஆவலுடன் விழுந்து விழுந்து படித்தார்கள். எனக்கு ஒரு பெரிய கௌரவ விருந்து நடத்தக்கூட ஏற்பாடுகள் நடந்தன. இத்தனையும் கனவில்தான் நிகழ்ந்தன. ஆனாலும் என்ன? இப்போது நான் இதை எழுதிக் கொண்டிருப்பது எவ்வளவு உண்மையாய் இருக்கிறதோ, அவ்வளவு உண்மையாய் இருந்தன அப்போது அவையும். ஆனால் விருந்தைச் சாப்பிடப் போகிற சமயத்தில், அந்தச் சனியன் பிடித்த தூக்கம் கலைந்துவிட்டது. வேறொரு நாள் கனவில் விருந்து பூர்த்தியாகும் என்று நினைக்கிறேன்...

"கொஞ்ச நாளாகத்தான் தூக்கத்தின் சுகத்தை நான் ஓரளவு அனுபவித்து வருகிறேன். அதற்கு முன் எத்தனையோ நாள் நல்ல தூக்கமில்லாமல் அவதிப்பட்டிருக்கிறேன்...சமீபத்தில்தான் நான் உண்மையான தூக்க மருந்தைக் கண்டு பிடித்தேன்...என் மருந்துப் பிரயோக முறை பின்வருமாறு: முதலில் விளக்கைச் சற்று உயர்த்தி என் தலைமாட்டில் வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு நன்றாய்க் காலை நீட்டிப் படுக்க வேண்டும். தூக்க மருந்தைக் கையில் எடுத்துப் பிரிக்க வேண்டும். அது வேறொன்றும் அல்ல. போன வாரம் வெளியான ஒரு கடுமையான இலக்கியப் பத்திரிகைதான். சில பக்கங்களைப் புரட்டி, அதன் கரடுமுரடான விஷயங்களைப் படித்தால், நாலே நிமிஷத்தில் தூக்கம் வந்துவிடும். இலக்கியங்களில் இப்போது எனக்குப் பெரிய மோகம் ஏற்பட்டிருப்பதற்கு வேறு காரணம் வேண்டுமா? இலக்கியம் நீடூழி வாழ்க."

இதில் விசேஷம் என்னவென்றால், **பொழுதுபோக்கைக்** கையில் வைத்துக்கொண்டும் தூங்கலாம் என்பதுதான். அதை மறந்துவிட்டு எழுதுகிறவர் அல்ல தி. ஜ. ர.

அப்படி மறந்துவிட்டு எழுதினாரானால் அவரை எப்படி நல்ல கட்டுரையாளர் என்று சொல்ல முடியும்—மாண்டேனுக்கும், லாம்புக்கும் தமிழில் ஏற்பட்ட வாரிசு என்று சொல்ல முடியும்? விஷயத்தை ஒரு நோக்குடன் சொல்லிக் கொண்டு போகும்போதே, இந்த விஷயத்தை வேறு பல நோக்குகளுடனும் பார்க்கலாம் என்பதைத் தொக்கி நிற்கிற மாதிரி காட்டுவதுதான் திறமை. அந்தத் திறமை தி.ஜ.ர.வுக்கு இருப்பது நன்கு தெரிகிறது, இந்த நாற்பத்தொன்பது கட்டுரைகளையும் பார்க்கும்போது.

"கடவுள் தோல்வியுற்றார் என்ற ஆச்சரியமான செய்தியை இன்று நான் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். 'யாரிடம்?' என்று நீங்கள் கேட்கக்கூடும். அதைச் சொல்லுவதுதான் எனக்கு மிகவும் கூச்சமாக இருக்கிறது. நான் ரொம்ப அடக்கமான மனிதன். சிலர் போல என் பெருமையை நானே சொல்லிக்கொள்ளும் பழக்கம் எனக்கு இல்லை. ஆகையால் நீங்கள் என்னதான் மன்றாடினாலும் கடவுள் யாரிடம் தோற்றார் என்ற விஷயத்தை நான் உங்களுக்குத் தெரிவிக்கப் போவதேயில்லை. நீங்களாகவே ஊகித்துக்கொள்ளுவதுதான் அழகு என்று மட்டில் குறிப்பிட விரும்புகிறேன்."

இதை எழுதிய தி. ஜ. ரங்கநாதன் ரஸமான மனிதர். அவருடைய ரஸமான கட்டுரைகளில் சின்னதும் பெரியதுமான பல ரஸமான விஷயங்கள் அடிபடுகின்றன. அவ்வளவும் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் தான் (அல்லது தாமா?)!

15. தி. செ. சௌ. ராஜன் சுய சரிதம்

# நினைவு அலைகள்

சுய சரிதம் பேசுவதற்கு நம்மில் எல்லோருக்குமே ஆர்வமுண்டு. ஆனால், எல்லோரும் பேசுகிற சுயசரிதம் நல்ல சுயசரிதம் ஆகிவிடாது. இலக்கியத்திலே சுயசரிதம் என்பது மிகவும் ரஸமான துறை என்று சொன்னால் மட்டும் போதாது. அது மிகவும் சிரமமான துறை என்றும் சொல்லவேண்டும். உலக இலக்கியத்தில் நல்ல சுய சரிதங்கள் என்று சொல்லிப் போற்றக்கூடியவை ஒரு பத்துக்குள்தான் இருக்கும். தமிழில் வந்திருக்கிற சுயசரிதங்களிலே நல்ல சுயசரிதம் என்று சொல்லக்கூடியது தி. செ. சௌ. ராஜனின் நினைவு அலைகள்.

இதில் அவர் கண்டுள்ள வெற்றிக்கு முக்கிய காரணம் இதை சுய சரிதமாக எழுதாமல் நினைவுத் தொகுப்பாக எழுதியிருப்பதுதான் என்று சொல்லலாம். சுவாரசியமான அனுபவங்கள் நிறைந்த ஒரு பூரணமான வாழ்விலே எத்தனையோ விஷயங்கள் நினைவுக்கு வர இருக்கும். அவற்றில் சுவாரசியமானவற்றைத் தொகுத்து. சுவாரசியமான ஒரு நடையில் தன் அனுபவங்கள் பூராவையும் எடுத்துச் சொல்லும் சக்தியிருந்தது டாக்டர் ராஜனுக்கு. பத்திரிகைகளில் அவ்வப்போது எழுதி வந்ததனால், அவற்றைத் தனித்தனியே சுவாரசியமாகச் சொல்லவேண்டிய பொறுப்பையும் உணர்ந்து செய்திருக்கிறார் ராஜன் என்றுதான் சொல்லவேண்டும்.

"தெள்ளிய மணலில் கொதிக்கும் சூட்டில் பச்சைக் கடலையைப் போட்டு வறுத்தால் அதற்கு ஏன் அவ்வளவு மணம்? அகோபில மடத்துத் திண்ணையில் கையில் காசில்

லாமல் உட்கார்ந்துகொண்டிருக்கும் என் மனத்தைக் கொள்ளை கொண்டு போவதற்காகவா அந்த மணம்? அந்த மணம் வீசிக்கொண்டிருக்கும்போது என் மனம் பள்ளிக் கூடத்திலோ படிப்பிலோ எப்படிச் செல்லும்? திறந்த புத் தகம் பக்கம் திரும்பாமலே அப்படியேதான் இருக்கும். சற்று நேரத்துக்கெல்லாம் அது திறந்தபடியே திண்ணை யில் என்னை அறியாமலே கிடக்கும். நான் மெள்ள நடந்து பட்டாணிக் கடையை நாடுவேன். ஆயினும் என்ன பயன்? கையில் காசு இருந்தால் அல்லவோ பொற் குவியலைப்போல் குவிந்துகிடக்கும் கடலைமணிகள் எனக்குக் கிடைக்கும்?

"அந்தக் கடலைக்குத்தான் என்ன அழகு! என்ன பிகு! தோல் முழுதும் வெடித்து உதிர்ந்துவிட்டால் எல்லாம் ஒரே நிறமாகத் தோன்றும். ஆனால், அப்படியே வெடிப்ப தில்லை. ஒருபுறம் திறந்து உள்ளிருக்கும் பொன்மயமான பருப்பு சற்று வெளியே காணப்படும். வறுமை வாய்ப் பட்டு வாங்கமுடியாமல் இருக்கும் என்னை ஏளனம் செய் வதுபோல இருக்கும். அடிக்கடி கடையைச் சுற்றி வட்ட மிடும் என்னைக்கண்டு அந்தப் பாவி, கடைக்காரன் சற்றும் இரங்கமாட்டான். அவனுக்குத் தாகத்துக்குக் குடிதண் ணீர் கொண்டுவந்து கொடுப்பேன். அடுப்புப் பற்ற வைப்ப தற்கு வீட்டிலிருந்து அடுப்புத் தணல் திருடிக் கொண்டு வந்து கொடுப்பேன். சமையல் செய்துகொண்டிருக்கும் என் பெரிய தாயாருக்குத் தெரியாமல் தணல் எடுத்து வர வேண்டும். தெரிந்தால், சமைய லடுப்பு தீட்டாகிவிட்ட தென்று செய்த சமையலைச் சாக்கடைத் தொட்டியில் கொட்டிவிட்டு, அடுப்பு மெழுகி, மறுபடியும் சமைக்க ஆரம்பித்துவிடுவாள். அவள் வைதீக சிஷ்டாசாரங்களில் நன்கு தோய்ந்தவள். பிராமணனல்லாத பட்டாணிக் கட லைக்காரனுக்கு நெருப்புத் தணல் கொடுக்க அவளுடைய உத்தரவு கிடைக்காது. ஆகையால், திருடவேண்டியது தான். இவ்வளவும் எதற்காக? துட்டு இல்லாமல் ஒரு சம

யம் சூடான கடலை ஒருபிடி கருணையுடன் எனக்குக் கொடுக்கமாட்டானு என்ற கனவுதான் அவனுக்குத் தொண்டுசெய்ய என்னைத் தூண்டியது. எவ்வளவு செய்து என்ன? அவன் கல்நெஞ்சம் கொஞ்சமேனும் இளகாது. 'உனக்குச் சும்மா கொடுத்தால் முதலாளி என்னைச் சும்மா விடமாட்டான் சாமி. காசுகொண்டுவந்தால் கால் ஆழாக்குக் கடலை அதிகமாகக் கொடுக்கிறேன்' என்பான். அப்பொழுது என் மனம் என்ன பாடுபடும் தெரியுமா?''

மிகவும் சாதாரணமான விஷயம்தான் இது. ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசித் திருவிழாக் காலத்தில் வருகிற பட்டாணிக் கடலைக் கடை, மற்றும் பலகடைகள் எல்லாம் நமக்குத் தெரிந்தவைதான். தெரிந்ததையே ரஸமாகசொல்வதுதானே சிரமமான காரியம்? அந்தக் காரியத்தில் ராஜன் இந்த நினைவு அலைகளில் பிரமாதமான வெற்றிபெற்றிருக்கிறுர் என்றுதான் சொல்லவேண்டும். 'பட்டாணியின் மணம்' என்கிறஅத்தியாயத்திலேஉண்மையிலேயே சூடான புதுப் பட்டாணியின் மணம் வீசுகிறது என்று சொல்வது மிகையேயாகாது. என்னைப்பற்றிய மட்டில் எனக்குஇன்று கூட எங்காவது பட்டாணி வறுக்கும் மணம் அடித்தால் ராஜனின் கட்டுரை ஞாபகம் வரத்தான் செய்கிறது. இந்தக் கட்டுரையின் வெற்றியை அளக்க இந்த ஒரு அளவு கோலே போதுமானது என்று நான் எண்ணுகிறேன்.

''டிரஸ்ஸர் திருமலைசாமி நாயுடு கம்பீரமான தோற்றமுள்ளவர். இரு கண்களும் எப்பொழுதும் சிவந்திருக்கும். முகத்தில் அம்மை வடுக்கள். கட்டுவாய்ந்த தேகம். அவருடைய தொந்தியும் கம்பீரமானதுதான். ஜரிகைத் தலைப்பாகை; நன்றுகச் சலவை செல்துள்ள மல்வேஷ்டி; மூலைக் கச்சம்; நீண்ட பட்டுக் கோட்டு; தங்கக் கடிகாரச் சங்கிலி. ஸ்ரீரங்கம் முனிசிபல் ஆஸ்பத்திரியில் அவர் வேலை நடத்தும் கெடுபிடியைப் பார்த்தால் வரம்பற்ற அதிகார தோரணை நன்கு விளங்கும்.

"என் இளம்பிராயத்தில் வயிற்று வலி நோயினால் வெகுநாட்கள் அவதிப்பட்டதுண்டு. டாக்டர் திருமலைசாமி நாயுடு அரசுபுரியும் தர்ம ஆஸ்பத்திரியில் வைத்தியத்திற்குப் போய் மணிக்கணக்காக மருந்து கிடைக்கத் தவம் கிடந்தேன். திருமலைசாமியின் கருணைகடாக்ஷம் என்மீது பாய்வதற்கே இரண்டு மணிநேரம் ஆகிவிடும். அதிகாரத்திலிருக்கும் பெரிய மனிதர்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் வீட்டிலேயே போய்க்கண்டு பீஸ் கொடுத்துவிட்டு, தர்ம ஆஸ்பத்திரி ரிஜிஸ்டரில் பெயர் தாக்கல் செய்து வைத்தியம் செய்துகொள்வார்கள். இவர்களை யெல்லாம் கண்டு களித்துப் பேசிய பிறகுதான் சற்றுக் கடுகடுத்த முகத்தோடு என்னைப்பார்த்து ஒரே வார்த்தையில் என் நோயின் கொடுமையைத் தெரிந்துகொண்டு, ஒரு சீட்டில் 15. 18 நெம்பர் மருந்தென்பதாக எழுதி விட்டெறிவார். கீழே விழுந்த சீட்டைப் பொறுக்கிக்கொண்டு மருந்து சேர்க்கும் இடமிருக்கும் ஜன்னலண்டை போனால், கம்பவுண்டர் கண் பார்வைக்கு வெகுநேரம் சீசாவையும் காகிதத்தையும் வைத்துக்கொண்டு நிற்கவேண்டும்.

"கம்பவுண்டர் வேணுகோபால் நாயுடுவும் எஜமானரையே பின்பற்றிய மனோபாவமுள்ளவர். முடிவில் காலை ஏழுமணிக்கு ஆஸ்பத்திரி சென்றால் பத்து மணிக்கு முன்பாக வீடு திரும்ப முடியாது. பள்ளிக்கூடம் போக முடியாது. இப்படிச் சில மாதங்கள் நடந்தேன். வியாதி சற்றும் குறையவில்லை.

"என் தகப்பனாரிடம் முறையிட்டேன். மாதச் சம்பளம் வாங்கிய மறுநாள் அவர் என்னைக் கூட்டிக்கொண்டு திருமலைசாமி நாயுடு வீட்டிற்கு அதிகாலையில் சென்றார். நாயுடுகாரு புன்சிரிப்புடன் எங்களை வரவேற்றார். என் தகப்பனார் ஐந்து ரூபாய்களை அவர் மேஜைமேல் வைத்தார் உடனே நாயுடு என் வியாதியைப்பற்றி அளவுகடந்த பரிவுடன் கேட்டுவிட்டு 'பயப்படவேண்டாம். நல்ல விலை

யுயர்ந்த மருந்தாகக் கொடுத்து வெகுசீக்கிரம் குணப்படுத்தி விடுகிறேன்' என்று வாக்களித்து ஐந்து நிமிஷத்தில் எங்களை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

"அன்று முதல் ஆஸ்பத்திரியில் அவர் என்னைக் கண்டவுடன் நோயைப்பற்றிக் கேட்டுச் சீட்டுக் கொடுத்துவிடுவார், ஆனால், கம்பவுண்டர் வேணுகோபால் நாயுடுக்கு மட்டும் என்மீது கோபம் தணியவில்லை. கம்பவுண்டரிடத்தில் நேரமானால் டாக்டரிடம் வந்து நிற்பேன். உடனே டாக்டர் காம்பவுண்டரைக் கூப்பிட்டு 'இந்தப் பையனுக்கு மருந்து சீக்கிரம் கொடுத்துவிடு' என்று உத்தரவு போட்டதும் சீக்கிரம் கிடைத்துவிடும். 'எவ்வளவு உயர்ந்த விலையுள்ள மருந்தை யெல்லாம் அடித்துக்கொண்டு போகிறாய்!' என்று வேணுகோபால் நாயுடுவும் முணு முணுத்துச் சொல்வதுண்டு. ஆறுமாத காலம் வைத்தியம் நடந்தது, ஆனால் ஐந்து ரூபாய் என் தகப்பனார் கையை விட்டுப் போனதைத்தவிர வேறு லாபம் எதுவும் இல்லை. வியாதி அப்படியேதான் இருந்தது.

"அந்த அனுபவத்தில் என் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியே பிற்பாடு என்னை டாக்டர் தொழிலில் புகுத்தக் காரணமாயிற்று. இவ்வளவு அதிகாரமும் பலவிதமான வருவாயும் உள்ள தொழிலில் நாம் ஈடுபட்டால்! அன்று ஊன்றிய விதை என்னை ஸௌந்தரராஜனிலிருந்து டாக்டர் ராஜனாக மாற்றியது."

வர்ணமோ அலங்காரங்களோ அதிகமில்லாத நடை, திருகுதாளங்கள் எதுவும் போடாமல் ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்குத் தாவித் தாவித் தொடர்ச்சியாகச் செல்கிறது. நினைவு அலைகளுக்குக் கல்கி அவர்கள் முன்னுரை எழுதியிருக்கிறார். அதில் அவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:— "ஸ்ரீ ஸௌந்தரராஜன் வைத்தியக் கல்லூரியில் உதவிச் சம்பளம் பெற்றுப் படித்துத்தேறி டாக்டர் ராஜன் ஆனார். மனைவியையும் அழைத்துக்கொண்டு

சர்க்கார் கடனைக் கழிக்கப் பர்மாவுக்குச் சென்றார். நானும் அவருடன்கூடச் சென்றேன். அங்கே சர்க்கார் ஆஸ்பத்திரியில் எத்தனையோ கஷ்டங்களை அவர் அனுபவித்தார். நானும்கூட அனுபவித்தேன். மேலதிகாரியின்மேல் கண்ணாடிக் குவளையையும் தர்மாமீட்டரையும் வீசியெறிந்தார். நானும் பக்கத்திலிருந்த கண்ணாடி 'வெயிட்'டைத் தூக்கி எறிந்தேன். பிறகு டாக்டர் ராஜன்கூடச் சென்று, நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு அவர் வைத்தியம் செய்ததைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவர் பணம் நிறையச் சம்பாதித்து எனக்கு மிக்க மகிழ்ச்சி அளித்தார்: கோர்ட்டிலே அவர் சாட்சி சொன்னபோது நானும்கூட இருந்தேன். மாஜிஸ்டிரேட் அவரை 'வெறும் சப் அஸிஸ்டெண்ட் சர்ஜன்' என்று சொன்னபோது அவருக்கு வந்த ஆத்திரத்தைவிட எனக்கு அதிகம் வந்தது. சீமைக்குப் போய்ப் பெரிய வைத்தியப் பட்டத்துடன் திரும்பி வருவது என்று தீர்மானித்தார். அவர் கப்பலில் ஏறியபோது நானும் டிக்கட் இல்லாமல் ஏறிவிட்டேன்." கல்கி இப்படிக் குறிப்பிட்டிருப்பது மிகவும் நியாயம். டாக்டர் ராஜனுடன் நாம் இந்த நூலில் பலவிதப்பட்ட அனுபவங்களை அடைவது சாத்தியமாகிறது, அவருடைய எழுத்தைக் கலை யென்று சொல்லக்கூடாது, கலையேயில்லாத ஒரு கலையுடன் அவர் வாசகர் உள்ளங்களையெல்லாம் தன் உண்மை உணர்ச்சி வேகத்தினலேயே கவர்ந்துவிடுகிறார்.

லண்டனில் தன் அனுபவங்கள், வ, வெ. ஸு. ஐயருடன் தான் இருந்து பழகியது, பின்னர் ஸ்ரீரங்கம் திரும்பி வைதிகக் கோட்டையை முற்றுகையிட்டது, மீள முயன்றது. அரசியலில் பிரவேசித்தது எல்லாவற்றையும் குரலை உயர்த்தாமல், நெருக்கமாக, வாசகனுக்கு மட்டும் ரகசியமாகச் சொல்லுகிறவர் மாதிரி வரிசைப்படுத்திச் சொல்லியிருக்கிறார் ராஜன். ஆழ்ந்து அடிப்படைகளைத் தொடுகிற விஷயங்கள் எதுவும் இல்லை. லேசான இரண்டுதலைமுறை

களின் பொதுவான சரித்திரத்தில் உள்ள பல விஷயங்களைப்பற்றிப் பலருடைய சராசரி அபிப்பிராயங்களைப் பரிமாறியிருக்கிறார் டாக்டர் ராஜன் இந்த நூலில். ஒவ்வொரு இடமும் நின்று சுவைத்து அனுபவிக்க வேண்டிய இடம்தான்.

"திருச்சி மத்திய சிறையில் தண்ணீர் குடித்துப் பழகியவர்களுக்குக் கோயம்புத்தூர் மத்திய சிறையின் கிணற்றுத் தண்ணீர் மருந்து குடிப்பதைப்போல் இருக்கும். அந்தத் தண்ணீர் குடித்துப் பழகுவதற்கு எனக்கு ஒரு மாதத்துக்கு மேல் ஆயிற்று. நான் இரவில் தாகத்திற்காகக் குடிப்பதற்கு நல்ல தண்ணீரென்று எண்ணி அந்த ஜெயில் தண்ணீரை எனது அலுமினியம் கூஜாவில் நிரப்பிவைப்பது வழக்கம், பாதி ராத்திரிக்குப் பிறகு அந்தக் கூஜாச் செம்பிற்குள் வெடிக்கும் சத்தம் கேட்கும். கூஜாவை உடனே திறந்து பார்ப்பதற்கு வெளிச்சம் இல்லை. விடியும் வரையில் பத்து நிமிஷத்துக்கொரு தடவையாகச் சிறு வெடிச் சத்தம் கேட்டுக் கொண்டிருக்கும். காலையில் கூஜாவைத் திறந்து, தண்ணீரை மேலாக ஊற்றிவிட்டு, அடியில் பார்த்ததில் மீதியிருக்கும் அடிப்பாகத் தண்ணீரில் சாம்பல் கரைத்ததுபோலக் காணப்பட்டது. கூஜாவின் உட்பாகத்தில் சிறுகுழிகள் உண்டாகியிருந்தன. அலுமினியப் பாத்திரமே இந்தத் தண்ணீரின் வேகத்தினால் கொப்புளித்து வெடித்துக் குழியாகிவிடுமானால், அதைக் குடிக்கும் மனிதர்களின் குடலின் கதி என்ன? என்று நினைத்தபோது மனத்திற்குச் சங்கடமாக இருந்தது. ஆனால் தினசரி இரண்டாயிரம் பேர்களுக்குக் குறைவில்லாமல் இந்தத் தண்ணீரைக் குடித்து அந்தச் சிறையில் வசித்துக்கொண்டுதானே உயிருடன் இருக்கிறார்கள்?"

தொழிலில் முன்னேறியது, சட்டசபை அனுபவங்கள், மந்திரியாக அனுபவங்கள் எல்லாவற்றையும் விவரித்திருக்கிறார் ஸ்ரீ தி. செ. சௌ. ராஜன் இந்த நூலில். அறிவும்

உணர்ச்சியும் உள்ள ஒரு உள்ளத்தின் படம் இது. தெரிந்துகொள்பவர்கள் பாக்கியசாலிகள்தான். வீரமோ, அசாதாரணமோ, மற்றும் காவிய ரஸங்களில் எதையுமோ கையாளாமல் பெரிதுபடுத்திச் சொல்லவேண்டிய இடங்களில் கூடப் பெரிதுபண்ணிச் சொல்லாமல் அமரிக்கையாகையாகச் சொல்லி நம் மனத்தைக் கவர்ந்திருக்கிறார் ராஜன். கடைசியாக தான் விவசாயி ஆனதையும் விவரிக்கிறார்.

"பிரபல வைத்தியனாக இருந்து, காங்கிரஸில் ஈடுபட்டு, சத்தியாக்கிரஹம் செய்து தீண்டாமையை ஒழிக்கப் பன்முறை சிறைசென்று, அரசாங்க மந்திரியாகச் சிலகாலம் உத்தியோகம் வகித்த நான், முதுமைப் பருவத்தில் என்னை விவசாயியாக எண்ணி இந்தக் கிராமத்தில் வாழ்வதற்குப் போய்ச் சேர்ந்தது ஒரு பெரிய விந்தை. எனது வரவை உத்ஸாகத்தோடு கிராமவாசிகள் வரவேற்கவில்லை. முதலாவது நான் ஒரு பெரிய மனிதன் என்கிற அச்சம். இரண்டாவது குற்றம் என் நிலங்களைப் பேணிப் பண்படுத்திக் கவனித்து வருவதால் கொள்ளை அடித்துக்கொண்டு சோம்பேறிகளாகப் பிடுங்கித் தின்று வாழ்நாளை நடத்திய அந்தக் கிராமவாசிகளுக்கு அன்பு எப்படி ஏற்படும்?... அந்த ஊர் வேசிகளுக்குக்கூட என்னிடம் நல்மதிப்பு இல்லை..."

இந்த நானூறு பக்க நூலில் நமது இரண்டு தலைமுறையின் சரித்திரம் அடங்கியிருக்கிறது. சுயசரிதம் என்கிற சாக்கில் இவ்வளவு சுவாரசியமாக இந்தச் சரித்தைச் சொல்லிவிட்ட டாக்டர் ராஜனுக்கு தமிழ் வாசகர்கள் என்றென்றும் கடமைப்பட்டவர்கள்.

16. ஆர். ஷண்முகசுந்தரம்: நாவல்

## நாகம்மாள்

தமிழ்நாட்டுக் கிராமத்தைப் பூரணமாக நிலைக்களனாக வைத்து நாவல் எழுதுவதென்பது அப்படி ஒன்றும் சுலபமான காரியமல்ல என்றுதான் தோன்றுகிறது. ஏனென்றால், இதுவரையிலும் தமிழில் நாவல்கள் எழுதிக்கொண்டு வந்திருப்பவர்கள் ஏதோ என்னவோ கொஞ்சம் கொஞ்சம் கிராமங்களையும் அறிந்தவர்களே தவிர வேறு அல்ல என்றுதான் சொல்ல வேண்டும். முழுவதும் அறிந்திருந்தாலும் கூட, சொல்வதற்கு ஒரு கலைத்திறன் கைவர வேண்டாமா? நான் படித்துள்ள வரையில் பூரணப்பொலிவுடன் கலையம்சங்கள் சிறந்த ஒரு கிராமிய நாவல் என்று ஸ்ரீ ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாகம்மாளைத்தான் சொல்ல வேண்டும். கொங்கு நாட்டுக் கிராமத்து வாழ்க்கை அந்த நாவலிலே அப்படியே உருவம் பெற்றிருக்கிறது. அந்த வாழ்க்கையைப் போலவே ஷண்முகசுந்தரத்தின் நடையும் கொங்கு நாட்டு மணத்தை அள்ளி வீசுகிறது. 85 பக்கங்களையுள்ள ஒரு சிறு நாவல் இது. கதையென்று சொல்லும்படியாகப் பெரிதாக ஒன்றுமில்லை. உள்ள வரையில் வெகு மிடுக்காக, நேராக நடக்கிறது. இந்த நாவலிலே வந்து நடமாடுகிற உயிருள்ள பாத்திரங்களும், அவர்கள் பேசுகிற உயிருள்ள தமிழும்தான் முக்கியம். இந்த இரண்டிலும் ஷண்முகசுந்தரத்தினளவு தமிழ் நாவலில் வெற்றி கண்டவர்கள் வேறு யாருமில்லை என்பது என் அபிப்பிராயம்.

ஆட்டமெல்லாம் ஆடி ஓய்ந்துவிட்ட ஒரு பெரியவர் பேசுகிறார், சதி செய்வதில் ஈடுபட்டிருக்கும் காளைகளைப் பார்த்து: "'கேளடா ராஜா, மலைபோல மண்டிக் கிடந்த

கள்ளிகளெல்லாம் மாயமாய் மறஞ்சுது பாத்தாயா? நாம் எத்தனை நாள் கத்தியாலும் அரிவாளாலும் வெட்டித் தள்ளியும், வெட்ட வெட்டக் கொழுத்தது! எப்படி பூண்டற்றுப் போச்சுது பார்த்தாயா? கள்ளியை நாசம் பண்ணின வெள்ளைப் பூச்சியையும் பாத்திருப்பாய். அது கடுகிலும் சின்னஞ்சிறுசாத்தானே இருந்தது? நம்முடைய கத்தியும் கவையும் முடிக்க முடியாத வேலையை வெகு சுளுவில் அப்பூச்சி முடித்துவிட்டது. என்ன கெட்டியப்பா, இன்னிக்கு ஒரு ஆனையைக்கூட தூக்கியடிக்கலாமென்று உனக்குத் தோணுது. மீசையை முறுக்கிவிடறாய்! கையைக் காலைத் தட்டறாய்; வாய்ப்பேச்சு வாயிலிருக்க, கை வைக்க ஆரம்பிக்கிறாய். ஆனா இந்த நல்ல ரத்தம் ஒரு நொடியிலே மறைஞ்சுடுமப்பா. ஒரு பூச்சி வேண்டாம்; ஒரு புழு வேண்டாம். சும்மா இருக்க இருக்க மாயமாய்ப் போயிடும். வயோதிகர் சற்றுப் பேச்சை நிறுத்தினார். அவருடைய உணர்ச்சிகள் மேலுக்கு மேல் பொங்கி வருவது தேகத்து நரம்புகள் புடைப்பதிலிருந்தே நன்றாகத் தெரிந்தது. அருகிலிருப்பவர்கள் வாய் திறக்கவில்லை. கிழவனார் தொடர்ந்து பேசினார்:

"'கெட்டியப்பா உனக்கு மாத்திரம் இல்லை. எல்லோருக்கும்தான் சொல்றேன். ஏண்டா, கெட்டுப் போகிறோம்? உண்டு உடுத்தியா கெடறோம். சீர் சிறப்பிலா நாசம் செய்றோம்? இன்னொருத்தனுக்கு உபகாரம் செய்தா கெட்டுப் போறோம்? இதையெல்லாம் கொஞ்சம் யோசிக்கப்பாரு.

"'அட அப்பா, ஊருக்கு மேக்காலே இட்டேறி எப்படி அசங்கியமா ஆபாசமா இருக்குது பாத்தாயா? அதுவும் இந்த மழை காலத்திலே எல்லாம் ஒரே துர்நாத்தம். மூக்கை பிச்சுக்கிட்டு போற மாதிரி வீசலே? அதை சுத்தம் பண்ண ஒரு பிள்ளை பிறக்கலயே! இன்னும் கேளு, ஊர்ச் சாவடி கட்டிடம் கல்லுகள் பெயர்ந்து ஆட்டம் கொடுத்துட்டதே! அதை எடுத்துக் கட்ட எவனாவது முன்னுக்கு

வர்ருறு? இல்லவே இல்லே; பின்னே என்ன? எல்லாம் ஒரே கோள், குண்டுணி, கட்சி, இவைகள்தான்.

"இந்தக் கட்சியிலே தாண்டா நம்மவர்கள் அழிந்து போனது. கச்சேரிக்கும் ஊட்டுக்கும், ஊட்டுக்கும் கச்சேரிக்கும் நடந்தபடியிருந்தா கூட்டுச் சங்கதி என்ன ஆகுமென்று பாருங்கடா!"

"செவிடன் காதிலே சங்கூதின மாதிரி உங்கிட்டே நீதி ஓதி என்ன புண்ணியம்?"

பெரியவர் சொன்ன கோள், குண்டுணி, கட்சி இவைகளே அடிப்படையாகக் கொண்டுதான் நாகம்மாள் கதை இயங்குகிறது. முதல் அத்தியாயத்திலேயே ஆசிரியர் ஷண்முகசுந்தரம் தன் கைத்திறமை பூராவையும் காட்டி அந்தக் கிராமத்துப் பகைப்புலனே வெகு அழகாகக் கொணர்ந்து நம் கண் முன் நிறுத்துகிறுர்.

"சந்தைக் கூட்டம் மெதுவாகக் கலேயவாரம்பித்தது. சோளத்தட்டுகளேக் கடித்து அசை போட்டுக்கொண்டிருந்த காளேகள், மணிகள் ஒலிக்க எழுந்து நின்று வண்டியில் பூட்டத் தயாராயின. சக்கரத்தடியில் கிடந்த சாக்குகளே எடுத்துச் சிலர் தட்டினர். வாங்கி வந்த சாமான்களே வண்டியில் சிலர் ஏற்றிக்கொண்டிருந்தார்கள். சந்தைக்குள்ளே நிழலுக்காக முளே அடித்துக் கட்டியிருந்த துணிகளேயும், விற்பதற்குப் பரப்பியிருந்த பண்டங்களேயும் அவரவர் பரபரப்பாக எடுத்தனர். பெண்களும் ஆண்களும் தங்கள் தங்கள் கிராமத்துப் பாதையின் வழியே வேகமாக நடக்கலாஞர்கள். இரண்டொரு உள்ளூர்க்காரர்களும் சிறுவர்களும் அங்குமிங்கும் எதையோ தேடுவதைப்போல் திரிந்துகொண்டிருந்தார்கள்.

"வெங்கமேட்டில் வாரத்திற்கொரு முறை புதன்கிழமை சந்தை கூடும்; சுற்று வட்டாரத்துச் சுமார் பத்து இருபது கிராமத்தவர்கள், வீட்டுச் சாமான்கள் வாங்குவதற்கு இங்குதான் வருவது வழக்கம். 'உப்பு தொட்டுக்

கற்பூரம் வரை' சாதாரணமாக எல்லாச் சாமான்களுமே அங்கு கிடைக்கும். அந்தப் பக்கத்துக்கே பெரிய சந்தை அதுதான்.

"பிரதி வாரமும் 'எனக்கு முந்தி, எனக்கு முந்தி' என்று பொழுது சாய்வதற்கு முன்பே சகலரும் பயணம் கட்டி விடுவார்கள். ஆனால், இந்த வாரம் வியாழக்கிழமை சிவியார்பாளையத்தில் சாமி சாட்டி யிருந்ததால், சந்தையில் கூட்டம் அதிகமானதோடு, இருட்டும்வரை அவர்கள் ஊர் போவதையே மறந்து வியாபார முகவில் நேரம் பண்ணிக் கொண்டிருந்து விட்டார்கள்."

கிராமத்துக் காட்சிகளை ஆசிரியர் வருணிப்பதை வியக்காமல் படிக்க முடியாது. சொல்லுகிற விஷயங்களைத் தெளிவாகவும், அழுத்தமாகவும், ஆயிர விஷயங்களில் இந்த இரண்டுதான் அவசியம்! சொல்ல வேண்டியது என்று தெரிந்தெடுத்தும் ஆசிரியர் சொல்லுவது இருக்கிறதே அது 'பிரமாதம்' என்றுதான் சொல்ல வேண்டும்.

"வெங்கமேட்டிற்கு மேற்கில் மூன்றாவது மைலில் இருக்கிறது சிவியார்பாளையம்; ஆற்றுப் பாசனம் அதிகமில்லாவிட்டாலும் நீர் கொழிக்கும் ஊர் அது. தோட்டக் கிணறுகளில் 'எட்டித் தொடும்' அவ்வளவு தண்ணீர் எந்தக் காலத்திலும்; ஊரைச் சுற்றிப் பூக்குலுங்கும் பசுமையான மரங்கள்; கண்ணுக்கினிய காட்சிகளே நாலா பக்கங்களிலும் நிறைந்திருந்தன. வறட்சி யென்பதே அங்கு வெகு தூரத்துக்கில்லை.

"பத்து வருஷமாகக் கொண்டாடாதிருந்த மாரியம்மன் உற்சவம் இந்த வருஷம் கொண்டாடப்படுகிறது. கற்கள் கீழே விழுந்தும் வண்டு பறித்தும் க்ஷீணதசை அடைந்திருந்த கோயிலின் சுவர்கள் மண்ணும் சுண்ணும்பும் அடிக்கப்பட்டுப் பளிச்சென்றிருந்தன. நாலு பக்கத்தின் உச்சியிலும் வேப்பிலைக் கொத்துகள் சொருகப்பட்டிருந்தன. கோவிலுக்கு முன்பாக தென்னேலையில் வேயப்பட்ட

பசும் பந்தல் மிக அழகாயிருந்தது. பந்தல் கூரையின் அடிப்புறத்தில் வண்ணான் மாத்து கட்டப்பட்டிருந்தது. சுவாமியின் சந்நிதானத்துக்கு நேர் எதிராக, வெளிப்புறத் தில் பூவோடு வைக்கும் மூக்கோரைப் பாச்சா மரக்கம்பம் நடப்பட்டிருந்தது. கம்பத்துச்சியில், மஞ்சள் துணியில் நவதானியங்களுடன் ஒரு செப்புக் காசும் வைத்துக் கட்டப் பட்டிருந்தது.

"அன்றிரவு ஏழு மணிக்குத் தப்பட்டைச் சத்தம் 'டிம் டிம்' என்று 'தெரப்பாக' எழுந்தது. பத்துப் பதினைந்து பறையர்கள் கம்பத்தடியில் உட்கார்ந்து அடித்துக்கொண் டிருந்தார்கள். அந்தச் சத்தத்தைக் கேட்டவுடன் சாப் பாட்டைப் பாதியிலே வைத்து விட்டு குழந்தைகள் ஓடி வந்தன. பெரியவர்களும் அவசர அவசரமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பெண்களெல்லாம் மாலையிலே தலைக் குத் தயிர் தேய்த்துக் குளித்து, முகத்திற்கு மஞ்சள் பூசி, மினுமினுப்பாகக் கொண்டை போட்டுக் கொண்டிருந் தார்கள். வீட்டிற்குள் அடைந்து கிடக்க முடியாமல் அவசர அவசரமாக சாதம் பரிமாறிக் கொண்டிருந்தார்கள். பூ வோட்டில் நெருப்பு தகதகவென்று எரிந்துகொண் டிருந்தது. நாச்ச பண்டாரம் விரதம் கலையாமல் பத்து பழங்களையும் ஒரு படி பாலையும் முடித்துவிட்டு புகை யிலையை வாயில் அடக்கிக்கொண்டு பயபக்தியுடன் சுவாமியை எண்ணெயாலும், தண்ணீராலும், பாலாலும் ஆனந்தமாக அபிஷேகம் செய்து கொண்டிருந்தான். நெய் விளக்குகள் அம்மன் பக்கத்தில் எரிந்து கொண்டிருந்தன. கன்னங்கரேலென்று சுமுகமாயிருந்த அம்மனுக்கு இடுப் பளவு புடவை சுற்றி, கண்ணுக்குக் கண்ணடக்கமும், இடைக்கு ஒட்டியாணமும் இன்னும் சில நகைகளும் அணி வித்திருந்தார்கள். அந்த அம்மனின் தோற்றம் அங்கு பார்த்துக் கொண்டிருந்தவர்களின் மனத்தில் அபார பக்தியை ஏற்படுத்துவதாயிருந்தது. பார்க்கப் பார்க்க

ஜனங்கள் வந்து கூடிவிட்டார்கள். 'கொட்டுங்கடா' என்ற சப்தம் கேட்டது. பறையர்கள் 'டண், டண், டணக் டணக்' என்ற இசையில் குச்சியைத் தம்பட்டத்தில் செலுத்தினார்கள். மனதிலே ஒரு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஏற்படுத்துவதாயிருந்தது அந்த அடிகளின் இசை. 'ஜல் ஜல்' என்று சதங்கைகள் ஒலிக்க கம்பத்தைச் சுற்றிச் சிறியவர்களும் பெரியவர்களும் ஆடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் ஆட்டத்திற்குத் தகுந்த பாட்டுக்கள் பாடிக்கொண்டே கம்பத்தைச் சுற்றி வந்தார்கள். வயதானவர்களும் பெண்களும் கோவில் ஓரத்திலும், அரச மரத்தடியிலும் நின்றுகொண்டிருந்தார்கள்."

நாகம்மாள் "ராணி போலவே நடந்து வந்திருக்கிறாள். பிறருக்கு அடங்கி நடக்கும் பணிவும் பயமும் என்னவென்றே அவள் அறிய மாட்டாள்" என்று தன் கதாநாயகியை நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறார் ஆசிரியர். அவளுக்கு முத்தாயா என்று ஒரு நான்கு வயதுப் பெண் குழந்தை. அவள் கணவன் இறந்துவிட்டான். கணவனின் தம்பி சின்னப்பனுடனும், சின்னப்பனின் மனைவி ராமாயியுடனும் வாழ்ந்து வருகிறாள். சொத்து சுதந்திரம் கொஞ்சம் உள்ளவர்கள் அவர்கள். ஊரிலே மணியகாரருக்கும் வேறு பலருக்கும் நெடு நாளாக சின்னப்பனுடன் புகைச்சல். கெட்டியப்பன் என்று ஒரு வில்லன் வருகிறான் இந்த நாவலிலே.

"அவனுக்குக் குடிப்பதற்காக காசு எங்கிருந்து கிடைக்குதோ' என்று கேட்டவருக்கு 'எப்படியோ கிடைச்சுப் போறதுங்க' என்று ஒருவன் சொல்லவும் அருகில் இருந்த எல்லோரும் சிரித்தார்கள்.

"அவனுக்கு எப்படிப் பணம் கிடைக்கிறது? என்ன, ஏதாவது மந்திரம், தந்திரம் கற்று வைத்திருக்கிறானா? அதெல்லாம் ஒன்றுமில்லே. கெட்டியப்பனுக்கு இருந்த காடொன்றையும் தொலைத்து விட்டான். அவன் வேறு

ஒன்றும் செலவு செய்யவில்லை; இட்லியும் கள்ளும் அந்தக் காட்டை விலைக்கு வாங்கி விட்டது! இப்போது வெறும் ஆள். அந்த 'விடு சூளை' யாருக்கும் பயப்பட மாட்டான். ஊரில் எல்லாரும் அவனை ஒரு மாதிரியாகத்தான் நடத்து வார்கள். அவனிடம் பகைத்துக் கொண்டால் போச்சு; அன்றைக்கு விரோதித்துக் கொண்டவருக்கு வாழைத் தோட்டமிருந்தால் பத்துப் பன்னிரண்டு தரமாவது பிஞ்சோடும் பூவோடும் அறுபட்டுப் போய்விடும். அல்லது தென்னந்தோப்பு உள்ளவராயிருந்தால் இருபது முப்பது குலையாவது பாளை குருத்தோடு காணமல் போயிருக்கும். அவனிடம் தன்னைப் போன்ற நாலைந்து ஆட்களும் உண்டு."

இந்தக் கெட்டியப்பனின் போதனையால் நாகம்மாளின் மனத்தில் விஷ வித்து ஊன்றப்படுகிறது. முத்தாயிக்குத் தன் சொந்த தாயிடமிருந்ததைவிட சின்னயியிடம்தான் பிரியம். தனக்கு இதுவரை சின்னப்பன் எதுவும் கெடுதி செய்யவில்லை; எனினும் அவனிடமிருந்து பிரிந்து தன் சொத்தைக் கேட்டுப் பிரித்துக் கொள்வதே நல்லது என்று நாகம்மாள் எண்ணினாள். ஊரிலே அவளுக்கு ஆதரவு தர ஆளிருந்தது. சின்னப்பன் காணியை விற்று விட்டு மாமி யார் வீட்டுடன் போகப் போகிறான் என்று வேறு கோள் சொன்னார்கள் எல்லோரும். பெரியார் ஒருவர் அவளுக்குப் புத்திமதி சொன்னார்:—

"'திருமணை செய்யத் தெரியாதவன் தேர் வேலைக்கு அச்சாரம் வாங்கினானும். ஒரு காணி நிலத்தைக் கிளறி பாங்காக பிழைக்கத் தெரியாத இந்த கெட்டியப்பனா உனக்குப் பங்கு வாங்கிக் கொடுக்கிறவன்! இது எல்லாம் நடக்காத சங்கதிகள். ஒரு நாளைய கூத்துக்கு மீசையைச் சிறைத்த கதையாக முடியும். இப்போது பாரு, ஊரும் குடித்தனமுமாக இருந்தவள் குழந்தையை விட்டு விட்டு வெளியில் வந்து திண்டாட்டத்தில் மாட்டிக் கொண்டாய். நீ யாருக்காக பங்கு பிரிக்கச் சொல்லுகிறாயோ, அந்தக்

குழந்தைகூட உன்னிடம் வர மறுத்து விட்டதென்றால், பின் என்னத்துக்கு இந்த சச்சரவு எல்லாம்.'

"நாகம்மாள் காலையில் தோட்டத்தில் ஏற்றுப் பிடிக்க வந்த சின்னப்பனைத் தடுத்துவிட்டாள். சின்னப்பன் அவளை கோபமாக அதட்டினான். அங்கு குடி வெறியுடன் வந்த கெட்டியப்பன் ராமாயி இடுப்பில் முத்தாயியுடன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, சின்னப்பன் மண்டை யில் தடியால் ஒரே போடாகப் போட்டு விட்டான். இந்த முடிவை எதிர்பாராத நாகம்மாளுக்கே மனம் பகீர் என்றது. என்னவோ முன்னெப்போதும் கண்டிராத ஒரு அதிர்ச்சி அவள் தேகத்தை நடுக்கியது. அவளால் ஒருவ ரையும் ஏறெடுத்துப் பார்க்க முடியவில்லை. பேசவும் முடிய வில்லை" என்று நாவலை முடிக்கிறார் ஆசிரியர் ஷண்முக சுந்தரம்.

சின்னக் கதைதான். அற்புதமான சம்பவங்கள் எது வும் இல்லை. ஆனால் கிராமத்துச் சூழ்நிலையையும், ஒரு ஏழெட்டுக் கிராமத்துப் பாத்திரங்களையும், உண்மையுட னும் உணர்ச்சியுடனும் உருவாக்கித் தந்து நமது நண்பர்க ளாக்கிவிட்டார் ஆசிரியர்.

# கதைகள்

பத்தே கதைகள் அடங்கிய ஒரு சிறுகதைத் தொகுதி. தனித்தனியாக இந்தக் கதைகளைப் பத்திரிகைகளில் அவ்வப்போது படித்துப் பார்த்தபோது அவை அப்படி ஒன்றும் பிரமாதமானவையாகத் தோன்றவில்லை. ஆனால் சேர்த்து புஸ்தகரூபத்தில் ஒன்றன்பின் ஒன்றாகப் படிக்கும்போது சங்கீத ரஸிகர்கள் சொல்கிறார்களே அதுபோல 'ஐயோ!' வென்றிருக்கிறது. 'எப்படித்தான் இந்தச் சிறு கதாசிரியர் இப்படியெல்லாம் எழுதினாரோ?' என்றிருக்கிறது. தி. ஜானகிராமன், லா. ச. ராமாமிருதம், இவர்களுடன் சேர்த்து கு. அழகிரிசாமியையும் சொல்லி இவர்கள் மூவரும் இந்தத் தலைமுறையின் சிறு சிறந்த கதாசிரியர்கள் என்று போற்ற எனக்குத் தோன்றுகிறது.

இந்தப் பத்துக் கதைகளில் ஒன்றுமே சோடை போகவில்லை என்பது அழகிரிசாமியின் எழுத்துத் திறனுக்கு ஒரு அத்தாட்சி. ஒன்றைவிட ஒன்று நன்றாயிருக்கிறது என்று சொல்லவேண்டும். சிறந்த கதை என்று சொல்ல இவற்றில் ஒன்றைப் பொறுக்குவது மிகவும் சிரமமான காரியம். டெக்னிக் என்று சொல்லுகிற யுக்திகள், நடை, உணர்ச்சி, வேகம் இவை எல்லாவற்றையும் ஒவ்வொரு கதையிலும் விதானமாகவே குழைத்து அற்புதமான கலவையாகச் செய்தளித்திருக்கிறார் அழகிரிசாமி. எல்லாவற்றிற்கும் மேலாக கதாபாத்திரங்கள் நிஜ மனிதர்களாக நம்முடன் நடமாடுகிறார்கள்—பண்டிதர் பாஷையில் அளவளாவுகிறார்கள்.

முதலில் குழந்தைக் கதைகளைப் பார்க்கலாம். அன்பளிப்பு என்ற கதையில் ஒருவர் மற்றக் குழந்தைகளுக்கு

அன்பளிப்பாக எதெதையோ தருகிறார். சாரங்கராஜனுக்கு அவர் ஒன்றும் தரவில்லை. சாரங்கன் அவரைத் தன் வீட்டுக்கு அழைக்கிறான்.

" 'எங்கள் வீட்டுக்குப் போவோமா?'

'உங்கள் வீட்டுக்கா?'

'ஆம். நீங்கள் வருவதாக அன்றே சொல்லவில்லையா?'

'சும்மா வேடிக்கைக்குச் சொன்னேன், சாரங்கா. உங்கள் வீட்டிற்கு எதற்கு?'

'எதற்கோ, வாருங்கள்' என்று இரண்டு கைகளாலும் பிடித்து இழுத்தான். சாரங்கன் மிகவும் அதிகமாக வற்புறுத்தத் தொடங்கினான். அவசரப்படவும் ஆரம்பித்தான். எனக்கு அது ஒரு தொந்தரவாகவே மாறிவிட்டது. 'இத்தனை நாளும் இவன் வாய்மூடி மௌனியாக இருந்ததும் போதும், இன்று பாடாய்ப் படுத்துவதும் போதும்' என்று சலித்துக்கொண்டேன்.

"...நான் கோபப்பட்டவன்போல் நடித்து 'என்னால் வரமுடியாது. எனக்கு அவசரமான வேலையிருக்கிறது. இன்னொரு நாளைக்கு வேண்டுமானால் பார்த்துக் கொள்ளுவோம்' என்று சொல்லிவிட்டு மறுபுறம் திரும்பிக்கொண்டேன். ஏதோ ஒரு புத்தகத்தைத் தேடுபவன் போல மேஜையைத் துழாவிக்கொண்டிருந்தேன்.

சாரங்கன் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருந்தான்.

"ஒரு நிமிஷம் கழிந்திருக்கும். அவனை ஒரு முறை திரும்பிப் பார்த்தேன். நான் பார்த்த மாத்திரத்தில் அவன் ஒருமுறை பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'வரமாட்டீர்களா?' என்று தடுமாறும் குரலில் கேட்டான்.

"....அவனைத் திரும்பத் திரும்ப அழவைத்துப் பார்க்க எனக்கு இஷ்டமில்லை... 'சாரங்கா வா. உன் வீட்டுக்கே போகலாம்' என்றேன்.

"இருவரும் கைகோர்த்துக் கொண்டே சென்றோம்... தட்டில் உப்புமாவும் ஒரு டம்ளரில் காப்பியுமாக வந்து சேர்ந்தான்... இந்தப் பையனுக்கு எதற்கு என்மேல் இவ்வளவு அன்பு? இவன் அன்பு என்னைத் திணற அடிக்கிறதே! இது தாங்க முடியாத அன்பு. தாங்க முடியாத பேதமை! இரண்டும் சேர்ந்து என்னைக் குரங்காட்டம் ஆட்டுகின்றன...

"சாரங்கன் வெளியே வந்தான். மேஜையைத் திறந்து ஒரு பவுண்டன் பேனாவை எடுத்தான். என் முகத்துக்கெதிரில் நிற்காமல் என் முதுகுப் புறமாக வந்து நின்று கொண்டான். அங்கே நின்ற வாக்கிலேயே, நான் கையில் வைத்திருந்த சரித்திரப் புத்தகத்தை மெதுவாகப் பிடித்து இழுத்துத் தூரத்தில் வைத்தான். தூங்கும் குழந்தையின் கையிலிருக்கும் கிலுகிலுப்பையை எவ்வளவு ஜாக்கிரதையாகத் தனியே எடுத்து அப்புறப் படுத்துகிறோமோ, அது போல அதை அப்புறப்படுத்தினான். பிறகு அவன் வலது கையால் தன் கால் சட்டையின் பையில் கையைவிட்டு எதையோ எடுப்பதுபோல எனக்கு ஜாடையாகத் தெரிந்தது. அதை என் முன்பாக மேஜை மேல் வைத்தான்.

"அது ஒரு டைரி. நான் சுந்தரராஜனுக்கும், சித்ராவுக்கும் அன்பளிப்பாகக் கொடுத்த டைரிகளைப் போன்ற ஒரு டைரி. அதே கம்பெனியில் செய்தது. அதே நிறமுடையது அப்புறம் பேனாவை என் கையில் கொடுத்து 'எழுதுங்கள்' என்றான்.

"எனக்கு ஒன்றுமே புரியவில்லை, 'என்ன எழுத?' என்று கேட்டேன்.

'என் பிரியமுள்ள சாரங்கனுக்கு அன்பளிப்பு' என்று எழுதுங்கள்.

"மற்றவர்களுக்குஅன்பளிப்பு அளித்துவிட்டுச் சாரங்கனுக்கு அன்பளிப்பு அளிக்காத பெரியவனுக்கு இதைவிடச் சுரீரென்ற சாட்டையடி எப்படிக் கொடுக்க

முடியும்?" அன்பு எனும் சாட்டையின் சொடுக்கு கதையிலே அற்புதமாகக் கேட்கிறது. படித்தனுபவித்து அறிய வேண்டிய ஒரு அநுபவம் இது.

ராஜா வந்திருக்கிறார் என்று இன்னொரு குழந்தைக் கதை. பணக்கார வீட்டுக்கு மாப்பிள்ளை ராஜா வந்திருக்கிறார். ஏழையின் குடிசைக்கும் ஒரு ராஜா வந்திருக்கிறார். தீபாவளி சமயம். மாப்பிள்ளை ராஜாவுக்கு பிச்சைக்கார ராஜா எந்த விதத்தில் மட்டம்? அநாதையாக வந்த சிறுவன் தீபாவளியன்று கௌபீனத்தோடு நின்றான். தாயம்மாள் தனக்குள்" 'என்னைச் சோதிக்கத்தான் வந்திருக்கேடா நீ' என்று சொல்லிக் கொண்டாள். மனக் கசப்புடன் சொல்வது போலச் சொன்னாள். ஆனால் அவளுக்கும் மனக் கசப்புக்கும் வெகு தூரம். மனதுக்குள் ஏற்பட்ட சிக்கல்களை விடுவிக்கவே இப்படிப்பட்ட வாசகத்தை அவள் தூக்கிப் போட்டாளே ஒழிய, அவள் சொற்களில் மனக் கசப்பின் நிழல்கூடப் பதியவில்லை.

"அப்போது மங்கம்மாள் எழுந்து வந்து அம்மாவின் கன்னங்களில் தன் உள்ளங் கைகளை வைத்து, தன் முகத்துக்கு நேராக அவளுடைய முகத்தைத் திருப்பினாள்; அப்புறம் ஏதோ ரகசியத்தைச் சொல்லுவதுபோலச் சொன்னாள்;

'பாவம். அவனுக்கு அந்தத் துண்டைக் குடு அம்மா.'

"...இந்த மங்கம்மாளைச் சந்தித்த மாத்திரத்தில் மிகவும் சந்தோஷத்துடன் ராமசாமி சொன்னான்:

'எங்க வீட்டுக்கு ராஜா வந்திருக்கிறார்!'

"ஊர்க்காரர்களைப் போல் அவனும் தன் அக்காள் புருஷனை ராஜா என்று சொன்னான். ஆனால் அவன் சொன்னதற்குக் காரணம் சந்தோஷம்தானே ஒழிய, மங்கம்மாளைப் போட்டிக்கு அழைப்பதற்காக அல்ல. ஆனால் அவளோ வேறு விதமாக நினைத்துவிட்டாள். முதல் நாள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தபோது நடந்த போட்டிதான் அவள் ஞாபகத்தில் இருந்தது. அவன் சொன்னதற்கு

பதில் சொல்லி அவனுடைய பெருமையை மட்டம் தட்ட வேண்டும் என்று அவள் மனம் துடித்தது. அதனால் ஒரு அரை அடி முன்னால் நகர்ந்து வந்து நின்றாள். யாதொரு திகைப்பும் தயக்கமும் இல்லாமல் ராமசாமியைப் பார்த்து ரேகை சாஸ்திரியிடம் காட்டுவதுபோலக் கையை வைத்துக் கொண்டு, மிகமிக ஏளனமாகச் சொன்னாள்:

'ஐயோ! உங்க வீட்டுக்குத்தானா ராஜா வந்திருக்கிறார்? எங்க வீட்டுக்கும்தான் ராஜா வந்திருக்கிறான். வேணும்னா வந்து பாரு!''' இந்தக் கதையை இப்படிச் சுருக்கிச் சொல்லி இதனுடைய வேகத்தைத் தந்துவிட முடியாது தான். படித்துப் பார்த்து அநுபவிக்க வேண்டியதுதான்.

பெரியவர்களைப் பற்றி ஒரு கதையையும் ஸாம்பிள் பார்க்கலாமே. இரண்டு ஆண்கள் என்றொரு கதை. ஆரம்பமே மிகவும் சுவாரசியமாகவும் கவனத்தைக் கவருவதாகவும் இருக்கிறது. "என் மாமா ஒரு அல்காப் பேர்வழி. சோம்பேறித்தனம், போக்கிரித்தனம், அயோக்கியத்தனம் என்பன போன்ற குணங்களெல்லாம் அவரிடம் வகைக்குக் கொஞ்சம் உண்டு. காரண காரியமில்லாமலே, தம்முடைய மோசமான குணங்களில் ஒன்றைக் காட்ட ஆரம்பித்து விடுவார். எவனாவது ஒருவனுடன் வீண் சண்டை போடா விட்டால் அன்று அவருக்கு என்னவோ போல் இருக்கும்.

"மாமாவுக்கு வயது இருபத்தெட்டு; என்னைவிட நான்கு வயது மூத்தவர். அவருக்கு ஏதோ கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரியும். வேலை எதுவும் கிடையாது. சாப்பிட வேண்டியது, ஊர் சுற்ற வேண்டியது, மடத்தில் துண்டை விரித்துத் தூங்க வேண்டியது, இவரைப் போன்ற ஒரு வேலையற்றவனோடு உட்கார்ந்து தாயம் விளையாட வேண்டியது. இப்படியாக அவர் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார். ஆனால் இந்த மாதிரி வாழ்க்கை நடத்துவதற்குப் பெரிய தகப்பனோ, அல்லது முப்பாட்டனோ கப்பல் வியாபாரிகளாக இருந்திருக்க வேண்டும். ஆனால் என்

மாமாவின் தகப்பனாரோ கப்பல் வியாபாரியுமல்ல; கத்தரிக்காய் வியாபாரியுமல்ல; எட்டு ஏக்கர் கரிசல் மண்ணுக்கு அதிபதி, அவ்வளவுதான்." இந்த மாதிரி மகனை வைத்துக் காப்பாற்ற அவரால் முடியவில்லை. அடித்துத் துரத்தி விட்டார். கதை சொல்லுகிறவரோடு அவர் வீட்டில் வசிக்க வந்தார். அங்கேயும் சரிப்பட்டு வரவில்லை. சொல்லாமல் கொள்ளாமல் யாரிடமோ திருட்டுத்தனமாகப் பணம் வாங்கிக்கொண்டு 'அருமை மருமகனாகிய செல்லையாவுக்கு' எழுதியபடி மிலிட்டரியில் சேர்ந்திட்டார். சேர்ந்து பல மாதங்களுக்குப் பிறகு வந்தார். " 'சர்மே அம்மா சௌக்கியமா? எனக்குத் தமிழ் மறந்து போச்சு!' என்று சிரித்துக் கொண்டு பெருமையோடு சொன்னார்.

"ஒரு கிழவர் வந்து என் மாமாவிடம் 'தம்பி இப்போது எந்த ஊரிலிருந்து வருகிறது' என்று கேட்டார். வருகிறாய் என்று கேட்க அவருக்கு வாய் வரவில்லை.

'சிட்டகாங்கிலிருந்து வருகிறேன், தாத்தா.'

'அது எங்கே இருக்கிறது? மதுரைக்கு வடக்கே தானே?' என்றார் கிழவர்.

என் மாமா அமர்க்களமாய்ச் சிரித்துக்கொண்டு 'மதுரையா? பழைய காலத்துப் பைத்தியங்கள். சிட்டகாங் இங்கிருந்து இருபதினாயிரத்து மூந்நூறு மைல்' என்று ஒரு போடு போட்டார்.

'அடேயப்பா' என்று ஏககாலத்தில் சுமார் பத்து பேர் வரை பிரமித்தார்கள்.

"அந்தக் கிழவர், 'தம்பி மதுரைக்கு வடக்கேயெல்லாம் போய்ப் பார்த்துவந்து விட்டதே!' என்று பல தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லி ஆச்சரியப்பட்டார்.

"மாமா ஒரு சிகரெட்டை எடுத்துக் கொளுத்தினார்.

ஒரு பெண் 'சிட்டகாங்கிலிருந்து இங்கே வர எத்தனை நாள் பிடிக்கும்?' என்று கேட்டாள்.

'ஒன்றரை மாதம்.'

'ரயிலில்தானே வரவேண்டும்?'

'ரயிலில் முப்பது நாள்; கப்பலில் முப்பது நாள்!'''

மாமாவைத் துரத்திய பெண்களெல்லாம் மருமான் செல்லையாவைத் துரத்த மறுத்தார்கள். மருமானும் மிலிட்டரியில் சேர மனம் கொண்டுவிட்டான் என்று கதை. லேசானதொரு ஹாஸ்யத்துடன் ஒரு கனமான விஷயத்தைப் பூரணமாக சொல்லிவிட்டார் ஆசிரியர் அழகிரிசாமி.

எல்லாக் கதைகளிலுமே இரண்டொரு பகுதிகளை யாவது எடுத்துச் சொல்லிவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், கடைசியாக திரிவேணி என்னும் ஒரு கதையிலிருந்து சில பகுதிகளைச் சொல்லிவிட்டு நிறுத் திக் கொள்கிறேன்.

“அயோத்தி நகரம். இந்த அயோத்தி கோசல நாட் டின் தலைநகரும் அல்ல; சரயு நதி தீரத்தை மாடகூடங்க ளுடன் அலங்கரிக்கும் ராஜதானிப் பட்டணமும் அல்ல. இங்கே ராமன் இருக்கிறான்; இந்த இடம் அயோத்தியாக இருக்கிறது...

“...பழைய நிகழ்ச்சிகள், யுகக் கணக்கில் கடந்துபோன காலத்துக்கு முன்னே என்றென்றோ நடந்த நிகழ்ச்சிகள் தம்முள் வேற்றுமை தெரியாமல் ஒரு நிகழ்ச்சியாக, ஒரு பிண்டமாகத் திரண்டுவிட்டன போலத் தோன்றுகிறது காலமெனும் பனி மூட்டம் நடுவே கவிந்திருந்தது...மூட்டத் திற்கு அப்பால் தென்படும் அகலிகையின் சாப விமோசன மும், வில்லிறுத்த பேராண்மையும், தாதை சொல்கொண்டு கானக வாழ்க்கையை மேற்கொண்டதும், குகனுடைய வரவேற்பும், பரதன் பாதுகை சுமந்து சென்ற கோலமும், அப்புறம் மரவுரி தரித்து பர்ணசாலை முற்றத்தில் ஆடிய விளையாட்டுக்களும், இருவரும் பிரிந்து தனி வாழ்வு வாழ்ந் ததும், ஜடாயுவின் தெய்வ மரணமும், இலங்கை யுத்தம்... ராமனும் ஜானகியும் கைகோத்து வருகிறார்கள்...நிகழ்ச்சி

யால் மோதுண்ட இருவரின் உள்ளமும் யுகவளர்ச்சி பெற்றுக் கனிந்திருக்கிறது...

"பாட்டு முடிந்ததும் நிலவொளி பாயும் வெளிப் பகுதி வரையிலும் வந்து பொன்னூசல் ஆடுகிறது. நிலவு ராமனுடைய முகத்தில் படிகிறது. சீதையின் வதனத்தையும் சந்திரிகை நீராட்டுகிறது. இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் நன்கு பார்த்துக் கொண்டனர். இரண்டு பேரின் உதடுகளிலும் புதிதாக வெற்றிலைச் சாற்றின் சிவப்பு படிந்திருக்கிறது.

ராமன் சிரிக்கிறான். பிறகு சொல்லுகிறான்: 'திருவையாறுக்கு நாம் போகவில்லை; போகாமலே எத்தனை உபசாரங்கள்!' "

"ராமனும் சீதையும் திருவையாறுக்கு வருகிறார்கள்.

" 'ராமா! நீ எங்கள் ஊரிலேயே இருந்துவிடேன்' என்றாள் ஒரு வயதான கிழவி.

"ராமன் சிரித்தான்! 'பாட்டி! இங்கே எனக்குப் பதிலாக நீ இருக்கிறாய் அல்லவா? நான் இருந்தாலும் ஒன்றுதான், நீ இருந்தாலும் ஒன்றுதான் பாட்டி' என்றான் ராமன்."

திரிவேணி என்கிற அழகிரிசாமியின் இந்தக் கதை தமிழில் இதுவரையில் வெளிவந்திருக்கும் கதைகளில் சிறந்ததொன்று என்பது என் அபிப்பிராயம். அதைப் படித்தவர்கள் எல்லோரும் என் அபிப்பிராயத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்பதுபற்றி எனக்குச் சந்தேகமேயில்லை.

18. அ. சுப்பிரமணிய பாரதி நாவல்

# ஜடாவல்லவர்

சுமார் முப்பத்தி மூன்று வருஷங்களுக்கு முன், எனக்குப் பத்துப் பன்னிரண்டு வயது நடந்துகொண்டிருக்கும்போது, எனக்கு ஏராளமான தமிழ்ப் புஸ்தகங்கள் கிடைத்தன. என் தாத்தா ஒரு பள்ளிக்கூடத்தில் ஹெட்மாஸ்டர். அவர் பள்ளிக்கூடத்து லைப்ரரிக்காகத் தமிழ் நூல்கள் பலவற்றையும் வாங்கி, வீட்டில் வைத்திருந்தார். அந்த வருஷத்தை ஒட்டி, சற்று முன்னும் பின்னுமாக, தமிழிலே ஒரு மலர்ச்சி ஏற்பட்டிருந்தது என்று எனக்கு இப்போது ஒரு ஞாபகம் வருகின்றது. அது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்கு இப்போது தெரியவில்லை. ஆனால் அந்தச் சமயத்தில் நான் படித்த நாவல்களில் பல என் மனத்தில் இன்னும் பசுமையாக இருக்கின்றன. பொற்றொடி என்று ஒரு நாவல் குருமலை சுந்தம் பிள்ளை எழுதியது. **கனகாம்புஜம்** அல்லது கள்வனும் விலைமகளும் என்று ஒரு நாவல்; வடுவூரார் எழுதியது. விக்டர் ஹியூகோவின் துயரம் மிகுந்தவர்கள் என்கிற நாவலின் தழுவல் அது என்று பின்னர் தெரிந்துகொண்டேன். இப்படியாகப் படித்த பல நாவல்களில் **ஜடாவல்லவர்** என்ற ஒரு நாவல் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. அன்றும் இன்றும் அது ஒரு அசல் தமிழ்க் கதையென்றே நான் எண்ணுகிறேன். உற்சாகமாக இந்த நாவலை நான் படித்து முடித்தது மட்டும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. தவிர, மறுபடியும் இவ்வருஷம் இந்த வரிசைக்காகப் படிக்கும் வரையில் மறுபடியும் படிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. இப்போது இரண்டாந்தரமாகப் படித்தபின், அந்த

நாவல் தமிழில் வெளி வந்துள்ள நாவல்களில் சிறந்த தொன்று என்கிற அபிப்பிராயமே உறுதிப்பட்டது.

இந்த நாவலின் ஆசிரியர் பெயர் வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதி என்பதாகும். இவர் இன்னும் பல நூல்களும், பாட புஸ்தகங்களும் இயற்றியுள்ளார். சமீப காலம் வரையில் நம்முடன் உயிருடனிருந்தார். இறந்து இப்போது இரண்டொரு வருஷங்களேயாகின்றன. ஜடாவல்லவர் என்கிற நாவல் முதலில் எவ்வருஷம் வெளி வந்தது என்று எனக்குத் தெரியவில்லை. நான் இப்போது படித்து முடித்த புஸ்தகம் 1922-ல் வெளிவந்த மூன்ருவது பதிப்பு, முப்பத்திமூன்று வருஷங்களுக்குமுன் நான் படித்த புஸ்தகமும் இதே பதிப்பாக இருக்கலாம். ஜடாவல்லவர், ஒரு அருமையான சரித்திரம் என்கிற தலைப்புடன் வெளியாகியுள்ள இந்த நாவல் உண்மையிலேயே தமிழில் இதுவரை வெளி வந்துள்ள நல்ல நாவல்களில் ஒன்று. சற்றேறக் குறைய அறுநூறு பக்கங்கள் இருக்கின்றன. பல இடங்களில் கதை தடுமாறுகிறது என்றுதான் சொல்ல வேண்டும். பக்கங்களைப் புரட்டி மேலேசெல்ல வாசகன் நினைக்கலாம். ஆனல், மொத்தத்தில் சொல்லப் போனல், ஆசிரியர் சுப்பிரமணிய பாரதி ஒரு அற்புதமான முயற்சி செய்திருக்கிருர்:- அந்த முயற்சியில் ஓரளவுக்கு வெற்றியும் பெற்றுள்ளார் என்றுதான் சொல்ல வேண்டும்.

அவர் காலத்தில் அவர் அறிந்த வாழ்க்கையின் நிழல் சற்று அழுத்தமாகவே அவர் எழுத்தில் பதிந்திருக்கிறது. காலம் மாறுவதையும் காலமாறுதலால் சமூகத்தில் ஏற்படுகிற மாற்றங்களையும் ஓரளவுக்குப் பூரணமாக உருவாக்கித் தந்திருக்கிருர் ஆசிரியர். அவர் சொல்கிற முடிவுகள் பற்றி நமக்கென்ன கவலை? அவர் தந்திருக்கிற பகைப் புலன், எடுத்துக் காட்டியுள்ள உதாரணங்கள், சிருஷ்டித்திருக்கிற கதா பத்திரங்கள் உண்மையானவையாக இருக்கின்றன என்பதை நம்மையும் மீறியே, அவர் சொல்கிற முடிவு

களையும் எதிர்த்தே, நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

முகவுரையில் ஆசிரியர் கூறுகிறார்: "தமிழுலகத்திலே சென்ற சில வருஷங்களாக, ஆங்கில பாஷையிலுள்ள நாவல்களையும் நாடகங்களையும் அனுசரித்தவைகளாய் வெளிவந்துலாவும் புத்தகங்கள் பல. அவற்றிற்கேற்ப நூலாசிரியரும் புத்தகங்களை வாங்கிப் படிப்போரும் பெருகி வருகின்றனர். ஒரு பாஷையிலுள்ள அரிய பெரிய கருத்துக்களை நம் தாய் பாஷையிலே மொழி பெயர்த்து உலகுக்கு உபகரிப்பது காண, நாம் பெரிதும் களிப்படைகின்றோம். ஆனால், ஒரு பாஷையிலிருந்து பிறிதொரு பாஷையில் மொழி பெயர்ப்பதை வெகு சுளுவாகக் கருதி, இப்போது பள்ளிச் சிறுரும் படிப்பை முடித்து உத்தியோகத்திற்கு இடர்ப்படும் உலக ஞானமிலாதாரும் தம் மனத்திற்கும் அறிவின் முதிர்ச்சிக்கும் ஏற்றபடித் தாம் முதல் நூலாக எடுத்தாலும் ஆங்கில நூலை மொழி பெயர்க்கத் துணிந்து, தமிழிற்குரிய சொற்பொருட் சுவை, வாக்கியத் தெளிவு, அதன் அமைப்பு முதலியன நன்கமையப் பெருமல், நமது தேசத்தினர் அனுஷ்டிக்கவும் பயிலவும் தகாத பிறதேசத்து ஒழுக்கங்கள் விரவிய புத்தகங்களை வெளியிட்டுக் களிக்கின்றனர்...நாவல்களும் நாடகங்களும் சரித்திரங்களும் சுய அறிவிலிருந்து அனுபவ வழியே தோன்றுமாயின், அவை உலகத்திலே, உயிர் பெற்று உலாவுவனவாகும்......ஜடாவல்லவர் எனும் இச்சரிதத்தை என் சுயவறிவைக் கொண்டு முதல் நூலாகவே எழுதி வெளியிட்டேன்...

"நம்முடைய குடும்பங்களிலே குடும்பத் தலைவனுக்கேற்படும் கஷ்டங்களையும், மாமி, மருகிகளுக்குள் அறியாமையினால் ஏற்படும் வீண் சண்டைகளையும், சேவகா விருத்தியினால் நேரிடும் கஷ்டங்களையும், பெரியோர், சிறியோர், உயர்ந்தார் தாழ்ந்தார், மாணவர் ஆசிரியர், பெற்றோர்

பிள்ளைகள், ஸ்திரீ புருஷர்கள், எஜமானன் வேலைக்காரன், உத்தம நாயக நாயகிகள் இன்னோர் அனுஷ்டிக்க வேண்டிய ஒழுக்க வழக்கங்களையும் பல உபமான உபமேயங்களுடன் பழமொழிகளுடனும் மேற்கோள்களுடனும் என்னால் கூடியவரையில் படித்தற்கும் படித்துப் பயன் பெறற்கும் ஏற்றபடி எழுதினேன்.''

இவ்வளவையும் செய்யவே செய்திருக்கிறார் ஆசிரியர். அதனால்தான் நாவல் சில இடங்களில் கட்டுக்கடங்காமல் வழிந்து ஓடியும், உருவம் பெருகியும், பிரசங்கங்கள் நிறைந்தும் காணப்படுகிறது. உத்திகளைப்பற்றி அதிகமாக யாரும் சிந்திக்காத காலத்திலே நேரான ஒரு கதையை நேராகச் செய்து சொல்லி முடித்திருக்கிறார் ஆசிரியர். ஒருவரின் ஜீவிய சரித்திரமாக எழுதப்பட்டிருக்கிறது நாவல்.

''சந்திரசேகரனுக்கு வயது பதினாறாயிற்று. உமா மகேசுவர அய்யருடைய தவப்பயனே உருவெடுத்தது போலத் தன் திருவுருவம் திகழ அவன் விளங்குகின்றான். பொன்னிற மேனியும் வயதுக்குத் தக்க உயரமும், உயரத்திற்கேற்ற பருமனும் உடையவனாக இருக்கிறான். முகத்திலே இளமையின் பளபளப்பிலகுகின்றது. அழகிருந்து தவம் புரியும் தவச்சாலையேறுமிவன் முகம் என ஊகமுடையார் நெஞ்சம் ஊகிக்கும்படியாயும் இவனுக்குச் சித்தம் சுத்தமாயிருக்குமென்று பிறர் மனோநிலையறியத் தக்க பெரியோர் பேசும்படியாகவுமிருக்கின்றது முகம். இவன் அவயவங்களும் நடையும் சாமுத்திரிகா லட்சணமறிந்தார் மனத்தைக் கவர்வனவாகச் சிறந்துள்ளன. இவ்வாறாக எல்லா இலட்சணங்களும் அமைந்திருந்தும் கல்வியறிவில்லா தொழியின், பாவ புண்ணியம், இம்மை மறுமை இவற்றின் உணர்ச்சியில்லாமற் பிறப்பின் பயனையிழக்க நேரிடுமன்றோ? அவ்வாறான இழிதகைமைக்குள்ளாக்காமல் சந்திரசேகரனை அவன் தன் கல்வியின் பொருட்டு எடுத்துக்கொண்ட முயற்சியும் உழைப்பும் காப்பாற்றின. சந்திர

சேகரன் படிக்கத் தொடங்கியது ஸம்ஸ்கிருதமாகையால், இச்சிறு வயதிற்குள் ஜடை, கனம் முதலிய அத்யயனக் கிரமத்திலே தேர்ச்சி பெற்று, தர்க்கம், வியாகரணம் முதலிய சாஸ்திர விற்பன்னனாகி, ஸம்ஸ்கிருத பாஷா பண்டிதனானான். தாய்ப் பாஷையாகிய தமிழிலும் எழுதப் படிக்கக் கற்றுச் சிறப்புற்றான். அப்பொழுது அவனுக்கு வித்வத் சிரோமணிகள் சந்திரசேகர ஜடாவல்லவரெனச் சிறப்புப் பெயர் கொடுத்தழைத்தார்கள்...''

தமிழ், சற்று நெரடான பண்டிதத் தமிழை எட்டும் தமிழ்தான் என்றாலும் தெளிவு போய்விடவில்லை. விஷயத்தைச் சற்றே சுற்றி வளைத்துத்தான் சொல்லுகிறார். ஆனால் பதினேழாம் நூற்றாண்டின் ஆங்கிலவசன நூல் பாதிரி அதுவும் ஒரு அழகாகத்தான் இன்று படிக்கும் போது எனக்குப் படுகிறது. இங்கிலிஷ் படித்தவனுக்குத் தான் பெண் கொடுப்பது என்று கொள்கையுள்ள ஒரு ஜாதியார் அப்போதே தோன்றிவிட்டார் போலும். அவர்களை நையாண்டி செய்து, நம்முன் கொண்டுவந்து நிறுத்திக் கேலி செய்கிறார் ஆசிரியர். பிராம்மண ஆசார அனுஷ்டானங்களை மறந்த ஒருவர், ஜடாவல்லவரின் சகோதரியைக் கல்யாணம் செய்துகொள்கிறார். அவரை மத்தியாக வைத்துப் பல ஹாஸ்ய சம்பவங்களைச் சொல்லுகிறார் ஆசிரியர். சுப்பிரமணிய பாரதியின் ஹாஸ்ய சம்பவங்களும், ஊரோடு ஒத்துவாழ் என்கிற படிப்பினையை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்க முயலுகின்றன. அந்த மாப்பிள்ளையை அடைந்த ஜானகியை வாசகர் மனத்தைக் கவரும்வகையில் தீட்டியிருக்கிறார் ஆசிரியர். இந்த நவநாகரிகப் புருஷனுக்கு ஆபத்து வராமலிருந்தால் வாசகர்களுக்கோ ஆசிரியருக்கோ திருப்தி ஏற்படுமா? வருகிறது ஆபத்து; வருகிறது. ஆபத்து கடவுள் செயலால் நீங்குகிறது.

ஜடாவல்லவருக்குத் திரிபுரசுந்தரி என்று ஒரு மனைவி வந்து வாய்க்கிறாள். அவர்கள் இருவரும் நடத்திய இல்

லறத்தை ஆதர்ச இல்லறமாக வருணிக்கிறார் ஆசிரியர். குடும்பத் தொல்லைகள் காரணமாக, பண வருவாயை இச்சித்து அவர் ஒரு உத்தியோகத்தை ஏற்றுக்கொள்கிறார். ஜடாவல்லவரின் தாயே அவர் மனைவியைப் படுத்துகிறாள். இதையெல்லாம் அசாதாரணமான, அநாவசியமான தென்றுகூடச் சொல்லக்கூடிய அளவுக்கு வருணித்திருக்கிறார் நாவலாசிரியர். ஜடாவல்லவருக்கு வேலைத் திறமையும் நாணயமும் போதவில்லை என்று அவரை உத்தியோகத்திலிருந்து நீக்குகிறார்கள். ஆனால், உரிய காலத்தில் அபவாதம் நீங்குகிறது.

ஜடாவல்லவருக்குப் பிறந்த மங்களவல்லி என்ற அழகான பெண்ணுக்குக் கல்யாண வயது வருகிறது—அதாவது எட்டு ஒன்பது வயது என்று வைத்துக் கொள்ளுங்களேன். ஜடாவல்லவரின் விதவைத் தங்கை ஸ்ரீமதியின் கொழுந்தனுக்கு மங்களவல்லியை மணம் செய்ய வேண்டுமென்று ஸ்ரீமதி தன் அண்ணாவிடம் வற்புறுத்துகிறாள். இங்கிலீஷ் படித்தவனுக்குப் பெண் கொடுத்துப் பட்டதெல்லாம் போதும் என்று ஜடாவல்லவருக்கு மனத்தில் இருந்தாலும், ஸ்ரீமதிக்காக அவர் சம்மதிக்கிறார். ஆனால், மங்களவல்லியைக் கண்ட இராமாமிருதம் என்கிற இளவயதுப் பாடகனுக்கு அவள்மேல் காதல் விழுந்து விடுகிறது. அவளுக்கும் அவனிடம் பிரியம் ஏற்படுகிறது. சற்று அசம்பாவிதமான, அதாவது அந்த சமூகத்தில் அந்த நாளில் நடக்காத ஒரு விஷயம்தான் எனினும் இந்தக் காதல் வியவகாரத்தை ஒரு அழகுடன் நடத்திக் காட்டியிருக்கிறார் ஆசிரியர். உள் கதையாக மங்களவல்லி-ராமாமிருதம் காதல் கதை நன்றாகவே இருக்கிறது என்று சொல்லவே தோன்றுகிறது. உண்மைக் காதல்தான் தெய்வ சகாயத்தாலும் ஆபத்சகாயமையர் உதவியாலும் வெற்றி பெறுகிறது; மங்களவல்லிக்கும் இராமாமிருதத்திற்கும் கலியாணம் நடந்து, நமக்குத் திருப்தியளிக்கிறது.

நாவலின் மூன்றுவது பகுதியில் ஜடாவல்லவரிடம் சிக்குண்ட-அன்பினுல்தான்-ஒரு கொள்ளைக்காரனின் சரிதம் விரிவாக இடம் பெற்றிருக்கிறது. வீரசிங்கனின் சரித்திரம் வேறு எதற்கும் இன்று நமக்கு உபயோகப்படாது என்ருலும், சாதாரண வாசகர்களின் வீர உணர்ச்சியைத் தூண்டி 'கண்ணீர்மை'யைத்தொடும் காரியத்துக்கு உபயோகமாகிறது என்று சொல்லலாம்.

சாதாரணமான கதைதான். ஆனுல், இதை அங்கங்கே பழமையையும் புதுமையையும் ஒப்பிட்டு, ஆசிரியர் எந்தக் கட்சி என்பது ஒவ்வொரு இடத்திலும் விளங்கச் சித்தரித்திருக்கிருர். பல இடங்களில் கண்ணீர்த் துளி வர உள்ளுருக்கும் வித்தையை ஆசிரியர் திறம்படக் கையாண்டிருக்கிருர். இந்தமாதிரி இடங்கள் பலவற்றைத் திரும்பத் திரும்ப வாசிக்கத் தோன்றுகிறது. ராமாமிருதம்-மங்களவல்லி சந்திப்பு, கொள்ளைக்காரன் வருகை, சர்க்கார் கணக்குப் பேரேட்டில் வீட்டுத் தொல்லை எழவுகளை எழுதியது, மங்களாம்பாள் தொட்டிற் குழந்தையாக இருக்கும்போது திருடனிடம் அகப்பட்டுக்கொள்வது போன்ற பல இடங்களை யாருக்கும் திரும்பத் திரும்ப வாசித்து, அனுபவிக்கத் தோன்றும். நல்ல நாவல் இது என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

ஆசிரியர் தன் நாவலில் கூட்டமாகத் திரைச் சித்திரங்களைத் தீட்டி, நம்மைக் குழப்ப முயலவில்லை. சிருஷ்டித்த கதா பாத்திரங்களைக் கச்சிதமாக உருட்டி உருவாக்கிவிட முயன்றிருக்கிருர். இப்படி உருவாக்கும் காரியத்திலே அவர் பெரிதும் வெற்றி பெற்றிருக்கிருர் என்றே சொல்லலாம். சில இடங்களில் திரும்பத் திரும்பச் சொல்லல், மிகைபடச் சொல்லல், அநாவசியமாகப் பிரசங்கம் செய்தல்போன்ற குற்றங்கள் இருக்கின்றன எனினும் கதை ஓட்டம் தடைப்படவில்லை. பண்டித பாஷைகூடக் கதை ஓட்டத்தைத் தடை செய்யவில்லை என்று சொல்லவேண்டும். ஜடா

வல்லவரையும், திரிபுரசுந்தரியையும், ஸ்ரீமதியையும், ஜானகியையும், மங்களாம்பாளையும், இராமாமிருதத்தையும் அறிந்துகொண்டவர்களைப் பாக்கியசாலிகள் என்றே சொல்லவேண்டும். இன்னும் பத்திருபது சில்லறைப் பாத்திரங்களும் பூரணமாகவே உருவாகியிருக்கின்றனர் என்பது இந்நாவலின் தனிப் பெருமை.

**ஜடாவல்லவரைக்** காலத்தை ஒட்டிய நாவல் என்றுதான் சொல்ல வேண்டும். அவர் கண்டு கேலி செய்த பல பழக்க வழக்கங்கள் இப்போது மறைந்துவிட்டன. சரித்திர பூர்வமாகக்கூட பிராம்மண சமூகத்தின் அன்றையப் பழக்க வழக்கங்களை அறிந்துகொள்ள இன்றைய வாசகர்களுக்கு அவசியமில்லைதான். இந்த நாவல் வெற்றி பெறுவது அந்த நாளைய சமூகப் பழக்கங்களைத் தீட்டியதால் அல்ல. அவற்றை மீறி நமக்கு இதில் வருகிற கதாபாத்திரங்களை உயிருள்ள மனிதர்களாக அறிமுகம் செய்து வைக்க ஆசிரியர் முயன்றதால்தான், ஜடாவல்லவரை நல்ல தமிழ் நாவல் என்று நாம் போற்ற வேண்டும்.

19. " கல்கி " கட்டுரைகள்

# சங்கீத யோகம்

நான் செவிடன். அதாவது சங்கீதத்தைப்பற்றிய வரையில் நான் செவிடன். அரைச் செவிடு, கால்செவிடு கூட இல்லை; முழுச் செவிடுதான். அப்படியிருந்தும் கல்கியின் தமிழ் இசை விவாதக் கச்சேரிகளை—அதாவது அது பற்றிய கட்டுரைகளை—என்றால் படித்து வெகுவாக ரஸிக்க முடிகிறது. சங்கீத யோகம் என்கிற இந்தப் புஸ்தகத்தில் தமிழிசை இயக்கத்தைப்பற்றி கல்கி எழுதிய கட்டுரைகள் பலவும் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன பதினைந்து பதினாறு வருஷங்களுக்கு முன் தொடங்கி, ஒரு நாலைந்து வருஷங்கள் தமிழனின் தினசரிப் பேச்சிலும் வாழ்க்கையிலும் அடிபட்ட விஷயம் இது. கல்கியின் எழுத்தின் சிறந்த அம்சங்கள் பலவற்றிற்கும் உதாரணமாக அந்தக் காலத்து 'எரியும் பிரச்சினை'க் கட்டுரைகள் உதவுகின்றன.

ஆசிரியர் முகவுரையிலேயே நம்மைக் கவர்ந்துவிடுகிறார். "சங்கீத யோகம் முதலிய தமிழிசை இயக்கக் கட்டுரைகளை ஒரு புஸ்தகமாகப் போட்டால் என்ன?" என்று சின்ன அண்ணாமலை ஒரு போடுபோட்டார்.

"போட்டால் என்ன? போடலாம்! அதனால் பூகம்பமோ யுகப் புரட்சியோ ஏற்பட்டுவிடாது. ஆனால் எதற்காகப் போடவேண்டும்?" என்று கேட்டேன்.

"உலகப் புரட்சியையும் உலக மகா யுத்தத்தையும் தடுப்பதற்காகத்தான்" என்று சொன்னார் சின்ன அண்ணாமலை.

"சங்கீத யோகத்துக்கும் உலகப்புரட்சிக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டேன்.

"அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? அச்சகத் தொழிலாளர்களுக்கு வேலையில்லாமல் போனால் அவர்கள் ஸ்டிரைக் செய்வார்கள். அதன்மூலம் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கும் பெருகும்; உலகப் புரட்சி ஏற்படும்; ருஷ்யாவின் தலையில் அணுகுண்டைப் போடுவார்கள்: மூன்றுவது உலக மகாயுத்தம் ஆரம்பமாகும். இதையெல்லாம் தடுப்பதற்காகத்தான் சொல்கிறேன். சங்கீத யோகத்தைப் புத்தகமாகப் போட்டால் அச்சகத் தொழிலாளிகள் சிலருக்கு வேலை கிடைக்குமல்லவா? அதனால் அவர்கள் ஸ்டிரைக் செய்யாமல் இருப்பார்கள் அல்லவா? அதன்மூலம் உலகப்புரட்சி ஏற்படாமல் தவிர்க்கலாம் அல்லவா?" என்றார் சின்ன அண்ணாமலை.

"ரொம்பசரி; அப்படியானால் அவசியம் சங்கீத யோகத்தைப் போடுங்கள்! உலகப் புரட்சியின் தலையிலேயே அதைப் போட்டுவிடுங்கள்" என்றேன்.

"எந்த நல்ல இயக்கத்தின் வளர்ச்சிக்கும் வேகம் கொடுப்பது, அதற்கு ஏற்படும் எதிர்ப்புகள்தான்" என்று ஒரு இடத்தில் கூறுகிறார் கல்கி. அந்த எதிர்ப்புகளைச் சமாளித்து விவாதம் செய்து தன் கட்சியை நிலைநாட்டும் வன்மைபெற்றவர் கல்கி. அவர் எழுத்திலே உள்ள தெளிவும், வேகமும் இந்த விவாதக் கட்டுரைகளிலே தொனிக்கின்றன. ஒரு விஷயத்தை நேராகச் சொல்லி, அதை ஏற்றுக்கொள்ளாதவர்களைக் கிண்டல்செய்து தன் கட்சியை, அதாவது எழுத்தளவிலாவது, நிலைநிறுத்தும் சக்தி கல்கிக்கு ஏராளமாக இருந்தது. ஒரு இருபது இருபத்தைந்து வருஷங்களில் தமிழ்நாட்டில் எழுந்த எந்த இயக்கத்திலும் கல்கிக்குப் பங்குண்டு. அவர் இந்தமாதிரி இயக்கங்களில் எடுத்துக்கொண்ட பங்குதான் அவரைத் தமிழனுக்கு அறிமுகம் செய்து வைத்தது என்று சொல்ல

வேண்டும்: இந்த வகையில் கவனிக்கும்போது கல்கியின் சங்கீத யோகத்துக்கு அவருடைய எழுத்துக்களிலே ஒரு தனி மதிப்புண்டு.

ஒரு இடத்தில் தன் கட்சிக்கு ஆதரவு தேடுகிருர் கல்கி; எவ்வளவு அழகாகத் தேடிச் சொல்லிவிடுகிருர் பாருங்கள். "இது விஷயத்தில் எனக்கு உறுதியும் ஊக்கமும் ஏற்படுவதற்குத் தமிழ்நாட்டின் அரும்பெரும் தேசீயத் தலைவர்கள் மூன்றுபேரின் அபிப்பிராயமும் துணையாயிருந்தன. அந்த மூவரும் மகாகவி பாரதியார், தீரர் சத்தியமூர்த்தி, தலைவர் ராஜாஜி ஆகியோர்கள்தான்." இதற்குமேல் பெரும்பாலோருக்கு அப்பீலே இருக்காது என்பது தானே இதன் பின் உள்ள எண்ணம்?

கல்கியின் எழுத்து வன்மைக்கு இதோ இன்னொரு உதாரணம். "சென்னை நகரில் சமூக வாழ்க்கையில், டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீதவிழாக்கள் மிகுந்த முக்கியத்தை அடைந்திருக்கின்றன. இந்த விழாக்களைத் திறந்துவைப்பதற்குச் சங்கீதம் தெரியாத பிரமுகர்களை ஒவ்வொரு வருஷமும் அழைப்பதும் வழக்கமாயிருந்து வருகிறது. இந்தத் திறப்புவிழாக்களை நடத்துகிறவர்கள் சாதாரணமாக, எனக்கு சங்கீதத்தைப்பற்றி ஒன்றுந் தெரியாது என்று அவை யடக்கம் சொல்லிக்கொண்டுதான் ஆரம்பிக்கிற வழக்கம். ஆனல் இந்த வருஷம்...விழாவைத் திறந்துவைத்த...போல் அவ்வளவு அழகாக யாருமே தங்கள் பிரசங்கத்தை ஆரம்பித்ததில்லை. முதல் வாக்கியத்திலேயே இவர் தம்மை 'இக்னுரமஸ்' என்று தெரிவித்துக்கொண்டார். 'இக்னுரமஸ்' என்னும் அழகிய கம்பீரமான வார்த்தைக்குத் தமிழில் சரியான பிரதி பதம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் நன்கறிந்த சில நண்பர்களைக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள் 'அஞ்ஞான இருட்குன்று', 'மௌடீகமலை', 'மடசாம்பிராணி' முதலிய சொற்ருெடர்களைக் கூறினர்களே தவிர,

'இக்னுராமஸ்' என்பதைப்போல் கம்பீரமான தனிப்பதம் ஒன்றைக் குறிப்பிட முடியவில்லை" என்று தொடங்கி, விழாவைத் துவக்கிவைத்த பெரிய மனிதர் உண்மையிலேயே இக்னுராமஸ்தான் என்று நிரூபிக்கிறார் கல்கி! படித்து அனுபவிக்கவேண்டிய எழுத்துத்தான் இது.

பயப்பட வேண்டாம் என்று ஒரு கட்டுரை. "ருஷியாவின்மேல் ஜெர்மனி படை எடுத்த செய்தியை அறிந்தும், பிரசித்திபெற்ற ஆங்கில ஆசிரியரான பெர்னார்டு ஷா ஒரு சொல் வெடியை எடுத்துப் போட்டார். 'இனிமேல் பிரிட்டன் பேசாமல் தூங்கப் போகலாம். நாஜி ஜெர்மனியை இனி ஸ்டாலின் பார்த்துக்கொள்வார்!' என்றார். அந்தமாதிரி, தமிழ்ப்பாட்டு இயக்கத்தில் சம்பந்தப்பட்டவர்களும் இனிமேல் தூங்கப்போகலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. தமிழ்ப்பாட்டு இயக்கத்துக்கு விரோதமாக எப்போது எதிர்ப்புக் கூட்டங்கள் போட்டாகிவிட்டதோ, அப்போது அதன் வெற்றியைப் பற்றிக் கவலையே வேண்டியதில்லை, தானே நடக்கும் என்பது நிச்சயம். ஏழெட்டு வருஷமாகத்தான் சிலர் தமிழ்ப் பாட்டு, தமிழ்ப் பாட்டு என்று கரடியாய்க் கத்திக்கொண்டு வந்தோமே, ஒரு எதிர்ப்புக் கூட்டமாவது நடந்ததா? கிடையாது. அது அதற்கு உரியகாலம் வரவேண்டும்; வந்தால்தான் காரியத்துக்குப் பலம் ஏற்படும். அப்போதுதான் எதிர்ப்புக் கூட்டங்களும் நடைபெறும்." எவ்வளவு அழகாக, ஒரு அரை உண்மையை ஆணித்தரமாக எடுத்துக் கூறியிருக்கிறார்!

யுத்த காலத்தில் எழுதிய 'சண்டை என்னத்திற்கு?' என்கிற கட்டுரையின் ஆரம்பம் இது: "சமீபத்தில் ஒரு சங்கீத வித்துவானைச் சந்தித்தேன்.

'என்ன விசேஷம்?' என்று சாதாரணமாய்க் கேட்டேன்.

'ஊரெல்லாம் காலராவும் காபராவுமாய்க் கிடக்கிறது' என்றார்.

'அடடா! அதனால் சங்கீதக் கச்சேரிகளுக்கு விக்கினம் உண்டோ?' என்று கேட்டேன்.

'கச்சேரிகளுக்கு விக்கினம் வந்தால் பாதகமில்லை. தியாகராஜஸ்வாமி உற்சவத்துக்கல்லவா விக்கினம் வந்து விட்டது!'

'அப்படியா? திருவையாற்றில் இந்த வருஷம் உற்சவம்'

'நடக்கிறது; ஆனால் வழக்கம்போல் ஐந்து தினங்கள் விமரிசையாக நடக்கவில்லை, ஒருநாள் உற்சவம் நடத்தத் தான் அனுமதி கிடைத்தது.'

'இந்த மட்டும் ஒருநாளாவது நடக்கிறதே!'

'ஆமாம்; இதுகூட நடக்காவிட்டால் வித்வான் களுக்கு மனம் இடிந்துவிடும்'

'ஒருவிஷயம் உங்களைக் கேட்கவேணுமென்றிருந் தேன். சரி! நாடக சங்கீத உலகில் எத்தனையோ சாஹித் திய கர்த்தாக்கள் இருந்திருக்கிறார்களே? தியாகராஜ ஸ்வாமிகளிடம் மட்டும் வித்துவான்களுக்கு இவ்வளவு பக்தி சிரத்தை ஏன்? அவருடைய ஆராதன உற்சவத்தில் இவ்வளவு ஊக்கம் ஏன் காட்டுகிறார்கள்?' என்றேன்.

'இது தெரியாதா? தியாகராஜஸ்வாமிகளின் கீர்த்த னங்களைத்தானே நாங்கள் ரொம்ப அதிகமாகச் சின்ன பின்னப்படுத்துகிறோம்! அதற்குப் பரிகாரமாக ஒரு வரு ஷம் ஒருதடவை திருவையாற்றில் ஸ்வாமிகளின் சமாதிக்கு உற்சவம் நடத்துகிறோம்' என்று நகைச்சுவையுடன் கூறி னார் வித்துவான்.

"ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் மகான்! மகாபக்திமான்! சித்த புருஷர். கர்நாடக சங்கீதத்துக்கு ஒப்பற்ற சேவை யைச் செய்தவர். நவ நவமான மெட்டுகளில், அபூர்வமான ராக தாளங்களில், அற்புதமான ஸாஹித்தியங்களைச் செய்திருக்கிறார். அந்த ஸாஹித்தியங்களைத் தமிழ் நாட்டுச் சங்கீத வித்துவான்கள் வெகு காலமாகக் கையாண்டு பெயரும் புகழும் அடைந்திருக்கிறார்கள்.

"அத்தகைய தியாகராஜஸ்வாமிகளிடம் நமது வித்து வான்கள் பக்திகொண்டிருப்பது இயற்கை" என்று எதிர்க் கட்சிக்காரர்களையும் ஆமோதிக்கிறார் ஆசிரியர் கல்கி.

ஒருவருடைய கச்சேரி தமிழிசை அரங்கத்தில் நடை பெறவில்லை. அதைச் சொல்லிவிட்டு கல்கி கூறுவதைப் பாருங்கள்:

"அவர் கச்சேரி தமிழிசை மகாநாட்டில் நடக்கவில்லை. இதனால் தமிழிசைக்குப் பெரிய நஷ்டம் நேர்ந்துவிடவில்லை என்பதையும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். கர்நா டக சங்கீதமானது அவருடன் பிறந்து அவருடன் அழிந்து விடப் போவதில்லை. மியூஸிக் அகாடமியில்கூட அவர் சிலவருஷம் சச்சேரி செய்ய வராமலிருந்தார். அதனால் சங்கீதத்துக்குப் பெருந்தீங்கு விளைந்துவிடவில்லை.

"தமிழ்நாட்டில் எத்தனையோ சங்கீத வித்துவான்கள் சிறிதுகாலம் பிரமாதமாய் பிரகாசித்துவிட்டு பிறகு மங் கிப் போயிருக்கிறார்கள்" எனறு சொல்லிவிட்டுச் சிலரை உதாரணம் சொல்லுகிறார் கல்கி. பெயர்களை அகற்றி இங்கு சொல்லுகிறேன்.

"அவர் ஒருகாலத்தில் தமிழ்நாட்டு சங்கீதமேடையில் இணையற்று விளங்கினார். இப்போது அவருடைய சாரீரத் துடன் அவர் மல்லுக்கு நிற்பதைப் பார்க்க நமக்கு எவ்வ ளவோ வருத்தமாக இருக்கிறது. ஆனால் இதனாலும் கர் நாடக சங்கீதம் போய்விடவில்லை.

"இதனாலெல்லாம் கர்நாடக சங்கீதம்போய்விடவில்லை. அதுபோலவே (அவர்) கச்சேரி செய்யாததனால் தமிழிசை யும் பெருநஷ்டம் அடைந்துவிடவில்லை. நஷ்டம் அடைந் தவர் அவர்தான். பத்தாயிரக் கணக்கான தமிழ் மக்கள் தமது சங்கீதத்தைக் கேட்டு அனுபவிக்கும் பாக்கியத்தை அவர்தான் இழந்துவிட்டார்."

இதே வித்துவான்களை கல்கி அவர்களே இதே புஸ் தகத்தில் வேறு ஒரு பகுதியில் வெகுவாகத் தோத்தரித்துத்

தடபுடல் செய்கிறார். ஆனால் அது அவர் கட்சியை அவர்கள் ஆதரிக்க ஆரம்பித்த பிறகுதான் என்பது கவனிக்க வேண்டிய விஷயம். அந்தந்தக் காலத்துக்கு நம்பத்தக்கதாக விஷயத்தைக் கையாளுவது தானே விவாத தருமம்? இந்தத் தருமத்தை கல்கி கைப்பிடித்த நேர்மை வியக்கத் தக்கது!

சங்கீத யோகத்தில் இன்னொரு இடம்; "சங்கீத சபைகளும் டிக்கட் வைத்துக் சங்கீதக்கச்சேரி நடத்தும் வழக்கத்தைப்பற்றிச் சமீபத்தில் ஒரு வாதம் எழுந்தது. தமிழ் நாட்டில் உள்ளவை போன்ற சங்கீத சபைகளும் டிக்கட் வைத்துக் கச்சேரி நடத்தும் வழக்கமும் வட இந்தியாவிலே கிடையாது. அதாவது வெகு சமீபகாலம் வரையில் இல்லை. இப்போதுதான் தமிழ்நாட்டிலிருந்து இந்த ஏற்பாடு வடக்கே போயிருக்கிறது.

"சரியோ தவறோ, தமிழ்நாட்டுக்கே சிறப்பாக உரிய இந்த ஏற்பாடு எப்போது ஆரம்பமாயிற்று?

"ஏதோ அறுபது வருஷம், நூறு வருஷத்துக்கு உட்பட்டதாயிருக்கும் என்று இதுவரை நினைத்திருந்தேன்.

"தமிழ்நாட்டில் சுமார் ஆயிரத்து நூறு வருஷ காலமாகப் பணங்கொடுத்துப் பாட்டுக் கேட்கும் வழக்கம் உண்டு என்று சில நாளைக்கு முன்புதான் தெரிய வந்தது.

"இதற்கு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அத்தாட்சி கூறுகிறார். முதன் முதலாகத் தமிழ்நாட்டில் பணம் கொடுத்துப் பாட்டுக் கேட்டவர் யார் தெரியுமா?

"சாக்ஷாத் பரமசிவனேதான்! அதிலும் அவர் காசு கொடுத்துக் கேட்டது தமிழிசைதானும்!

'தெரிந்த நான் மறையோர்க்
கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோடிசை கேட்டும்
இச்சையாற் காசு நித்தம் நல்கினீர்!'

என்று திருவீழிமிழலைப் பதிகம் எட்டாவது பாசுரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி அருளியிருக்கிறார்"

எனக்கு இசை, தமிழ் இசை, கர்நாடக சங்கீதம், மேல்நாட்டு இசை. கீழ்நாட்டு இசை என்பதிலெல்லாம் ஈடுபாடு என்பதே கிடையாது. எல்லாம் ஒன்றுதான். இருந்தும் சங்கீதயோகம் என்கிற புஸ்தகத்தைப் படிக்கும் போது ஏற்படுகிற அனுபவம் எனக்குப் புதுசாக இருக்கிறது. இந்தக் கட்டுரைக் கோவையில் கல்கி என்கிற, இன்றைய சக்தி வாய்ந்த பத்திரிகாசிரியர் என்கிற, அவதாரத்தின் வன்மையைக் காணமுடிகிறது. அவர் வசனத்தின் பலமும் பலமின்மையும், அவர் சிந்தனையின் போக்கும், தெளிவும், சர்வஜனரஞ்சகத் தன்மையும் தெளிவாகவே இதில் காணக்கிடக்கின்றன, தனக்குப்பிடித்த விஷயத்தை வாசகனுக்கு எடுத்துச் சொல்வதில் கல்கிக்கு ஈடு, இணையெல்லாம் அவரேதான்.

# கவிதைகள்

சஞ்சீவி பர்வதத்தின் சாரல் என்று ஒரு சிறு காவியம். ஹனுமான் சஞ்சீவி பர்வதத்தைப் பெயர்த்து வந்து லட்சுமணனைப் போர்க்களத்தில் உயிர்ப்பித்தான் என்று சொல்கிற ராமாயணக் கதை பொய்க் கதை, அர்த்தமற்றது என்று சொல்ல வருகிறார் கவிஞர் பாரதிதாஸன்: அழுத்தமாகவேதான் சொல்கிறார். ஆனால் அந்தச் சிறு காவியத்தில், உலக வழக்குக்கு மாறாக, பெண் நம்பாதவளாகவும், ஆண் நம்பி அஞ்சிச் சாகிறவனாகவும் சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

வஞ்சி சொல்கிறாள்:

"ராமனெங்கே! ராமன் அருளெங்கே! சஞ்சீவி
மாமலையைத் தூக்குமொரு வல்லமை எங்கே!
இவற்றில்
கொஞ்சமும் உண்மை இருந்தால் நாம் கொத்தவரைப்
பிஞ்சுகள்போல் வாடிப் பிழைப்பதரிதாகி
அடிமையாய் வாழோமே? ஆண்மைதான் இன்றி
மிடிமையில் ஆழ்ந்து விழியோமே?"

இன்றைய தாழ்ந்த நிலையை எண்ணி விம்மிக் கொந்தளிக்கும் கவியின் குரல் கம்பீரமாகக் கேட்கிறது. சஞ்சீவி பர்வதத்தின் உச்சியில் உள்ள பச்சிலைகளைத் தேடி குப்பனும் வஞ்சியும் உண்டு விட்டார்கள். உடனே அவர்களுக்கு உலகில் பேசப்படுவதெல்லாம் காதில் விழுகிறது.

"இங்கிலாந்து தேசம் இருந்தொருவன் பேசினான்;
இங்கிருந்து இருவரும் கேட்பர்; என்னவென்றால்"

(இது இந்தியா விடுதலை பெறுமுன் நடந்த பேச் சென்று ஞாபகம் வைத்துக் கொண்டு மேலே பார்க்க வேண்டும்.)

"ஓ! என் சகோதரரே! ஒன்றுக்கும் அஞ்சாதீர்!
நாவலந் தீவு நமைவிட்டுப் போகாது!
வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி மக்கள் என்றால்
சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகை இருக்கும்;
ஆகையால் எல்லாரும் அங்கே தனித்தனிதான்.
ஏகமனதாகி அவர் நம்மை எதிர்ப்பதெங்கே?
பேதம் வளர்க்கப் பெரும் பெரும் புராணங்கள்!
சாதிச் சண்டை வளர்க்கத் தக்க இதிகாசங்கள்!
ஆட்டிச் சமூகத்தின் கண்ணவித்துத் தாமுண்ணக்
கொட்டி அளக்கும் குருக்கள் கணக்கற்றார்.
தேன் சுரக்கப் பேசி இந்து தேசத்தைத் தின்னுதற்கு
வான்சுரரை விட்டுவந்த பூசுரரும் வாழ்கின்றார்.
இந்த உளைச்சேற்றை, ஏறாத ஆழத்தை
எந்தவிதம் நீங்கி நம்மை எதிர்ப்பார்? இன்னமும்
சிந்தனைசக்தி சிறிதுமின்றி மக்களுக்குத்
தம் தோள் உழைப்பிலே நம்பிக்கை தானுமின்றி
ஊறும் பகுத்தறிவை இல்லா தொழித்துவிட்டுச்
சாறற்ற சக்கையாய்ச் சத்துடம்பைக் குன்றவைத்துப்
பொற்புள்ள மாந்தர்களைக் கல்லாக்கியே அந்தக்
கற்கள் கடவுள்களாய் காணப்படும் அங்கே.
இந்த நிலையில் சுதந்திரப் போரெங்கே?
கொந்தளிப்பில் நல்லதொரு கொள்கை முளைப்ப
தெங்கே?
தேகம் அழிந்துவிடும்; சுற்றத்தார் செத்திடுவார்;
போகங்கள் வேண்டாம்; பொருள் வேண்டாம்;
மற்றுமிந்தப்
பாமுலகம் பொய்யே! பரமபதம் என்னும்
தாழ்வகற்ற எண்ணுங்கால் சாக்குருவி வேதாந்தம்

சாதிப் பிரிவு சமயப் பிரிவுகளும்
நீதிப் பிழைகள் நியமப் பிழைகளும்
மூடப் பழக்கங்கள் எல்லாம் முயற்சி செய்தே
ஓடச்செய்தால் நமையும் ஓடச் செய்வார்
என்பேன்"

இங்கிலாந்து தேசத்தினன் கூற்ருகக் கவிஞர் பாரதி தாஸன் தன் அபிப்பிராயங்களையே இங்கு சொல்கிருர். எந்த சீர்திருத்தவாதியும் சொல்கிற மாதிரி சற்று அதிகப் படுத்தியே கூறுகிருர் என்று வைத்துக்கொள்ளலாம். இங்கிலாந்து தேசத்தவன் நம்பிக்கை இப்போது வீணுகி விட்டது. இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்துவிட்டது என்பதனுல், இந்த வரிகளில் கூறப்பட்டுள்ள அடிப்படை உண்மைகள் அழிந்துவிடவில்லை. எனினும் எந்த சீர் திருத்தவாதியின் கண்களிலும் படுவதைவிட உண்மை என்பது அதிகப்படியான விஸ்தீரணம் பரந்து கிடக்கிறது என்பதுதான் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய உண்மை.

சமீப காலத்தில் தமிழில் மட்டுமல்ல, இந்தியாவி லுள்ள பாஷைகளிலெல்லாம் மட்டுமல்ல, உலகிலுள்ள எல்லா பாஷைகளிலுமே கவிகள், அரசியல் சமூகம் முதலிய விஷயங்களில் அதிகமாகவே ஈடுபட்டுக் கவிதை புனைகிருர்கள். இன்றைக்கு உண்மையென்று கண்டு சொல்கிற உண்மையை நித்தியமான உண்மைகளுடன் பிணைத்துக் கவிகளால் சொல்ல முடிகிறது சில சமயம் என்பதுதான் அரசியல், சமூக சீர்திருத்தக் கவிகளின் முக்கியத்துக்குக் காரணம். அந்தக் கவிஞர் பரம்பரை யிலே பாரதிதாஸன் ஒருவர். அவர் கவிதையிலே ஏராள மான தார்மீகக் கோபம் நிறைந்திருக்கிறது. தார்மீகக் கோபம் நிறைந்த பாரதி, தமிழ்க் கவிதைக்கு எத்தனை வேகம் கொடுத்தாரோ, அத்தனை வேகம் பாரதிதாஸனின் கவிதைகளிலும் காணக்கிடைக்கிறது என்பதுதான் இந்தக்

கவிதைகளில் உள்ள விசேஷம். கோபப் பொருளைவிட என்னைப்பற்றிய வரையில் கோபாவேசமும் அது எடுக்கிற உருவமும்தான் முக்கியம் என்பேன்.

'ராமாயணம் பொய்க் கதை; அதை நம்புகிறவர்கள் மூடர்கள்; ஒரு சிலர் அதை வைத்துப் பொருள் பறிக்கிறார்கள் அப்பாவிகளிடமிருந்து' என்று கோபமாகக் கவிதை இயற்றவந்த கவி, அதற்கு ருஜுவாக வேறு ஒரு பொய்க் கதையைத்தான் சிருஷ்டிக்க வேண்டியதாக இருக்கிறது. "ஹனுமாராம்! சஞ்சீவி பர்வதத்தைத் தூக்கி லங்கைவரை சென்று, திருப்பிக்கொணர்ந்து, கண்ணாடிப் பாத்திரத்தைக் கல் தரைமேல் வைப்பதுபோல்' வைத்தாராம்! என்ன பேத்தல்!" என்று சொல்ல வருகிற கவியும் அதற்குச் சற்றும் பின்னிடாத ஒரு 'பேத்தல்' கதையைத்தான் சொல்லவேண்டியதாக இருக்கிறது. சஞ்சீவி மலையின் சாரலிலே இரு பச்சிலைகளாம்! அதில் ஒன்றைத் தின்றால் உலகில் எங்கும் யார் பேசுவதும் காதில் விழுமாம்! மற்றொன்றைத் தின்றால் உலகில் நடப்பதவ்வளவும் தெரியுமாம்! 'இதென்னடா ஹனுமார் காரியத்தைத் தூக்கியடிப்பதாக இருக்கிறதே!' என்று கேட்கலாம். ஆகவே, விஷயம் அப்படி முக்கியமன்று இந்தச் சிறு காவியத்தில்; கவிதைக்குக் காரணமான கோபமும், கவிதை உருவமும், அதற்குக் கவிஞர் தந்திருக்கிற வேகமும்தான் முக்கியம்.

"புல்லறிவைப் போக்கிப் புதுநிலை தேடல் வேண்டும்" என்பதிலோ, "சித்தம் சலியாத் திறன் வேண்டும்" என்பதிலோ, "மூடப் பழக்கங்கள் ... நாடாதிருக்க" வேண்டும் என்பதிலோ யாருக்கும் சந்தேகமிருக்க வேண்டிய அவசியமேயில்லை. அதை மறந்துவிட்டு,

"சஞ்சீவி பர்வதத்தின் சாரலிலே ஓர் நாளில்
கொஞ்சம் குறைய மணி நான்காகும் மாலையிலே
குப்பன் எனும் வேடக் குமரன் தனியிருந்து
செப்புச் சிலைபோலே தென் திசையைப் பார்த்தபடி

ஆடா தசையாமல் வாடி நின்றான் சற்றுப்பின்
வாடாத பூ முடித்த வஞ்சிவரக் கண்டான்" என்று
தொடங்கி,

"சாரல் அடைவோமே, காதலுக்குத் தக்க இடம்
சாரலும் அலர்மாலை நாயகியை சாரக்
குயில் கூவிக் கொண்டிருக்கும்; கோல மிகுந்த
மயிலாடிக் கொண்டிருக்கும்; கண்ணாடிபோன்ற நீர்
ஊற்றுக்கள் உண்டு; கனி மரங்கள் மிக்க உண்டு.
பூக்கள் மணங்கமழும்; பூக்கள் தொறும் சென்றுதே
னீக்கள் இருந்தபடி இன்னிசை பாடிக் களிக்கும்
அன்பு மிகுந்த அழகிருக்கும் நாயகரே
இன்பமும் நாளும் இனி"

என்று முடிகிறவரைக்கும் இந்தப் பதினாறு பக்கச் சிறு காவியத்தை வாய்விட்டு உரக்கப் படித்துக் கவிதையாக அநுபவிக்கலாம். கவிதையைப் பற்றிய வரையில் அது போதும் என்று எனக்குத் தோன்றுகிறது.

பில்ஹணீயம் எனும் வடமொழி நூலைத் தழுவி கவிஞர் பாரதிதாஸன் எழுதியுள்ள 'புரட்சிக்கவி' எனும் சிறு காவியத்திலும் இன்றைக்குகந்தது என்று கவி கருதும் ஒரு பிரசாரம் அமைந்து கிடக்கிறது. காதலர்களை ஒன்று சேரவிடாமல் தடுக்கும் மன்னவனிடமிருந்து அரசைப் பிடுங்கி மக்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள் என்பது கதை முடிவு. மக்களே ஆளும் நாட்டிலும் அநீதிகள் நடப்பதுண்டு என்பதால், இந்தமுடிவு சரியல்ல என்று சொல்லவேண்டிய அவசியமில்லை, மறுபடியும் சொல்ல வேண்டுமானால், கவியை இந்த முடிவுக்கு வரச்செய்த தார்மீகக் கோபமும், அந்தக்கோபம் எடுத்திருக்கிற கவிதை உருவமும்தான் முக்கியம் என்று சொல்லவேண்டும்.

மன்னவன் மகள் அமுதவல்லிக்குக் கவிதை செய்யக் கற்றுத்தர வந்த உயர் கவிஞன், உதாரன், மாலை சந்திரோதயத்தைக் கண்டு, கவி செய்கிறான்.

"இமையாது நோக்கினன் முழு நிலாவை!
இரு விழியால் தழுவினன்; மனத்தில் உண்டான்!
சுமை சுமையாய் உவப்பெடுக்க, உணர் வெள்ளம்
தூண்டிவிட ஆ ஆ ஆ என்றான்; வாணி
அமைத்திட்டாள் நற் கவிதை! மழைபோற்
பெய்தான்!
அத்தனையும் கேட்டிருந்தாள் அமுதவல்லி!
'நீல வான் ஆடைக்குள் உடல் மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தைக்
கோல முழுதும் காட்டிவிட்டால் காதற்
கொள்ளையில் இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்த தனிப் பூவோ நீதான்!
சொக்க வெள்ளிப் பாற்குடமோ அமுதவூற்றோ!
காலை வந்த செம்பரிதிக் கடலில் மூழ்கிக்
கனல் மாறிக் குளிரடைந்த ஒளிப்பிழம்போ!
அந்தி யிருளாற் கருகும் உலகு கண்டேன்;
அவ்வாறே வான் கண்டேன்; திசைகள் கண்டேன்,
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்ததுண்டோ?
பெருஞ்சிரிப்பாள் ஒளி முத்தோ நிலவே நீதான்?
சிந்தாமல் சிதறாமல் அழகையெல்லாம்
சேகரித்துக் குளிரேற்றி ஒளியுமூட்டி
இந்தாவென்றே இயற்கை யன்னை வானில்
எழில் வாழ்வைச் சித்திரித்த வண்ணந்தானே!"

இந்தக் காவியத்திலும் பெண்ணுக்குத்தான் முக்கியத்துவம் அளித்துக் கதையை நடத்துகிறார் கவிஞர்.

"......வந்தனள் அமுதவல்லி
இலை உனக்கதிகாரம்—இந்த
எழிலுடையான் பிழை இழைக்கவில்லை
ஒருவனும் ஒருத்தியுமாய்—மனம்
உவந்திடில் பிழையென உரைப்பதுண்டோ?
அரசென ஒரு சாதி—அதற்

கயலென வேறொரு சாதியுண்டோ?
கரிசன நால் வருணம்—தனைக்
காத்திடும் கருத்தெனில், இலக்கணந்தான்
தரும்படி அவனை இங்கே—நீ
தருவித்த வகையது சரிதானோ?
என் மனம் காதலனைச்—சென்
றிழுத்த பின்னே அவன் இணங்கினதால்
அன்பன் பிழையிலனும்!—அதற்
கணங்கெனைத் தண்டித்தல் முறையெனினும்
மன்ன, நின் ஒரு மகள் நான்—எனை
வருத்திட உனக்கதிகாரமில்லை!
உன் குடிக் கூறிழைத்தாள்—எனில்
ஊர் மக்கள் இடம் அதை உரைத்தல் கடன்!"

ஊர் மக்களுக்கு அரசன் எடுத்துரைக்கவில்லை. ஆனால் தமிழ்க் கவியான உதாரன், கொலைக்களத்திலிருந்து பேசுகிறான்:

"தமிழறிந்ததால் வேந்தன் எனை அழைத்தான்;
தமிழ்க்கவி யென்றனை அவளும் காதலித்தாள்!
அமுதென்று சொல்லுமிந்தத் தமிழ் என்னுவி
அழிவதற்குக் காரணமாயிருந்த தென்றே
சமுதாயம் நினைத்திடுமோ! ஐயகோ! என்
தாய்மொழிக்குப் பழி வந்தால் சகிப்பதுண்டோ?
உமை யொன்று வேண்டுகின்றேன் மாசில்லாத
உயர் தமிழை உயிர் என்று சாற்றுமின்கள்"

என்பது போன்ற பல அற்புதமான வாதங்களைச் சொல்லிப் புரட்சிக் கவி புரட்சி விளைவிக்கின்றான். "நலிவில்லை!" நலமெல்லாம் வாய்ந்ததங்கே!" என்று காவியம் முடிகிறது.

மற்றும் பல கவிதைகளிலும் காணக்கிடக்கிற வேகத்தையும் அழகையும் சொல்ல இங்கு இடமில்லை. "குலுக்கென்று சிரித்த முல்லை"யையும், "முளைத்த கள்ளியினைக்

கனல் மொய்த்துக் கரியாக்கி விளைத்த சாம்பலைப் போய்—இனி மேலும் உருக்கிடவே கொளுத்திடும் கானலை"யும், "தமிழின் விந்தையை எழுதத் தரமோ" என்கிற வரிகளையும், "வீறிட்ட காதலுக்கும் வேலி கட்டலுண்டோ?" என்பதையும், இதுபோன்று படித்து ஆனந்திக்க வேண்டிய இடங்கள் பற்பலவுண்டு **பாரதிதாஸன் கவிதைகளிலே.** பாரதிதாஸன் என்ற கவிஞர் கனக சுப்புரத்தினம், "பாரதியாரின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்தவர்" என்று சுப்பிரமணிய பாரதியாராலேயே தமிழுலகுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டவர். அந்தக் கவிதை மண்டலத்தின் புகழ் மங்காத வகையிலேயுள்ள பல பாடல்களை பாரதிதாஸன் கவிதைகள் முதல் தொகுப்பிலே காணலாம்.

21. கு. ப. ராஜகோபாலன் சிறுகதைகள்

# கனகாம்பரம்

கு. ப. ராஜகோபாலனின் கதைகளைப் படிக்கும்போது அதிகமான கவனத்துடன் படிக்காத வாசகர்களுக்கும் கூட சிறப்பாக மூன்று விஷயங்கள் தெளிவாகத் தெரியும். (ஒன்று) அவர் கையாண்ட விஷயங்களில் பல மிகவும் நுணுக்கமானவை; மென்மையானவை. ஒரு சின்ன விஷயத்தை எடுத்துக் கடைசிவரை பிடித்துக்கொண்டு சென்று பார்க்க அவருக்குத் தெரிந்திருந்தது, 'ஆஹா' என்று எதையும் மிகைப்படுத்திச் சொல்லி, அமர்க்களப் படுத்தாமல், ஒன்றுக்கொன்றுள்ள பரிணமத்தைக் குறைத்தோ கூட்டியோ சொல்லாமல் உள்ளபடிச் சொல்லி, முக்கியத்துவம் தர அவருக்கு ஒரு சக்தியிருந்தது. (இரண்டு) உள்ளத்தில் விஷயத்தை வாங்கச் சக்தியிருந்தது போலவே, அதைப் பூரணமாக வெளியிட்டுச் சொல்லவும் அவருக்குச் சக்தியிருந்தது. விஷயத்தில் ஒரு கோடியை மட்டும் லேசாகக் காட்டிவிட்டு, மற்றதை நீயே கற்பனை செய்துகொள் என்று பந்துபோல வாசகனிடம் விட்டுவிடுபவர் அல்ல அவர். முழுவதும் சொல்வதற்குப் பாடுபட்டார். சொல்வதைச் சாத்தியமாக்குகிற அளவுக்கு அவரிடம் ஒரு வார்த்தை நயமும், விஷய நளினமும், உழைப்புத் திறனும் இருந்தது. (மூன்றாவதாக) அவர் இந்தத் தலைமுறையைச் சேர்ந்த எல்லோரையும் போலவே ஒரு ஏக்கத்துக்கும் நிறைவுக்கும், ஒரு லக்ஷ்ய வாதத்துக்கும் நடைமுறை வாதத்துக்கும் இடையே ஊசலாடிக்கொண்டிருந்தார். ஆகவே, அவருடைய கதைகளின் பொதுப்படை

யான நோக்கு எல்லோருக்குமே ரஞ்சகமாக அமைந்தது என்பது பிரசித்தம்.

'அவர் இந்த மாதிரி விஷயங்களை எடுத்துக் கையாளுவது தமிழுக்குத் தகாது' என்று பல வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு விவாதம் எனக்கு ஞாபகம் இருக்கிறது. கலைஞன் எந்த விஷயத்தை எடுத்துக் கையாளலாம் என்று விதி ஏற்படுத்த முயன்ற அரசியல் வாதிகளை எண்ணும் போது, கலையின் உண்மைத் தத்துவத்தை அறிந்தவர்களுக்குச் சிரிப்புத்தான் வரும். நடைமுறையிலுள்ள எத்தனையோ சங்கடங்களைப் பொருட்படுத்தாதது மாதிரித் தான் இதையும் பொருட்படுத்தாதிருக்கக் கற்றுக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லவேண்டும். கு. ப. ராஜகோபாலன் விஷயத்தில் இப்படியெல்லாம் விவாதம் நடந்ததால், அது எதிர்மாறான பலனையே தந்தது என்று சொல்லவேண்டும். ஒரு பிடிவாதத்துடன் அவர் கலைஞனுக்கே உரிய ஒரு திறமையுடன், 'அந்த மாதிரி' விஷயங்களையே பற்றிப் பல கதைகள் எழுதினார். கலைஞர் தவிர மற்றவர்கள் எல்லோரும் அவருக்குச் சட்டங்கள் விதிப்பதில் ஈடுபட்டிருந்தனர்; கதாசிரியர் கதைகளை உருவாக்குவதில் ஈடுபட்டிருந்தார். கதைகள் நிற்கின்றன. விவாதத்தில் கர்ஜிக்கப்பட்ட பல விஷயங்கள் வாசகர்களின் மனசிலிருந்து மறைந்துவிட்டன.

கனகாம்பரம் என்கிற தொகுதியில் திரை என்ற ஒரு கதை. கல்யாணமான புதுசில் தன் கணவனுக்கு மனைவி கடிதங்கள் எழுதுகிறாள். ஆர்வத்துடனும், உணர்ச்சியுடனும் எழுதுகிறாள் மனைவி. ஆனால், பல மாதங்களுக்குப் பிறகு அவன் வேட்டகம் வந்தபோது, அவள் வந்து அவனைப் பார்க்கவில்லை. இரண்டு நாட்களாகிவிட்டன.

"இரண்டாவது நாள் இரவு எட்டுமணி. தூரத்தில் கோவிலிலிருந்து சைத்ரோத்ஸவத்தின் கொட்டு முழக்குச்

சப்தம் கேட்டது. தெருவில் ஸ்திரீகள் கும்பல் கும்பலாகக் கோவிலுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். ஜன்னல் வழியாக உள்ளே விழுந்த சந்திரிகை, அவன் ஹிருதயத்தை வலைபோட்டு இழுப்பது போல இருந்தது...

"அன்றிரவாவது கட்டாயம் ராஜம் தன்னிடம் வருவாள் என்று எண்ணினான். மத்தியானமே வேடிக்கையாக மைத்துனனைப் பார்த்து, 'உன் அக்கா இந்த ஊரில்தானே இருக்கிறாள்?' என்று கேட்டான். அதைக் கேட்டுக் கொண்டிருந்த அவன் மாமியார்கூடக் கொஞ்சம் பதறிப் போய், ஏதோ குசுகுசுவென்று யாருடனோ பேசினாள். யாருடனோ என்ன, அவளுடன்தான்!...

"கீழே வீணை மீட்டும் சப்தம் கேட்டது. சற்று நேரத்திற்கெல்லாம் சங்கராபரணத்தில் 'தாரி சூசு சின்னதி நீது பிரியா' என்ற ஜாவளியை யாரோ பாடிக்கொண்டே வாசித்தார்கள். வேறு யார்? அவள்தான்!

"'உன் காதலி உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்; உன் வழி நோக்கிக் கொண்டிருக்கிறாள்' என்று ஆரம்பித்த அந்தப் பாட்டு, படுக்கையுள்ளின் அலங்காரத்தை மனோகரமாகச் சித்திரித்தது.

"ஆகா! நல்ல ரஸிகையாகவல்லவா இருக்கிறாள் ராஜம்! ஏன் இருக்கமாட்டாள்? அவளுடைய கடிதங்களே அவ்வளவு ஜீவன் கொண்டிருந்தனவே...

"எழுந்து கீழே இறங்கிப் போனான். முற்றத்திலிருந்த மாடிப் படியின் உச்சியில் நின்றுகொண்டு, கூடத்தைப் பார்த்தான். அங்கே கையில் வீணையுடன் உட்கார்ந்திருந்தாள்! ராஜம் அல்ல; அவள் தமக்கையாகத்தான் இருக்க வேண்டும். ஆமாம். அவள் பிறந்த வீட்டில் இருப்பதாகத்தான் சொன்னார்கள். ஆனால்—அவள்—விதவை; சமீபத்தில், ஒரு வருஷத்துக்கு முன்பு கணவனை இழந்தவள். பாவம்! அவள் கதை ஒரு சோக நாடகம்...புருஷன் ஒரு குடிகாரன்; ஈரல் வீங்கி இறந்தான்...

"அவளா வீணை வாசித்தது! ஏன் அப்படி வாசித்தாள்? வீட்டில் மற்ற எல்லோரும் எங்கே? கோவிலுக்குத்தான் போயிருக்க வேண்டும்—ராஜம்கூட! ஒருவரும் வீட்டில் இல்லாதபொழுது, ஏன், இவள், அவன் கேட்கும்படி வீணையை எடுத்து வைத்துக் கொண்டு, இப்படி உருக வேண்டும்?

"திடீரென்று அவன் சறுக்கி விழுந்தான். ஒரு வேளை! கடிதங்களெல்லாம்—இவள் எழுதினவைதாமோ? ராஜத்தின் பெயரை வைத்து, இவள்தான் அப்படி உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் முறையில் எழுதினளோ?...

"மடமடவென்று அவன் மாடிப் படி இறங்கினன். வீணையும் கையுமாக உட்கார்ந்திருந்த ஸரஸ்வதி சட்டென்று வீணையைக் கீழே வைத்துவிட்டு எழுந்திருந்தாள், உள்ளே போய் மறைந்துகொள்ள. அதற்குள் அவன் அருகில் வந்துவிட்டான். ஒன்றும் செய்யாமல் அப்படியே திகைத்து நின்ருள்...

'நீதான கடிதங்கள் எழுதியது?'

'இல்லை...'

'உண்மையைச் சொல்லிவிடு.'

'அதாவது அவள் சொன்னள்...நான் எழுதினேன்' என்று அவள் இழுத்தாள். 'அவள் உள்ளம் சொல்லிற்று. நான் பார்த்து எழுதினேன்'...

'மாப்பிள்ளை! நீங்கள் இங்கு நிற்கக்கூடாது. மாடிக்குப் போய்விடுங்கள். அவர்கள் வந்துவிடுவார்கள். குடி முழுகிப் போகும்' என்று கெஞ்சினள் பிறகு.

'என்னை ஏன் கூப்பிட்டாய்?'

'கூப்பிட்டேன? ஐயோ! இல்லையே...இல்லை, கூப்பிடவில்லை! பிசகு'...

"அவள் குற்றவாளியைப் போல நடு நடுங்கினுள் உணர்ச்சி மேலிட்டு அழ ஆரம்பித்தாள்...

'ஸரஸ்வதி! பயப்படாதே அம்மா. நீ ஒன்றும் குற்றம் செய்யவில்லை. உண்மையாகக் கட்டைபோலிருந்த என்னைச் செப்பனிட்டு வாத்தியமாக்கிவிட்டாய்!'

'இல்லை? இல்லை! அப்படிச் சொல்லாதேயுங்கள். ராஜந்தான்! நீங்கள் அவள் சொத்து. அவள்தான் உங்களை உருக்க உரிமை பெற்றவள். அவள் எழுதியதாகவே எண்ணுங்கள்!''

'இந்தப் பாட்டு'

'அவள் பாடியதுதான். தேர்ச்சியிருந்தால், அறிந்திருந்தால், அவளே இப்படிப் பாடியிருப்பாள்...'

"...'நான்—எனக்குக் கையேது எழுத? வாயேது பாட? அவள்தான் என் கை, அவள்தான் என் வாய், அவள் மூலந்தான் எனக்கு வாழ்க்கை. அவள் மூலந்தான் என் உயிர்...'

"கோவிலுக்குப் போயிருந்தவர்கள் திரும்பி வந்து வாயிற் கதவைத் தட்டினார்கள்.

"அவன் மாடிக்குப் போனான். அவள் உள்ளே போனாள்.

"இருவருக்கும் இடையில் மறுபடியும் திரை வந்து கூடிற்று. ஆனால், திரை என்ன அறியமுடியும்?

"ராஜம்! மாடிக்குப் போ!' என்றாள் ஸரஸ்வதி சற்று நேரம் கழித்து."

இப்படி முடிகிற திரை என்னும் கதை. அற்புதமான ஒரு இந்திய வாழ்க்கைத் தத்துவத்தை வெகு லேசாக எடுத்துக் காட்டி விடுகிறது. இந்தக் கதையில், ஆரம்ப முதல் முடிவுவரை ஒரு வார்த்தைகூட மிகையாக இருப்பதாகக் கூற முடியாது. அசம்பாவிதமோ, அவநம்பிக்கை தரக்கூடியதோ எதுவும் இங்கில்லை. மனைவியின் உருவம் கதைக்குள் வராமலே சக்தி வாய்ந்ததாகி விடுகிறது. கு. ப. ரா. வின் சிறந்த கதைகளில் இது ஒன்று. இதே மாதிரியான அதலபாதாள ஓரத்திலேயுள்ள விஷயங்கள்

பலவற்றை வைத்து, அவர் லாகவமாக வேறு பல கதைக ளும் எழுதியிருக்கிறார். இத் தொகுதியில் அவற்றில் சில இடம் பெற்றிருக்கின்றன. கனகாம்பரம், தாய், பெண் மனம், புதிர், உயிரின் அழைப்பு, எதிரொலி முதலிய கதைகளில் வார்த்தைகளுக்கு அடங்க மறுக்கிற சில விஷயங்களை வார்த்தைகளில், சாதாரண வார்த்தைகளில், அடக்கிக் காட்டுகிறார் கு. ப. ராஜகோபாலன்.

இன்னொரு ரகத்தில் பண்ணைச் செங்கான் என்கிற கதையை மாதிரி பார்க்கலாம். "'இதோ இந்த மாமரம் ஒங்க பாட்டன் மவராசன் வச்ச மரம். பளம், கல்கண்டு கணக்கா ருசியா இருக்கும்! இந்தத் தென்னமரம் அவரு கையாலே போட்ட நெத்று. இப்படித் தடத்தோடேயே வாங்க, வரப்புலே நடந்து பளக்கமில்லே, பட்டணத்துப் புள்ளே' என்று வேகமாகப் பேசினான் செங்கான்...

'அம்மா சௌக்யமாயிருக்கா? நம்ம கொளந்தே நல்லா இருக்கா? ஏன், ஒருவாட்டி அம்மாளை கூட்டியாந்தா என்ன?'

"...'பாவம்! வருஷத்துக்கு ஒரு முறை வருகிறீர்கள். உங்களுக்கு இந்த ஊர் நிலைமை எப்படித் தெரியும்? கிழவன் ஏதாவது குத்தகை தருகிறானா இல்லையா? ஊரெல்லாம் குத் தகை ஏறிப் போச்சு. உங்களை மட்டும் அவன் ஏமாற்று கிறான்!'"

ஊராருக்கு இவர் பண்ணைச் செங்கானிடமிருந்து குத்தகையை மாற்றிவிட வேண்டுமென்று விருப்பம். ஒருவர் வேறு ஒருவன் பெயரைப் போட்டு லாபகரமான குத்த கைச் சீட்டே எழுதிக்கொண்டு வந்து விடுகிறார். பண் ணைச் செங்கான் கேட்கிறான்: "'ஏஞ்சாமி, என்னெ விட்டு நெலத்தே மாத்தணும்னு ரோசனெயா? என் உசிரிலே இன்னொருத்தன் அதுலே ஏறு பிடிக்கவா? முடியுமா எங்க ளுச்சியும்? என் நெலத்துலே எவன் நொளைவான் பார்க்க றேன். அந்த மண்ணுத்தான் அவனுக்கு வெளெய்வாளா?"

இந்தப் பண்ணைச் செங்கான் பட்டணத்திலே வேலை பார்த்துக்கொண்டு, கொஞ்ச நிலத்தைக் குத்தகைக்கு விட்டுக் கொண்டு இருக்கிறவர்களுக்கெல்லாம் நன்கு பழக்கமான ஒரு பாத்திரம்தான். அவனை நம் முன் உயிரோடு கொணர்ந்து நிறுத்தியிருக்கிறார் ஆசிரியர்.

நூர் உன்னிஸா என்று ஒரு கதை. மிகவும் சாதாரணமான ஒரு விஷயத்தை எவ்வளவு உணர்ச்சி வெள்ளமாகச் செய்து காட்டியிருக்கிறார் கு. ப. ராஜகோபாலன் என்று எண்ணுதிருக்க முடியாது, இந்தக் கதையைப் படிக்கிற யாரும் "என் ஹ்ருதயத்தின் நிலைமையை அவள் அறிவாளோ? முடியாது. பூவின் அவா மணமாக வெளியேறி உணர்வைத் தாக்குகிறது. நினைவில் புறப்படும் அலை எப்படி அவள் ஹ்ருதயக் கரையில் போய் மோத முடியும்? ஸாத்தியமில்லை." ஆனால், அது ஸாத்தியமானதுதான் நூர் உன்னிஸாவின் கதை. "'நாமிருவரும் இவ்வுடலில் ஸதிபதிகளல்ல எப்போதும். சரீர இச்சை வேண்டாம் நமக்கு. பூர்ணமாக நினைவு ஆகாசத்தில் ஜொலிக்கும் சுக சந்திரனுக்குக் களங்கமுண்டாக்காதிருப்போம்! சரிதானே' என்று எழுதியிருந்தாள் உன்னிஸா. "அவ்வொளி மயக்கத்தில் அவளே மதியுருவுடன் வந்து என்னிடம் வாக்கு வாங்குவது போலிருந்தது. என் மன மோஹினியின் கட்டளைப்படி நான் உலக வழிகளில் திரிந்து வருகிறேன். நான் செய்யும் காரியங்களிலும் நான் நினைத்த மாத்திரத்தில் என் முன் தங்கப் பதுமைபோல வந்து நின்று என்னை உத்ஸாகப்படுத்துகிறாள். என் சோர்விலும் என் மனத்தின் முன் குதித்துக்கொண்டு வந்து, என்னை ஆற்றுகிறாள்" என்று முடிகிறது கதை.

புருஷனுக்குப் போட்டியாக மனைவி ஒரு கதையைச் சிருஷ்டிக்கிறாள். நடந்த கதை என்கிறாள். அம்மா சொன்னாள் என்கிறாள். ஒரு ஜமீன்தார் கோயில் பூசாரியை ஊருக்கு ஏதோ காரியமாக அனுப்பிவிட்டு, அவன்

